# கலித்தொகை வசனம்

ஆக்கியோன் :

திரு. ந. சி. கந்தையா பிள்ளை

(தமிழகம், பத்துப் பாட்டு வசனம், தமிழர்
சரித்திரம், கலிங்கத்துப்பரணி வசனம்
முதலியவும் பிறவுமாகிய பல
நூல்களின் ஆசிரியர்)



ஒற்றுமை ஆபீஸ்

நெ. 8, வியாசராவ் தெரு

தியாகராயநகர்

மதருஸ்

1941

[விலை: ரூபா 1—8—0

# முகவுரை

சங்க காலப் புலவர்கள் பாடிய பாடல்கள் பாட்டானும் அளவானும் வகையானும் வெவ்வேறு நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அந்நூல்கள் எட்டுத் தொகை பத்துப்பாட்டு என்பனவாகும்.

எட்டுத் தொகை நூல்களாவன:

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை."

என்பனவாகும்.

தொகை நூல்கள் தமிழ்ச் சங்கத்தின் இறுதிக் காலத்திற் றொகுக்கப்பட்டன வென்பது ஐதீகம். இந்நூல்களிற் சிலவற்றைத் தொகுத்தவர் தொகுப்பித்தவர்களின் பெயர்களும் கூறப்படுகின்றன.

கலித்தொகை நூலைத் தொகுத்தவர் ஆசிரியர் நல்லந்துவனார் என்று நச்சினார்க்கினியர் கடவுள் வாழ்த்துச் செய்யுள் உரையிற் குறிப்பிட்டிருக்கின்றார். இன்னும் இவ்வாசிரியர் நெய்தற் கலி 25-ம் பாடல் உரையில் "தம்

*"பாலைத் திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனார் கோத்தார்"

பேராற்வு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுட் செய்தார்" எனக் கூறி யிருக்கின்றார்.

இவ்வுரைகளை ஆதாரமாகக் கொண்டு இந்நூல் முழுவதையும் ஆசிரியர் நல்லந்துவனார் ஒருவரே செய்தார் என ஒரு சாரார் கூறுவர். இன்னொரு சாரார் அற்றன்று நல்லந்துவனார் கடவுள் வாழ்த்தும் நெய்தற் கலியுமே செய்தார்; ஏனைய பாடல்களைப் பிறர் செய்தனர் என மொழிவர்.

கலித்தொகை முதற்பதிப்பு, இராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களால் 1887-ம் ஆண்டில் வெளியிடப்பட்டது. அக்காலத்து இந்நூற் பதிப்பாசிரியர் ஒப்பு நோக்கிய ஏட்டுப் பிரதிகள் பலவற்றுள் ஒன்றிலேனும் இந்நூலை ஆக்கிய புலவர்களின் பெயர்களைக் குறிக்கும் செய்யுளோ உரையோ காணப்படவில்லை. பிற்காலத்தில்,

> "பெருங் கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
> மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழன்
> நல்லுருத் திரன்முல்லை நல்லந்துவ னெய்தல்
> கல்விவலார் கண்ட கலி"

என்னும் வெண்பா ஒன்று வெளிப்பட்டது. இவ்வெண்பாவை ஆதாரமாகக் கொண்டு, பெருங்கடுங்கோன், கபிலர், மருதனிள நாகனார், சோழன் நல்லுருத்திரன், நல்லந்துவனார், ஆகியோர் கலித்தொகையின் ஒவ்வோர் பகுதியைச் செய்தனர் என்று வழங்குகின்றது. இச் செய்யுளை ஆதாரமாகக் கொள்வது தவறென்றும் அது பெயர் அறியப்படாத ஒருவராலோ அண்மையில் எழுதப்பட்டதாகும் என்றும் ஆராய்ச்சியாளர் துணிகின்றனர். கலித்தொகைப் பாடல்களிற் பல, ஒன்றையொன்று பார்த்துச் செய்யப்பட்டன போலவும் சொன்னதையே திரும்பச் சொல்வனவாகவும்

காணப்படுதலின் அவற்றை எல்லாம் ஒரு புலவரே செய்தாரெனல் பொருந்தாது.

கலித்தொகை என்பது பல வேறு காலங்களிற் பலராற் பாடப்பட்ட செய்யுட்களின் தொகுப்பாகும். பரிபாடலொழிந்த ஏனைய சங்க நூல்களைப் பயில்வார்க்குக் கலித்தொகை பிற்பட்ட நூலாதல் தெற்றென விளங்கும், இறையனார் அகப்பொருள் உரையில் கலித்தொகை, தொகை நூல்களுள் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது. இறையனார் அகப்பொருள் உரை கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பிந்தியதாகாது. இந்நூலின் காலத்தைச் சிலப்பதிகார காலத்தது என்று கூறுதல் பிழையாகாது. சிலப்பதிகாரம் மணிமேகலை நூல்களில் புராணக் கதைகள் வர ஆரம்பித் திருத்தலைக் காணலாம். சிலப்பதிகார காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி. புராண மதம் கி. பி. 5-ம் நூற்றாண்டு வரையில் தலையெடுத்ததென ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

காமன் கிரேக்க தெய்வமென்றும் அத்தெய்வத்தைப் பற்றி உரோமரும் இந்திய ஆரியரும் கிரேக்கரிடமிருந்தும், தமிழர் ஆரியரிடமிருந்தும் அறிந்தனரென்றும் சரித்திரக்காரர் கூறுகின்றனர்.

*“மீனேற்றுக் கொடியோன்” (பாலை 26) “காமன்கொடி” (மருதம்-19) “மருதம்-19) “காமனார்தம் செலவு (மரு 29) “காமனும் படையிடுவனப்பு” (முல்-8) “காமன் தானையால் வந்து படை (முல் 22) நெடியோன் மகன் (முல் 23.) “சுறாக்கொடியோன் கொடுமை” “காமன் கணை” (நெய். 30) கிரேக்கர் ‘இரோஸ்’ என்றும் உரோமர் ‘கியூபிட்’ என்றும் ஆரியர் மன்மதனென்றும் தமிழர் காமன் என்றும் இத்தெய்வத்தை அழைத்தனர்

கலித்தொகை, காமனைப்பற்றியும் அவன் தம்பி சாமனைப்பற்றியும் அவன் கொடி, கணை, ஊர்திகளைப் பற்றியும் பலவிடங்களிற் கூறுகின்றது. காமன் திருமாலின் மகனென்றும் ஓரிடத்திற் கூறப்பட்டுள்ளது.

இந் நூலிலுள்ள செய்யுட்களை நோக்குமிடத்து இந் நூலிலுள்ள பாட்டுகளை 150 ஆக்குவதற்காகத் தொகுப்பாசிரியர் பலவகைக் கிளைபெருந்திணைச் செய்யுட்களை வலிந்து இந் நூலிற் சேர்த்திருக்கின்றாரென்று விளங்கும். இதற்கு உதாரணம் நெய்தற்கலியின் ஈற்றில் வந்துள்ள சில செய்யுட்களாகும்.

இந் நூல் ஏனைய சங்க நூல்களைவிடக் காலத்திற் பிற்பட்டதாயினும் பல்லிடங்களிற் பொருள்விளங்கக் கோடற் கருமையுடையது. "இம் மகான் இதற்கு உரை எழுதிலையாதொழியின் இந் நூலைப் படித்துணர்தல் இக்காலத்தார்க்கு இயையாது. ஆகவே இத்தமிழ் நமக்கு நச்சினார்க்கினியர் இட்டதோர் பிச்சையென் றுணர்க" என்று இந் நூலின் முதற் பதிப்பாசிரியர் கூறியுள்ளார்.

நச்சினார்க்கினியர் இந் நூலுக்குச் சொல்லுக்குச்சொல் உரை எழுதாது பொருளைத் திரட்டி விரித்துக் கூறிவிளங்க வைத்திருக்கின்றனர். நச்சினார்க்கினியரின் உரையைப் பின்பற்றிக் கலித்தொகையிற் கூறப்பட்ட பொருளினைத் தொடர்பாக விளங்கிக்கொள்வது எல்லார்க்கும் எளிதன்று. யாம் முன் எழுதியுள்ள சங்க நூல் வசனங்களைக் கற்றோர், எல்லாச் சங்க இலக்கியங்களையும் இலகுவான வசனநடைப் படுத்தித் தனியாக **சங்க நூலாராய்ச்சி** எனவொன்றும் வெளியிட வேண்டுமென்று தூண்டி வருகின்றனர். அவற்றை

எல்லாம் ஓர் ஆண்டிற்றுனே முடிக்கும் வல்லமையை அளிக்குமாறு எல்லாம்வல்ல இறைவன் றிருவருளை வேண்டுகின்றேன்.

நவாலியூர்
1—4—41

இங்ஙனம்
ந. சி. கந்தையா



# நச்சினார்க்கினியர்

*"பச்சைமா லனைய மேகம்
பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினாற் றிசையு முண்ணு
மமிழ்தென வெரிநா வெச்சில்
மெச்சிநா ளுணும் விண்ணோர்
மிசைகுவர் வேத போத
னச்சினார்க் கினிய னெச்சி
லருந்தமிழ் நுகர்வர் நல்லோர்."

புலவர் உச்சிமேற் கொள்ளும் நச்சினார்க்கினியர் பாண்டி வள நாட்டிலே மதுராபுரியிற் பிறந்தவர்; அந்தண மரபினர்; பாரத்துவாச கோத்திரத்தினர்; சைவ மதத்தினர்.

இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், ஆளவந்த பிள்ளை ஆசிரியர் முதலிய உரையாசிரியர்களால் இவர் உரையில் எடுத்துக் கூறப்படுகின்றமையின், இவர் அவர்கள் காலத்தவர் அல்லது பிற்பட்டவர் ஆதல் வேண்டும். பரிமேலழகரும் இவரும் ஒரே காலத்தவர்களென்றும் கருதப்படுகின்றனர். பரிமேலழகர் கொள்கையை இவர் திருமுருகாற்றுப் படை உரையில் மறுத்திருக்கின்றார்.

திருமுருகாற்றுப்படை பதினோராந் திருமுறையின் ஒரு பகுதியாயுள்ளது. திருமுறை நம்பியாண்டார் நம்பி

---

*இதன் பொருள்: பச்சைமால் போன்ற மேகம் கடல் நீரைப் பருகி உமிழ்ந்த எச்சிலாகிய மழை நீரை நாற்றிசைகளிலுமுள்ள உயிர்கள் அமிழ்து எனும்படி விரும்பி யுண்ணும்; தீயின் எச்சிலாகிய ஆவுதியைத் தேவர்கள் விரும்பித் தினந்தினம் நுகர்வர்; அறிவுடையோர் அந்தணராகிய நச்சினார்க்கினியரின் எச்சிலாகிய அரிய தமிழை நுகர்வர்.

யாரால் வகுக்கப்பெற்றது. நம்பியாண்டார் நம்பியின் காலம் பதினோராம் நூற்றாண்டென்பர். திருமுருகாற்றுப் படை பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளதை அவர் கூறவில்லை. ஆகவே, நச்சினார்க்கினியர் திருமுறை வகுப்பதற்கு முன்னிருந்தவராதல் வேண்டும். இன்றேல் திருமுருகாற்றுப்படை திருமுறையுட் பிற்காலத்துச் சேர்க் கப்பட்டதாதல் வேண்டும். உரை ஆசிரியர்களின் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கும் பதினான்காம் நூற்றாண் டுக்கும் இடையிலென இக்கால ஆராய்ச்சியாளர் கூறுவர்.

பத்துப்பாட்டு, தொல்காப்பியம், கலித்தொகை, சீவக சிந்தாமணி, குறுந்தொகையிற் பேராசிரியர் பொருளெழுதா தொழிந்த இருபது செய்யுள் முதலிய நூல்களுக்கு இவர் உரை செய்தனர். இதனைப், பின்வரும் வெண்பா விளக்கு கின்றது.

“ பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ் — சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே ”

இவர் சீவகசிந்தாமணிக்கு முதன் முறை ஓர் உரை எழுதினர். அக்காலத்துப் புகழ்பெற்றிருந்த சைன வித்து வான்கள் அவ்வுரையை அங்கீகரித்திலர். அதுகண்டு இவர் அருகத நூல்கள் பலவற்றையுங் கற்றுற ஆராய்ந்து இரண் டாவது ஓர் உரை எழுதி அவர்களுக்குக்காட்ட அவர்கள் உற்றுநோக்கி வியந்து அவ்வுரையை அங்கீகரித்துக் கொண் டனர் என்று சைனர் கூறுவர்.

இவர் தொல்காப்பிய உரை முதலிய வற்றில் வேதம் வேதாங்கம் முதலிய நூல்களிலிருந்தும், பல உரைகளிலிருந்

தும் பற்பல பொருள்களை எடுத்து ஆங்காங்கு நன்குகாட்டிப் போகின்றனர். அதனால் இவர் வடமொழியிலும் மிக்க பயிற்சி யுடையவரென்று சொல்லுவதுடன் பலவகையான கலைகளிலும் வல்லுநரென்று சொல்ல இடமுண்டு.

இவர் காலத்தில் பரிமேலழகர் உடனிருந்தாரெனக் கூறுவோர் "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே உடம்போ டுயிரிடை நட்பு" என்னும் குறளில் 'குடம்பை என்பதற்கு நச்சினார்க்கினியர் கூண்டு எனவும், பரிமேலழகர் முட்டை எனவும், பொருள்கூறினர் எனவும், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் உரையைப் புகழ்ந்தனரெனவுங் கூறுவர்.

* பாற்கடல்போற் பரந்த நல்ல நூல்களின் உயர்ந்த பொருள்களை நுண்ணிதாகக் கற்றுணர்ந்த குற்றந்தீர்ந்த கேள்வியுடைய புலவர்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள் பொதிந்த நூல்களைச் செய்தனர். நச்சினார்க்கினியர் அந்நூல்களை யெல்லாம் துறைபோகக் கற்றறிந்த சிந்தையுடையவர்.

எழுத்தும் சொல்லும் பொருளுமாகிய மூன்றும் இழுக்கின்றி அமைந்த திருந்திய பழைய புகழுடைய தொல்காப்பியம் என்னும் ஆழ்ந்த கடற்பரப்பை நாவாய் கொண்டு கடந்து பெரிய கரையை அடைதலரிது. அதனைக் கற்றுக் கரைகாணமாட்டாத கல்லா மாந்தர் கற்றுக் கரையேறுதல் வேண்டியும், நல்ல அறிஞர் விரும்புதல்வேண்டியும், மறுவுங் குறையுமின்றிக் கதிருடைய கலை நிறைந்த முழுமதிபோல, இவர் காண்டிகை உரை செய்தார்; பண்டையோர் புகழ்ந்த நூல்களை ஆராய்ந்து சான்றோர் பாடிய தண்ணிய தமிழின் சுவையைக் கற்போர் விளங்குமாறு பத்துப்பாட்டுக்குத் தெள்ளிய உரை எழுதினார். கடல் சூழ்ந்த உலகில் அறிவுடையோர் பயிலுங் கலித்தொகைக் கருத்தினை விளக்கியும், உள்ளுறை உவமம் ஏனையுவமம் உரிப்பொருள் மெய்ப்பாடு

* இது நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரம் என்றவும் செய்யுளின் வசன நடை.

வினைமுடிவு முதலியவற்றைக் காட்டியும் யாவரும்போற்ற இனிய உரை எழுதுகின்றார்.

இவர் உலகம் புகழ்ந்து கொண்டாடும் சிந்தாமணிக்குத் திருத்தக்கதேவரின் கருத்து இதுவென நுண்ணுரை செய்த புலமையுடைய ஆசிரியர்; பேராசிரியர் உரை எழுதா தொழிந்த குறுந்தொகையின் இருபது பாடல்களுக்கும் உரைசெய்த புகழமைந்த மறையோர்; எட்டுத்திசைகளி லும் புகழ்விளங்க, வண்டு ஒலிக்கும் சோலையுடைய மதுரா புரியிற் றோன்றிய ஆசிரியர். பாரத்துவாசி கோத்திரத் திற் றோன்றியவரும், நான்மறை துணிந்து கூறும் நற் பொருளாகிய ஞானம் நிறைந்தவருமாகிய சிவச்சுடர்; தனக்குத்தானே ஒப்பாகிய தன்மையும் மெய்ம்மையுமுடைய நச்சினார்க்கினியன் என்னும் பெயரோர். இருவினைகளையும் போக்கும் அருவியுடைய பொதிய மலையிலிருக்கும் குறு முனிவர் ஆராய்ந்த தமிழ் விளங்கத் தோன்றிய அவர் புகழ் இவ்வுலகில் ஊழிகாலம் விளங்குவதாக.

“ எவனூல வாயிடைவந் தமுதவா
யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன் பண்டைப் பனுவல்பல விறவாது
நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம உபகாரி யெவ
னச்சி னார்க்கினிய னெனும்பேராளன்
அவன்பாத விருபோது மெப்போது
மலர்கவென தகத்து மன்றே ”

(இ-ள்) எவன் மதுரையிற் பிறந்து அமுதவாயன் என்று சொல்லப்பெற்றோன்? எவன் பழைய நூல்கள் இறந்து போகாது நிலவ உரையெழுதி அளித்தோன்? எவன் பெரிய உபகாரி? எவன் நச்சினார்க்கினியன் எனும் பெயருடையோன்? அவனது பாதங்களாகிய இருமலர்களும் என்னகத்து எப்பேதும் மலர்வனவாக.

# கலித்தொகை வசனம்

## * கடவுள் வாழ்த்து

ஆறு அங்கங்களையும் அறியும் அந்தணருக்கு அரிய வேதங்கள் பலவற்றை அருளிச் செய்தவரும், தெளிந்த கங்கையின் நீரைச் சடையிலே அடக்கியவரும், முப்புரங் களில் தீயைச் செலுத்தியவரும், வாக்குக்கும் மனதுக்கும் எட்டாமல் நிற்கின்றவரும், வேகமுடைய காளியின் பிறங் கிடாத போரினையும், நீலமணிபோலும் கழுத்தினையும்

---

* சங்க காலத்தில் கடவுள் வாழ்த்துக் கூறி நூல் ஆரம்பிக் கும் மரபு இருக்கவில்லை. சங்கத் தொகை நூல்களுக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பிற்காலத்தில் கடவுள் வாழ்த்துச் செய் திருக்கின்றார். மற்றத் தொகை நூல்களுக்குக் காப்புச் செய்யப் பட்ட காலத்திலேயே கலித்தொகைக்கும் கடவுள் வாழ்த்துச் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். இச்செய்யுளைச் செய்தவர் பெருந் தேவனாராய் இருத்தலும் கூடும். நல்லந் துவனாராயின் நெய்தற் கலிசெய்தவரல்லாத பிறிதோர் நல்லந் துவனாதல் வேண்டும். இன்றேல் கலித்தொகையின் காலம் பிற்பட்டதாதல்வேண்டும். நல்லந்துவனாரை சிலர் நல்வந்துவனார் எனப் பிறழ எழுதுவர். நல்லச்சுதன் நல்லந்துவன் நற்றத்தன் முதலிய பெயர்களைச் சங்க நூல்களிற் காண்பார் நல்லந்துவனாரே திருத்தமான பெயர் எனக் கொள்வர்.

† எட்டுக் கைகளையும் உடையவருமான கடவுளே! இப்பொழுது யான் கூறுவதைக் கேட்டருள்க.

உமது கையிடத்துள்ள ஒலிக்கின்ற பறை பல வாத்தியங்களின் ஒலியையும் ஒலிக்கும். அப்பொழுது பல வடிவங்களையும் உன்னிடத்தே ஒடுக்கிக்கொண்டு மற்றவர்கள் காணுமாறு தோன்றி கொடு கொட்டி என்னும் ஆடலைப் புரிவாய். அப்போது பக்கம் உயர்ந்த அல்குலும் கொடி போன்ற இடையும் உடைய உமாதேவியாரோ கால அறுதி உடைய சீர் என்னும் தாளத்தைக் கொட்டுவாள்.

(கடவுளாகிய நீர்) மிகுந்த போரில் முப்புரங்களை வென்றீர். அவ்வலிமையினால் முப்புரத்தவர் வெந்து விழ்ந்த சாம்பரைப் பூசினீர்; பூசிப் பாண்டரங்கம் என்னும் கூத்தை ஆடுமிடத்து மூங்கில் போன்றதும் அழகியதும் அணைபோன்றதுமாகிய மெல்லிய தோளும் வண்டுகள் ஒலிக்கும் கூந்தலும் உடையவளோ அக்கூத்துக்குரிய தூக்கு என்னும் தாளத்தைத் தருவாள்.

கொலைத் தொழிலுடைய புலியைக் கொன்று அதன் தோலை உடுத்து, கொன்றைமாலை தோளிற் கிடந்து அசைய, பிரமனின் தலையை உள்ளங் கையில் ஏந்தி கபாலம் என்னும் கூத்தை நீர் ஆடும்போது முல்லை முகை போன்ற பற்களுடைய உமாதேவியாரோ தாளத்தை ஆரம்பிக்கும் பாணியைத் தருவாள்.

அழித்தற் றொழிலைச் செய்கின்ற காலத்துப் பாணி தூக்கு சீர் என்று சொல்லப்படுகின்ற இவற்றை, பெருமை தங்கிய ஆபரணங்களை அணிந்த உமாதேவியார் தந்து காக்க ஆடுவீர். அவ்வாறு ஆடுகின்ற உருவம் இல்லாத

† சிவபெருமானுக்கு எட்டுக் கரங்கள் என்பதன் காரணம் விளங்கவில்லை. மூலத்திலுள்ள எண் கை என்பதற்கு எண்ணப்படுகின்ற (புகழப்படுகின்ற) கை எனப் பொருள் கூறினும் ஆம்.

பொருளாகிய நீர் எமக்கு ஒரு வடிவைக்கொண்டு இருப்பீர். சீர் தூக்கு பாணி என்பன தாளத்தின் உறுப்புகள்.

## பாலைக்கலி

தொல்காப்பியர் பாலைக்கு நிலம் கூறிற்றிலர். "முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து—நல்லியல் பழிந்து நடுங்கு துயருறுத்துப்—பாலை என்பதோர் படிவங் கொள்ளும்" என இளங்கோவடிகள் கூறினர். அரேபியா, ஆபிரிக்கா, வடஆசியா முதலிய தேசங்களிற் காணப்படுவன போன்ற பாலைவெளிகள் தென்னிந்தியாவில் இருக்கவில்லை. ஆகவே முதுவேனில் வெப்பத்தினால் கூவலுங் குளமும் வற்றி புல் பூண்டுகளும் மரஞ் செடிகளும் கரிந்து கிடக்கும் முல்லை குறிஞ்சி நிலங்கள் பாலை எனப்பட்டன. பிற தேசங்களிற் பாலைவன வாசிகள் இன்றும் கூடாரங்களுடன் இடம்விட்டு இடம் பெயர்ந்து வாழ்கின்றனர். தென்னிந்தியாவில் பாலை நிலங்களில் வாழ்ந்தோர் வில்லம்புடையராய் மிருகங்களை வேட்டையாடி அவற்றின் ஊனை உண்டும், வழிச் செல்வோரிடம் கொள்ளை யடித்தவற்றைக் கொண்டும் நிலையில்லாத வாழ்க்கை நடத்தினர். இது பற்றிப் போலும் பாலைக்குப் பிரிதலாகிய உரிப் பொருள் உரிமையாக்கப்பட்டது. காதலரின் பிரிவைப் பொருளாகக் கொண்டு பாடப்படும் அகப்பொருட் பாடல்கள் பாலைத் திணையின்பாற்படும். அப்பாடல்களில் பாலை நிலத்தின் இயல்பு நன்றாக வருணிக்கப்பட்டிருத்தல் காணலாம்.

பிரிதலில் மூன்று வகை உண்டு. (1) தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்துமிடத்து பொருள் தேடுதல், அரசர் கருமம் கல்வி என்னும் யாதானும் ஓர் கருமம் பற்றிப் பிரிதல். (2) ஒரு தலைவியிடத்து இரகசியக் காதல் ஒழுக்

கங் கொண்ட தலைவன் அவளை வரைந்து கொள்வதன் முன் பொருள் தேடும்பொருட்டுப் பிரிதல். இது வரை விடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் எனப்படும். (3) களவொழுக்கத்தின் பாற்பட்ட தலைவன் பாங்கியின் உதவி பெற்று யாரும் அறியாமல் தலைவியைக் கூட்டிக் கொண்டு தன் ஊருக்கு ஏகுதல். இது உடன்போக்கு எனப் படும். அகப்பொருட் செய்யுட்களில் கூறப்படும் பொருள் கள் உண்மையாக நடந்தனவல்ல வாயினும் உலக வழக்கில் நடக்கக்கூடியன. ஒவ்வொரு செய்யுளும் அதனைப் பாடிய புலவரின் கற்பனு சக்தியைக் காட்டுகின்றது.

## 2

தலைவன் பொருள் தேடுதல் காரணமாகப் பிரிய எண்ணி னான். அதனை அறிந்த தோழி தலைவியின் இயல்பை அவனுக்கு எடுத்துக் கூறி இவ்வியல்புடையவளைப் பிரியாதிருப்பதே பொருள் ஆகும் எனக் கூறி அவனது செலவைத் தடுத்தாள். இச்செய்யுள் இப்பொருள் பற்றியது.

ஐயனே ! இறைவன் ஆதியில் உலகங்களைப் படைக்கக் கருதினான். அப்பொழுது படைத்தற் றொழிலுக்கு உரிய னாய் பழைய பிரமன் தோன்றினான். அவ்வயனும் மற்றும் தேவரும் (அவுணரால் நேரும் கொடுமையைப் போக்கும் படி) மூன்று கண்ணுடைய இறைவனை வந்து இரந்தனர். எல்லையில்லாத வலியும், கோபித்துக் கூற்றுவனைப்போல் செய்யும் வஞ்சனையும் உடைய அவுணரை அழிக்கும் பொருட்டு இறைவன் திருவுள்ளங் கொண்டான். அவன், வலியாது எதிர் நின்று பொருதுகின்ற வலிமையோடு அவுணரது மூன்று மதில்களையும் பார்த்தான். அவன் கோபித்துப் பார்த்த கண்கள் போன்று சூரியன் விளங்கு

கின்ற மலையிடத்தே எறிக்கும். அது சுடுகையினால் மலை பிளக்கும். பிளப்புண்ட மலை பிறரால் கோபித்தற்கரிய மழுவையுடைய இறைவன் கோபிக்கையால் மூன்று மதில்கள் அழிந்து உதிர்வனபோல் வீழ்ந்து போவார்க்கு வழி இல்லையாம்படி குறுக்கிட்டுக் கிடக்கும். நின்னை மறக்கமாட்டாத விருப்பமுடைய உன் காதலியை இவ் விடத்தே இறக்கும்படி விட்டு இவ்வாறான வெப்பமுடைய தொலையாத வழியிடையே பொருள் தேடும் பொருட்டுச் செல்ல நினைந்தீர். அவ்வாறு துணிந்த நீர் யான் கூறுவ தைக் கேட்பீராக.

"முன் உண்டான பொருள் எல்லாம் கொடுத்துத் தொலைத்தேன். இனிப் பொருள் இல்லாதிருத்தல் இழி வாகும்" என்று கூறி மலையைக் கடந்து சென்று பொருள் தேடக் கருதினீர். அவ்வாறு தேடும் பொருள் நன்கு மதிக்கத் தக்கதாயினும், "யான் வருந் துணையும் நீ ஆற்றி யிரு" என்று கூறி நீர் ஆற்றுவித்த நின்காதலி இளமை நிரம்பி யிருத்தலால் உம்மைப் பிரிந்து உயிர் வாழமாட்டாள். நிரம்பிய முயக்கத்தை விரும்புகின்ற தனங்களையுடைய இவளது மார்மைப் பிரியாதிருத்தல் நின்மனத்துக்குப் பொருளாய் இருக்குமாயின் அதுவே பொருளாகுமல்லது வேறு பொருளாகுமோ?

"எம்மிடத்தில் பொருள் இல்லை. இரந்தவர்க்குச் சிறிதும் கொடாதிருத்தல் இழிவு" என்று இவ்வாறு கூறு கின்றீர். நீர் மலையைக் கடந்து போய் தேடக் கருதின பொருள் நன்கு மதிக்கப்படத் தக்க பொருள் ஆகும். ஆயினும், எங்கள் பழைய உழுவல் அன்பு வழுவாமல் வரும்" என்று நீர் கூறியதைக் கேட்டமையால் பிரியீர் என்று நினைந்து கூடினாள். தழுவு தலையே விரும்பின இள மைத் தன்மையுடைய அவளுடைய மார்பைவிட்டுப் பிரியா

திருத்தல் நினக்குப் பொருளாயிருக்குமாயின் அதுவே பொருளாகுமல்லது பிரிந்து செல்வது பொருளாகுமோ?

"எமது இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் இல்லை" என்று சொல்லிக்கொண்டு வந்து பலர் இரப்பர்; அவர்களுக்குக் கொடுக்காதிருத்தல் இழிவாகும் என்று சொல்லிக் காட்டைக் கடந்து போய்த் தேடும் பொருள் நன்கு மதிக்கப்படும் பொருள் ஆகும். ஆயினும் அருந்ததிபோல் எல்லாரும் தொழுது வாழ்த்தும்படியான கற்பின் பெருமையும் காமச் செவ்வியும் உடைய அவளது தோள்களைப் பிரிந்திருத்தல் நின்மனத்துக்குப் பொருளாகுமோ? அவள் தோள்கள் பொருளாவதல்லது பிரிதல் பொருளாகுமோ?

தோழி! "யான் இவற்றை எல்லாம் உமக்குக் கூறும்படி அவள் அழகு அழிந்து வருந்த நீர் பொருள் தேடப் பிரிதல் அன்பன்று" எனக் கூறினேன். அச்சொல்லைக் கேட்டு நின்காதலர் அஞ்சினார்; பரிக்கோலாற் குத்தவும் நில்லாத யானை, யாழோசையைக் கேட்டு நின்றாற்போல அன்புற்று தாழ்ந்து குற்றேவல் மகளாகிய என் வார்த்தையால் தடையுண்டு பிரிதல் தவிர்ந்தார்.

## 3

தலைவன் தனது பிரிவைத் தோழிக்கு உணர்த்தினான். அவள் இதனைத் தலைமகளுக்கு உரைத்தாள். தலைவி மிகவும் ஆற்றாளாயினாள். தோழி அவளது ஆற்றாமையைத் தலைவனுக்கு உரைத்தாள். அவள் தலைவனை நோக்கி, "நீர் செல்லும் காடுமே இடித்துரைக்கும் நட்பரைப்போல உம்மை விலக்கும்" என்று கூறி அவன் செலவினைத் தடுத்தாள். இப்பொருள் பற்றியது இப்பாட்டு.

யான் உமது பிரிவைத் தலைவிக்கு உணர்த்தினேன். அதனால் அவளது முன் கையிற் கிடந்த வளைகள் கழன்றன.

கண்களினின்றும் கண்ணீர் பெருகி வீழ்ந்து இமை நிறையும்படி கிடந்தது. பொறுக்கும் அளவினதல்லாத காம நோயினால் அவள் பொலிவு அழிந்தாள்; நெற்றியும் அழகழிந்தது; பக்கத்தே உள்ளவர்கள் அறமின்றி பழி வார்த்தைகளைக் கூறுவார்களென்று நினைந்து கூசினாள். நீர் செல்ல நினைந்த நீண்ட வழியின் வற்கட காலத்தை நினைந்தாள். இவள் தனது அழகு இழக்கும்படி பிரிய நினைந்த தலைவ! யான் கூறுவதைக் கேட்டருளும்.

"நீர் பிரியாதொழிதல் வேண்டும்; பிரியின் உம்மையே உயிராகவுடைய இவள் உயிர் வைத்திராள்." என்று இவ்வாறு நாங்கள் பலவற்றைச் சொல்லி இரந்து வேண்டுகின்றோம். அவ்வாறாகவும் எமது வார்த்தைகளைப் பொருளாகக் கருதீராயின் இனி உம்மைச் செல்லாமற் றடும்பன வழியிடத்துள்ள நீர் வற்றிய சுனையிடத்துக் கிடக்கும் இலைகளோடு கூடிய வாடிய அழகிய மலர்களாகும்.

"நீர் விரைவிற் பிரிவீராயின் இவள் உறுப்புகள் மெலிந்து கெடும்" என்று உமக்கு ஏற்ற முறையில் நாங்கள் இரந்துவேண்டுகின்றோம். இவ்வாறாகவும் இவள் வருத்தத்தை அறிகின்றிலீர். இனி உம்மைப் பிரியாமற் றடுப்பன, நீர் செல்லும் நீண்ட வழியிடத்தில், தமக்கு ஆதாரம் என்று சேர்ந்து படரப்பட்ட மரம்வாட, அதனைச் சேருதல் கைவிட்டு வீழ்ந்து கிடந்த பூங்கொடிகளே.

"நீர் சிலநாள் உடன் உறைந்து பின்னர் கை விடுதலை நினைந்தீராயின் இவள் இறந்து படுவள்" என்று கூறித் தாழ்ந்து வந்து இரந்து கொள்கின்றோம். அவ்வாறாகவும் பிரியுமாறு முயல்கின்றீர். இனி உம்மைத் தடுப்பன, நீர் போகத் துணிந்த வழியிடத்தின் மரங்களின் அழகு போக வாடிக் கிடந்த அழகிய தளிர் ஆகும். நாம் உமக்கு இவற்றைச் சொல்லவும் எமது வார்த்தைகளைக் கேளீராயினீர்.

இனி இவனைப்போல கண்டாருக்கு அருள் பிறத்தற்குக் காரணமானவற்றை மேலும் மேலும் காட்டி உமக்கு மேலாய் நின்று உண்மை கூறி இடித்துரைக்கும் நண்பரைப் போல நின் போக்கைத் தடுப்பன நீர் செல்லும் காடுகளாகும்.

## 4

தலைவன் பொருள் வயிற் பிரிய எண்ணினான். அஞ்ஞான்று தோழி தலைவி செலவுக் குறிப்பு அறிந்தவாறும் அவளது ஆற்றாமையும் தலைவற்கு உணர்த்திச் செலவு தவிர்க்கும்படி வேண்டினாள். இச் செய்யுள் இப் பொருள் பற்றியது.

நீர் பிரிந்து செல்லக்கருதிய காட்டுவழி கொடுமையுடையது. அவ்விடத்தில் ஆறலை கள்வர் சஞ்சரிப்பர். அவர்கள் வரிந்துகட்டிய வில் உடையர். சுருண்ட மயிரினர். பிறரை வருத்தக் தருணம் பார்த்துக்கொண்டிருக்கும் வலிய உடம்பினர்; புலிபோன்ற பார்வையினர். வழிச் செல்வோரிடத்திற் பெறும்பொருள் இல்லையாயினும் அவர் தமது அம்பு ஏறுண்டு துடித்து இறத்தலைக்கண்டு களிக்கப் பின்தொடரும் இயல்பினர். இக் கொடியவர்கள் சஞ்சரித்தலின் பறவைகளும் அக் காட்டிற் பறவா. இவ்வியல்பினதாகிய அரிய வழியே வெள்ளிய வேலைக் கையிற் பிடித்துச்சென்று பொருள் தேட நினைந்தீர் என்று என் தோழி அறிந்தாள்.

அவள், "என் காதலர் முத்துவடங்கள் கிடந்து புரளும் எனது தனங்களை எப்பொழுதும் தழுவி அதனாலும் ஆசை தணியாராய், என்னுடன் கூடுதலின் (குழம்பிய) எனது நீண்ட மயிரை (ஒழுங்குபடுத்தி) அழகு செய்வர். இப்பொழுது இவர் நினைக்கின்ற காரியம் எத்தன்மையது? அதை யான் அறியேன்" என்று கூறினாள்.

"எனது காதலர், முள்ளை ஒத்த நாணல் முளைபோன்ற எனது பற்களிடத்து ஓயாமல் ஊறும் அமிழ்துபோன்ற இனிய நீரைக் கள்ளிற்காட்டிலும் மகிழ்ச்சியைத் தரும் என்று கூறினர். அவர் அதனாலும் ஆசை தணியாராய் புணர்ச்சிக்காலத்து நிலைகுலைந்த என்னுடைய விளங்கும் ஆபரணங்களைப் பழைய இடங்களிற் கிடக்கும்படி திருத்துவர். இப்பொழுது அவர் நினைக்கின்ற காரியம் என்னவோ? அதை யான் அறியேன்" என்று நின் காதலி கூறினாள்.

"காதலர், மிகுந்த அழகும் நார் உரித்த ஆம்பற் றண்டுபோன்ற மாமை நிறமும் உடையதும் தேமல் படர்ந்ததுமாகிய எனது மார்பை தனது கண்ணோடு எதிரே வைத்துக் கட்டினது என்று யாம் கூறும்படி பார்த்தும் வேட்கை தணியாதிருப்பர்; புணர்ச்சிக்காலத்தே எனது நெற்றியிடத்து அரும்பிய வியர்வையைத் துடைப்பர். அவர் இப்பொழுது கருதிய காரியம் எத்தன்மையது? அதனை யான் அறியேன்" என்று அவள் கூறினாள்.

"புணர்ச்சிக்காலத்தின்பின் நீர் நிகழ்த்தின மிகப் பெரிய அன்புக்கு ஒரு பிரிவு இருக்கிறதோ" என்று கூறி என் தலைவி வருந்துகின்றாள். இத்தன்மையள் நீர் விட்டுப் பிரிந்தால் உயிர் தரித்திருப்பளோ? இராள். ஆதலால், பெரும! பொருள் விருப்பால் செல்லும் செலவைத் தவிர்க.

## 5

தலைவன் "பொருள் வயிற்பிரிவல்" என்று சொல்லக் கேட்ட தோழி வருந்தினள்; வருந்தி "நீர் தேடும் பொருளிலும் நாம் உமக்குச் சிறந்தோம் என்பது உமது உள்ளத்தில் உள்ளது எனில் உம்மைப் புட்களும் விலக்கும். பிரிந்திருப்பார் இருக்கு மாறு இவள் இருப்பாளல்லள். பிரிந்த அன்றே இறப்பாள்"

என்று கூறிச் செலவைத் தடுத்தாள். இச் செய்யுள் இப் போருள் பற்றியது.

நீர் செல்ல நினைந்த காட்டு வழி மிகவும் கொடியது. அவ்விடத்தே அழகிய செவியும் பெரிய பாதங்களும் உடைய மதயானைக் கூட்டங்களும், பிற விலங்கின் கூட்டங்களும் வேடரும் கலந்து உலாவுதலால் காடுகள் எல்லாம் புதிய வழிகள் தோன்றியிருக்கும். அதனால் பழைய வழிகளைப் புதிய வழிகளினின்றும் பிரித்தறியமுடியாமல் இருக்கும். இவ்வகையான காட்டைக் கடந்து தேடும் பொருளினும் நாம் உமக்குச் சிறந்தோம் இல்லையோ? பெரிய கடலிலே காற்று மரக்கலத்தைச் சிதற அடித்துவிடுகையால் அதனிடத் திருந்தோர் ஊக்கமின்றி நெஞ்சழிவர். அதுபோல நாமும் இனி மனமழிந்திருப்பதல்லால் உம்மோடு எவ்வாறு பல வார்த்தைகளைப் பேசுவோம். யாம் அப்படி இருப்பினும் நட்சத்திரங்களும் புட்பசகுனமும் உம்மைத் தடுக்கும். இன் னும் யாம் கூறுவதைக் கேட்பீராக.

பெரும் ஆரவாரத்தோடு கூடிய விழாவின் மற்றை நாள் ஆரவாரம் அடங்கிப் புல் என்று இருக்கும் அழகிய இடம்போல ஆற்றியிருக்கும் ஒருத்தியோ இவள்?

ஆளும் அரசர் கலக்கக் கலக்குண்ட நாடு பாழ்பட் டாற்போல அழகு கெட்ட முகத்தோடு ஆற்றியிருக்கும் ஒருத்தியோ இவள்?

ஓர் இராக்காலத்தில் தாமரைப் பொய்கையில் நீர் இன்றிக்கிடந்த மலர் அவ் விராக்காலம் முழுதும் வாடாமற் கிடந்தாற்போல, நீர் பிரிவீராயின் ஓர் இராப்பொழு தேனும் உயிர்கொண்டு வாழும் ஒருத்தியோ இவள்?

பெருந்தகாய்! இவ்வாறெல்லாம் யான் உமக்குக் கூறவும் நீர் இவளைப் பாதுகாத்தலைவிட்டுப் பொய் புரிந்தாய்.

நீ அச்சுரத்திலே செல்வது எந்நாள்; அந்நாள், இவளுடைய பெறுதற்கரிய உயிரைக் கொண்டுபோகும்.

## 6

இது, தலைவரது செலவுக் குறிப்பு அறிந்து நீர் செல்லும் கடுஞ் சுரத்துத் துன்பத்துக்குத் துணையாக எம்மையும் உடன் கொண்டு செல்லும் எனத் தலைவி கூறியது.

பெருந்தகாய்! நீர் செல்ல நினைந்த காடோ பல இடையூறுகளை உடையது. காட்டுவழியிலே, மறவர் *மூட்டுவாயுடைய அம்புகளோடு திரிவர். மலை வளர்ந்து போதற்கு அரிய வழியே போவார்மீது அவர்கள் அவ்வம்புகளை எய்வர். அவ்விடத்தே திரியும்உடல் சுருங்கி உள்நீர் வற்றிய மரையா நாவறட்சி தீர்க்கும்பொருட்டு மரலைத் தின்னும். இவ்வாறு காட்டிடத்தே மாரி வறண்டிருக்கும். அம்மரையாவின் தண்ணீர் பெறுந் தடுமாற்றத்தை அதன் கண்ணீர் விழுந்து நாவினை நனைத்துப் போக்கும். இவ்வகையான காட்டு வழியே யானும் உடன் வருதல் அரிது என்று நீர் மறுத்துக் கூறினீர். உம்மைப் பிரிந்து யான் உயிர்தரித்து இருத்தல் ஆற்றாது இறந்து ஒழிவேன் என்பதை அறியாதீர்போல யான் உடன் வருதலை மறுத்துக் கூறினீர். இம்மொழிகளைக் கூறுவதால் யாது பயன். இக்கூற்று உமக்கு நல்ல நீர்மையதன்று. இனி நீர் எம்மிடத்து அன்பு நீங்கப் பிரிதலைக் கருதாதீர். அவ்வழியிடத்தே நேரும் துன்பத்துக்கு எம்மையும் துணையாகக் கொண்டு உம்மோடு போதலை ஆராயின் அதுவல்லது எமக்கு வேறு இன்பமும் உண்டோ?

---

* அம்பின் அலகைக் காம்பில் வைத்து இறுக்கிய பொருத்து.

இது, பிரிவு உணர்த்தப்பட்ட தோழி தலைமகற்கு, நீர் பிரிகின்றீர் என்று யான் கூற தலைவி கேட்பின், அவட்கு அப்போது நிகழ்வனவற்றை நும்மோடு ஆராய்வதுடையேன். நீர் செய்யும் போநன் இவள் உயிரையும் தருகிற்குமோ எனக் கூறிச் செலவைத் தடுத்தது.

நீர் கொடிய காட்டுவழியே செல்லத் துணிந்தீர். அக் காட்டில் முதுவேனிற் காலத்து வருந்தி உடல் மெலிந்து இளைத்த யானைகள் மழை பெய்யப்பெறாத ஊர்களிலே தண்ணீர் உண்ண விரும்பி கானல் நீரைத் தண்ணீர் எனக் கருதிச் செல்லும். இவ்வகையயான காட்டுவழியே நீர் செல்வீரென்று யான் கூறுதலை நின் காதலி கேட்பாளாயின், நீர் பிரியுமிடத்து அவளுக்கு நேர்வதை உம்மோடு கேட்கலாமா?

ஐயனே! நீர் செல்லும் காரியத்தை மனத்தில் கொண்டமையால், உமது கையிற் கட்டிய வில் நாணை தடவா நின்றீர். இவளுக்கோ மறுவற்ற சந்திரனை மேகம் மறைப்பதுபோல மறுவில்லாத ஒளியுடைய முகத்தைப் பசப்புப் பரவா நிற்கும்.

நீர் வேலைப்பாடுடைய கைச் சரட்டை இறுகக் கட்டி அம்புகளைத் தெரியா நின்றீர். ஆனால் இப்பொழுது சுனையிடத்து வளர்ந்த நீலம் மழையை எதிர்கொண்டு நீர் சொரிவதுபோல இவள் கண்களில் நீர் பெருகா நிற்கும்.

நீர் பிரிகின்றோம் என்ற தனிமையை உணராத நெஞ்சுடன் பொருள் தேடற்குப் போக, வெற்றிதரும் சக்கரத்தினது வாயைத் தூகள்போகத் துடைக்கின்றீர். ஆனால் இவளுக்கோ காந்தட் பூ வாடி விழுவதுபோல அழகிய விளங்குகின்ற வளை இறையினின்றும் கழலும்.

நீர் ஆரவாரத்துடன் செல்கின்றது நமக்குக் குற்றத்

தைச்செய்யும். நீர் பிரிவீராயின் இவள் தன் அழகு அழிந்து இறந்துபடுவாள். உம்மை யான் ஒன்று வினவுகின்றேன். நீர் கருதிய தேயத்துச் சென்று முயன்று தேடும் பொருள் இன்பந்தருதலேயன்றி இவள் இனிய உயிரையும் தருதல் செய்யுமோ?

## 8

இது, சொல்லாது பிரியலுற்ற தலைவன் குறிப்பறிந்து, தோழி, போநனது நிலையாமை கூறி அவனோடு கூடிச் செல்கின்ற இல்வாழ்க்கைச் செலவே போநன் என்று செலவைத் தடுத்தது.

அருள் இல்லாத மந்திரி நடுவு நிலைமையைக் கைவிட்டு நீங்கி தனது மனத்திற் கிடந்த காரியத்தைச் சொல்ல, அதனைக் கேட்டுக் கொடுந்தொழில் புரிந்த அரசனுடைய ஆளுகை சுடும். அவ்வெப்பத்தைப்போலச் சூரியன் வெய்ய கிரணங்களைச் செலுத்தி மலை இடங்களைக் காய்வான். அதனால் வண்டு மொய்க்கும் மதம் ஒழுகும் யானைகள் அழகழிந்தனவாய், ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள்போலக் கொம்புகளை ஊன்றிக் கைகளை நிமிர்த்தி நிலத்தே கிடக்கும். இவ்வகை நிகழுமாறு மலைகள் வெம்புகின்ற போதற்கரிய கொடிய காட்டை எங்களுக்குச் சொல்லாதே போகத்துணிந்த உமக்கு ஒரு காரியம் கூறுகின்றேன் அதனைக் கேட்பீராக.

ஐயனே! ஏழு நரம்புகளும் விரும்புவார்க்கு உள்ளவாய் விரலால் தடவி வாசிக்கப்படும். தானக் கோலின் இடையே அகப்பட்டு நின்ற நரம்பு, ஏழு நரம்புகளின் பயன் இன்றும் படி அறுந்துபோம். இவ்வியல்பினதாகிய யாழினும் நிலையில்லாத பொருளை அறிவுடையோர் விரும்புவரோ?

திருமகள் தம்மை மனத்தால் விரும்பிப் பெற்றவர்களிடத்தில் அவர்கள் விரும்பிய காலம் வரையும் இருக்கமாட்டாள். பிரியுமிடத்துப் பிறர் இகழும்படி அவர்களுக்கு ஒரு பலியும் இன்று ஆகும்படி மனம் மாறுவாள். இவ்வகையான திருமகளிலும் நிலையில்லாத பொருளை அறிவுடையோர்கள் விரும்புவரோ?

அமைச்சர் தமக்கு உயர்ச்சி மிகும்படி தாம் பெறும் பயனைப் பாராது அரசர் ஆக்கம் கருதி முயல்வர். அரசன் அவர்களைக் கோபிக்கும்பொழுது தம் (அரசனது) காரியத்தை முயன்றவனென்று நினையாதும் பழமை கருதாதும் பொருள் முதலியவற்றை அல்லாமல் உயிரையும் கொள்வர். அவ்வகையான *அரசினும் காட்டில் நிலையில்லாத பொருளையும் அறிவுடையோர் விரும்புவரோ?

இவ்வாறெல்லாம் யான் சொல்லா நிற்கின்றேன். ஆதலின், பெரும! பொருளை விரும்பாதிருத்தல் நினக்குப் பொருந்தாது; ஆராயிற் பழியுமின்று. ஆகவே இப்பிரிவை நீர் தவிர்தலை யான் விரும்புகின்றேன். அரசன் பலரைக் காக்க வருகின்ற விருந்தை எதிர்கொண்டு தன் மனைவி விரும்பும்படி அவருடன் கூடி இருத்தலாகிய அதுவே பொருளாகும்.

## 9

இஃது, உடன்போய தலைவியின்பின் சென்ற செவிலி, இடைச் சுரத்தே முக்கோற் பகவரைக் கண்டு, இவ்வகைப் பட்டாரை அவ்விடத்திற் கண்டீரோ, என வினவியபோது, அவரைக்கண்டு அஃது அறம் எனவே கருதிப் போந்தேம். நீர்

* அரசன் உயிர் வாங்கினவன்றே கெடுவன் என நச்சினார்க்கினியர் உரைப்பர்.

அவர்களுக்காக வருந்த வேண்டா, என எடுத்துக்காட்டி, அவர் (முக்கோற்பகவர்) தேற்றியது.

உறியிலே வைத்த தண்ணீர்க் கரகத்தையும், முக்கோலையும் தோளில் வைத்துக்கொண்டும், வெயிலைத் தாங்குதற்குக் குடையைப் பிடித்துக்கொண்டும், அதன் நிழலிலே வெப்பமான காட்டுவழியே சோர்ந்து செல்லும் ஒழுக்கமுடைய அந்தணர்களே! எனது மகள் ஒருத்தியும் வேறொருவனுடைய மகனும் பிறர் அறியாத காதலர்களாயிருந்து இப்பொழுது பிறர் அறிந்த கூட்டம் உடையவர்கள் ஆயினர். இவ்வகையான இருவரை வழியிடத்திற் கண்டதுண்டோ?

அதுகேட்ட அந்தணர், அவ்வகையினரைக் காட்டிடத்தே காணுதிருந்தோம் அல்லேம். கண்டு அது முறைமையானது என்று எண்ணி வந்தோம். ஆண் மக்கட்குச் சொல்லப்படும் அழகையுடைய தலைவனோடு இவ்வரிய வழியை கடந்து செல்லப்போகும் ஆபரணமணிந்த இளமையுடையவளுக்கு நீர் தாய்போலக் காணப்படுகின்றீர்.

வாசமுள்ள சந்தனமரம் சந்தனத்தை உடம்பில் பூசுகின்றவர்களுக்குப் பயன்படுதல் அல்லாமல், மலையிடத்துப் பிறந்ததாயினும் அம்மலைக்கு ஒரு பிரயோசனமுங் கொடுக்கமாட்டாது. அதுபோலவே உமது மகளும் பயன்படும் பருவத்து நுமக்கும் பயன்படாள்.

தலைமையான முத்து, அணிபவர்க்குப் பயன்படுவதல்லது, கடலிடத்துப் பிறந்தனவாயினும் அக்கடலுக்கு என்ன பயனைக் கொடுக்கும்? ஆராயுமிடத்து உமது மகளும் பயன்படும் பருவத்து நுமக்குப் பயன்படாள்.

ஏழுநரம்பாற் கூட்டிய இனிய ஓசைகள் பாடுவார்க்குப் பயன் கொடுத்தல் அல்லது, யாழிடத்துப் பிறந்தவாயினும் அந்த யாழுக்கு என்ன பயனைக் கொடுக்கும்?

ஆனால் மிக்க கற்பினையுடைய அவளுக்காக வருத்த முறன்மின். இருமுதுகு வரினுஞ் சிறந்த கணவனை வழி பட்டு அவன் பின்னே போனாள். இம்மையில் இங்ஙனம் கற்புப்பூண்டு நிகழ்த்தும் இவ்வில்லறமே அறங்களில் தலைமையான அறம். மறுமையில் இவ்விருவரும் நீங்காமல் சுவர்க்கத்திலே செல்லும் வழியும் அவ்வழிபாடே.

## 10

இது, தலைவனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி, இவ் வகைப்பட்ட சுரத்தைப் பொருள் காரணமாகப் பிரிகின்றீர் எனக் கேட்பின் தலைவி இவ்வகை ஆகற்பாலள் எனச்சொல்லி செலவழுங்குவித்தமை.

நீர் செல்லத் துணிந்த காட்டிடத்துள்ள மரங்களின் கிளைகளிலுள்ள தளிர்கள் வறியவன் இளமைபோல் வாடி யிருக்கும். கொடுத்தற்கு மனம் சிறியவனாகிய செல்வன் சேர்ந்தவர்களைப் பாதுகாவாதவாறுபோல மரங்கள், சேர்ந்த வர்களுக்கு நிழல் இன்றி நிற்கும். உலக ஒழுக்கத்தைக் கடந்து யாவர்க்கும் தீங்கு செய்து பின்பு புகழ் இல்லை ஆனவ னுடைய முடிவு காலத்து அவன் கிளையே அன்றி அவனும் கெடும். அதுபோல மரங்கள் கிளைகளே அன்றி வேருடனே நின்று வெம்பும்; வெம்பி சூரியனுடைய கதிர்கள் சுடுகையி னாலே வருந்தி, கொலைத் தொழிலுக்கு அஞ்சாத அமைச்ச ராலே குடிசனங்கள் அலறும்படி முறையின்றி பொருளை வாங்கிக்கொண்டு செங்கோல் வளைந்த குடைநிழலில் தங்கிய உலகம்போல உலறும்.

மெத்தை விரிக்கப்பட்ட படுக்கையிடத்தே துயிலும் போது நீ அவளது வருத்தம் அறியாது. அவள் தழுவிய கையைவிட்டு நீங்குவாயாயினும், தனிமைகொண்டு வருந்து

வாள். அவள் கூட்டத்தைவிட்டு நிலையில்லாத பொருள் காரணமாக வேற்று நாட்டிடத்தே நீ போவை என்று யான் கூறக் கேட்பின் அவள் நெஞ்சழிந்து ஒளி கெடுவாளோ? இறந்துபடுவாளோ? (இறந்துபடுவாள் என்றவாறு).

நீ விளையாட்டாகப் பிரிந்து சிறிதுபொழுது நீடித்திருப்பினும் மேன்மையுடைய இவள் அத்துணைப் பிரிவுக்கு அஞ்சிக் கலங்குவாள். இவளைப் பிரிகின்றேம் என்னும் கவற்சியின்றி, முயன்று தேடும் பொருள் காரணமாக நீ போவை என்று யான் கூறக் கேட்பின், கண்கள் உறங்காவாய் கவலை கொள்வாளோ? இறந்துபடுவாளோ?

நீ இடைவிடாமல் அருளோடு, பார்க்கின்ற பார்வை அவளிடத்திற் படாது ஒரு சிறிது நீங்கினும் வருத்தங் கொண்டு நெஞ்சழிபவள், நீ பொருளை நன்றென்று கருதித் தன்னைப் பிரிந்து அவ்விடத்தே போவை என்று யான் கூறின் கண்டார் மருளும் அழகு கெட்டு மிகவும் மயக்கம் மிகுவாளோ? இறந்து படுவாளோ? "புனைந்த பூணினையுடையாய்! நீ பொருளைத் தேடுதலை விரும்பிப்போகில் இவளுடைய உயிர் தாமும் போம்" என்று உனது பிரிவாற்றுமையை யான் நின்தலைவனிடம் கூறினேன். புகழப்படும் வேலையுடைய பெருந்தன்மை யுடையவன் நீண்ட வழியிடத்திற் செல்லும் போக்கைத் தவிர்த்தனன். இனி நின் வளைகள் கழலாது இருப்பனவாக.

## 11

இது, அறத்தினுற் பொருளாக்கி அதனுற் காமம் நுகர்வேன் எனக் கூறிப் பொருள்வயிற் பிரிந்த காலத்து, தலைவி "காடு கொடியதாயினும் இவ்வகைப்பட்டதும் உள்ளது என்று கூறினர்.

அவை இப்போழுது காணப்படுதலின் வருவர்" எனத் தோழிக்குக் கூறி அதற்கு நிமித்தமும் கூறி ஆற்றுவித்தது.

நமது காதலர், விளங்குகின்ற ஆபரண மணிந்தவளே! (அறத்தான் ஈட்டிய பொருள்) தமக்கு அருள் செய்துவந்த அந்தணருக்கும் தவத்தர்களுக்கும் வேண்டுவன கொடுத்துத் தருமஞ் செய்தலும், பெரிய பகைகளை வென்ற செருக்கினால் தம்மை வழிபடாதாரை அழித்தலும், முற்பிறப்பில் உண்டான காதலினாலே இப்பிறப்பில் மனம் பொருந்திய காமத்தைத் தருதலும் செய்யும் என்று நமக்குக் கூறிப் பொருள் வயிற் பிரிவல் நன்று என்று எண்ணிப் போனார். அவர் இப்பொழுது வருவார்போல் தோன்றுகின்றது. யான் அவர் வருவார் என்று துணிந்து சொல்லுகின்றேன். இப்பொழுது அதற்குக் காரணங் கேள்.

பொன்னாற் செய்த கனத்த காதணியை உடையவளே! அவர், நெருப்புப்போன்ற வெம்மையால் அடி தாங்க முடியாத சூடாகக் காடு இருக்குமென்று சொன்னார். அக்காட்டிலுள்ள ஆண் யானை, துடிபோன்ற அடிகளுடைய யானைக் கன்றுகள் நீர்நிலையில் இறங்கி தாயும் தந்தையும் உண்ணவேண்டுமென்று கருதாது கலக்கிய சிறிய நீரை முதற் பிடிக்கு ஊட்டிப் பின்பு தானும் உண்ணுமென்றும் அவர் கூறினார்.

இலைபசுமை அற்றுக்காய்ந்த மரக்கொம்பர்கள் இன்பத்தினின்றும் நீங்கிச் சென்றாரைத் துன்பம் உறுத்தும் தன்மையின என்றும் சொன்னார். அவர் சொன்ன காட்டிடத்தே ஆண் புறாக்கள் தாம் அன்புகொண்ட இளைய பெண் புறாக்கள் வெம்மையால் இளைத்த வருத்தத்தை சிறகு விரித்து நிழலாலே தீர்க்கும் என்று சொன்னார்.

காடுகள், ஞாயிற்றின் வெவ்விய கதிர் படுகையினால் மலையின்மேல் நின்ற மூங்கில்கள் வாடிச் செல்வார்களுக்குச்

செல்லுதற்கு அருமையுடையதா யிருக்குமென்றுஞ் சொன்னார். அக்காட்டிடத்தே நிழல் இல்லாமையினால் ஆண் மான், வருந்திய இளைய பெண் மானுக்குத்தான் நின்று நிழலைக் கொடுத்து உயிர் அளியாது நிற்குமென்றும் சொன்னார்.

இவ்வியல்பினதாகிய காட்டு வழியே சென்றவர் எமது அலங்கரிக்கப்பட்ட அழகைக் கெடுப்பவராகார். அதற்குக் காரணம் என்னெனில் நம் மனையிடத்துப் பல்லியும் நல்ல இடத்தில் அவர் வரவுக்கு ஏற்பக்கூறினது. எனது இடக் கண்ணும் துடியா நின்றது.

"பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே" (கலி 11)

## 12

இது தலைவனால் பிரிவுணர்த்தப்பட்ட தோழி, காட்டது கடுமையும் தலைவியது மென்மையும் இளமையது அருமையும் கூறிச் செலவு தவிர்த்தது.

ஐயா! நீர் செல்ல நினைந்த காட்டிடத்தே, முள்ளைக் கட்டிட்ட நீண்ட வேலியைப்போல, கொலைத் தொழிலுடைய வேடரது வில்லாலே கொல்லப்பட்டவர்களது உடலை மூடிய இலைக்கும்பங்கள் நிரையாகக் கிடக்கும். தீமை நிறைந்த வழியில் நீர்வற்றும் சுனையிடத்து தண்ணீர் உண்ண விரும்பிய உடம்பு வாடிய யானைகள் சூழ்ந்துபடியும். படியுமிடத்து கை சுடுகையினாலே யானைக் கூட்டம் வெவ்வேறாகப் பிரிந்து மலையிடத்தே ஓடும். அதனால் பழைய வழிகள் தெரியாது மறையும்.

நீர் முன் துயில் கொள்ளும் காலத்து மிகச் சிறிய பொழுது தாழ்த்து துயில்கொண்டு எழும்பினும் இது என்னோ என்று நின்காதலி அஞ்சுவாள். இவ்வியல்பி

னைக் கைவிட்டு பொருள் விருப்பால் பிரிந்து செல்கின்ற வரே! நீர் மிகவும் வலிய நெஞ்சுடையராய் தேடத்தக்க பொருளைத் தேடி முடித்த செல்வத்தால் உண்டாகும் பொருள் இவ்வின்பம் என்று கூறுகின்றீர். நீர் அப்பொரு ளைத் தேடிவரும் குறித்த காலத்தளவும் இளமையும் காம மும் நின்னிடத்து நில்லாவாய் நாள்தோறும் கழியும். அது வல்லாமல் இறக்கும் நாள் இது என்று உலகத்தில் அறிந்த வர்களும் இல்லை. முலை இடத்துள்ள பூமாலை கசங்கும்படி முயங்கும் நாள்கள் இன்னும் கழியாமையைக் கருது வாய். காமம் குற்றப்பட அதனோடு மாறுபாடுகொண்டு பொருளிடத்தே விருப்பம் நிகழ்ந்து போகின்றவனே! தமக்கு வருகின்ற மரணத்தையும் மூப்பையும் மறந்திருக் கின்ற அறிவில்லாரைப் போல நில்லாது, அவற்றை நினைந் திருக்கும் நன்மக்கள் நிற்கின்ற வழியே நில்.

## 13

இது, தலைவனுற் பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றளாகிய தலைவி, "யான் உம்மோடு வருவேன்" என்றளாக, தலைவன் அவளது மேன்மையும் காட்டின் கடுமையும் கூறி உடம்படானாக ஆற்றளா கிய தலைவியைத் தோழி, "அவர் நம்மோடு நகையாடிச் சோன் னர் பிரிவரல்ல" ரேன வற்புறுத்தியது.

மிகுந்த போர்த் தொழிலுடைய அரசன் கோபித்துப் படை எடுத்துச் சென்ற பகைவர் நாட்டை நெருப்பு உண் ணும். நெருப்புத் தின்ற கரியுடைய வறந்த நிலத்தே மலர்ந்த பொரிகளைப்போன்ற நிறத்தையுடையன இளைய புள்ளி மான்கள், உணவு கிடையாது வருந்திய பெண் மான்கள் முறுகிய கொம்புடைய ஆண் மான்களுடன் பேய்த்தேரை நீரென்று கருதிப் பருகுதற்கு ஓடும். மரல்

வாடும்படி மலைகள் கொதிக்கும். மந்திகள் உணவின்றி வருந்தும். உடல் வாடிய உரல்போன்ற அடிகளையுடைய யானைகள் நீரூற்றுகள் வற்றுதலால் நீர் உண்பதற்கு நீர் நிலை காணுமல் சேற்றின் ஈரத்தை நுகரும். இவ்வகையினது யாம் செல்லக் கருதிய அரிய வழி.

விளங்குகின்ற வளையினையுடையாய்! நீ எம்மோடு வருவையாயின் நின்னுடைய மலர்மேல் நடக்கின்ற மெல்லிய அடிகள் கல்லைத் தீண்டும்; தீண்டுமாயின் தாமரைப் பூவின் அல்லியைச் சேர்ந்த இதழ்கள் சாதிலிங்கம் சேர்ந்தனபோலக் கறுப்பன அல்லவோ?

அழகிய ஒளியுடைய நெற்றி யுடையவளே! சிங்கக் கால்மேல் வைத்த தூங்கு கட்டிலில் அன்னத் தூவியாற் செய்த மெல்லிய இடத்தே உறங்கும் நீ எம்மோடுகூட வரின், அக்காட்டில் பொய்யான சிங்கம் இல்லையாக, விலங்காகிய சிங்கத்தின் குரலைக் கேட்டு அஞ்சுவை அல்லையோ?

கிளி மொழியாய்! நீ எம்மோடு வருவாயானல் மழைக்கு நீட்டிய தளிரை ஒத்த அழகினையுடைய மேனி, உலர்ந்த சிறிய பற்றைகளை மறைத்து முழங்குகின்ற நெருப்பின் நடுவை ஊடறுத்துவந்த காற்றுத் தீண்டில் அழகு கெடும் அன்றோ?

நினது அழகு கெடும் என்று அச்சமான தன்மையுடையவற்றை நின்காதலர் கூறுகையினலே யாம் பிரியின் இவள் இறப்பள் என்று பிரியார். ஆதலான் மனம் மாறுபட்டு வினையிடத்துப் பிரிகுவரென மனம் அழியாதே. வளைந்த மகரக்குழை உடையாய்! காடு கடுமை யுடையது, செல்லற்கு அருமையுடையது என்று அவர் சொல்லுவாராயின் நினது மெய் நடுக்கத்தைக் காண்டற்கு ஒரு விளையாட்டைக் குறித்துக் கூறினு ரென்பதல்லது பிறிது கருதிச் சொன்னரல்லர்.

## 14

இது, தலைமகனால் பிரிவு அறிவிக்கப்பட்ட தோழி; தலைவனுக்கு, முன்னையிலும் சிறப்பாக இனிது பாராட்டியதெல்லாம் எம்மிடத்திற் பிறந்த வெறுப்பு என்பது இப்பொழுது அறிந்தேன். இவ்வகைப்பட்ட செலவு நினக்கு என்ன காரணத்தால் வந்தது" எனக் கூறி அவனது போக்கைத் தடுத்தது.

"என் காதலி துயில் செய்கின்ற அணைபோன்று மிருதுவானதும் அழகினையுடைய மூங்கில் போன்றதுமான தோளினையுடையள். நிமிர்ந்த நீலமலர் போன்ற அழகினையுடைய இரண்டு கண்களுடையள்; வண்டுகள் விரும்பும் முல்லை முகைபோன்ற நேரிய ஒழுங்காகிய பற்களையுடையள்; வாசம் பொருந்திய நெற்றியுடையள்; மேகம் போன்று கரிய கூந்தலுடையள்; மார்பிடத்தே அழகிய தேமலையும் பருத்த முலையினையும் உடையள். கையிடத்தே நிரையாகிய வெள்ளிய வளைகளையும் உடையள்" என்று பலவாகிய புனைந்துரைகளால் பண்டையிற் காட்டில் கொண்டாடி இவ்வாறு இனிய மொழிகளைக் கூறினீர். இப்பொழுது என்னை வருத்தத்தே செலுத்துகின்ற தன்மையால் நீர் எம்மிடத்து வெறுப்பாகுதலை இப்பொழுது அறிந்தேன்.

மயக்கந் தருகின்ற நின் அழகிய பார்வையே பொருளல்லது நன்கு மதிக்கப்படும் பொருள் வேறுண்டோ என்று கூறிய நீர் மயக்கத்தினால் அவ்வன்பை மறந்தீரோ?

காதலிக்கப்பட்டவள், "கையில் பொருள் இல்லாதவர் என்னகாரியத்தைச் செய்வ" ரென்று உறவுபோல இருந்து உறுதி அல்லாதன கூறுவார் கூறும் மொழிகளை உமக்குப் பொருளாக மதித்தீரோ?

நல்ல வழியின்றிப் பொருள் தேடுவார்க்கு அப்பொருளே அவரை நீங்கி இம்மையிலும் மறுமையிலும் பகையாவதை அறியீரோ?

பொருள் இத்தன்மையதாதலால் அப்பொருளையன்றி எம்மையும் பொருளாக மதிப்பாய். எங்களுக்குள் முயங்கின முயக்கத்தை கைவிட்டு நீ போகையினாலே பெறுகின்ற பொருளிடத்து அவாவைக் கைவிடுவாயாக. அதுவே நிலை பெறும் பொருள்.

## 15

இது, பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி தலைவியின் ஆற்றமையும் இளமைய தருமையும் கூறி, நீர் பிரிந்து செய்யக் கருதியவை எக்காலத்தும் செய்யலாம். கழிந்த இளமையைப் பொருளாய் மீட்கலாமோ எனக் கூறியது.

அன்பும் அருளுமின்றி நீர் செல்ல நினைந்த காட்டு வழியிடத்தே சினத்தினையுடைய மறவர் திரிவர். அவர்கள் படைக்கலங்களுடைய சேனையோடு அரசர் வந்து போர் செய்யினும் அழகிய சிலை மரத்தாற்செய்த வில்லின் முறுக்கிய நாணில் எழுந்த சிங்கம் கர்ச்சித்தாற்போன்ற சிறு நாணொலியாலே அவரைப் புறங்காண்பர். அவ்வாறு செய்யின் அன்றி அவர்கள் அம்பை வில்லிலே தொடுத்தலை நாணுவர். அச்சம் தரும் துடியினது ஓசையையும் வலிய பார்வையையும், வலிய கழுத்துடைய மானின் கொம்புபோல திருகி முறுக்குண்ட தாழ்ந்த தாடியினையும் உடைய அம்மறவர் வழிப்போக்கரின் பொருளைக் கொள்ளை அடிப்பர்; பொருளைப் பறித்துக்கொண்டு அவர்களுக்குக் காயம் விளைப்பர்.

நீ அகப்பொருளைக் கைவிட்டுப் புறப்பொருளை எண்ணிப் போக விழைந்தாய். இவளுடைய நிறம் அசோகின் அழகிய தளிரை ஒக்கும். நீ பிரியின் அந்நிறம் மாறிப் பசலை நிறம் கொள்ளும். இவ்வாறு அவளது பழைய அழகு கெட்டால் அதனை புதிதாகத் தேடும் பொருளினால் பெறலாமோ?

இவளுடைய திருமுகம் இனிய கிரணங்களுடைய திங்களை ஒக்கும். அந்த முகம் பாம்பு சேர்ந்த திங்களைப் போலப் பசப்புப் பரந்து (கெட்டக்கால்) மெய்ப் பொருளை நினைந்து நீ சென்று, அவரிடத்துக் கற்ற பொய்யற்ற நூற் கேள்விகளாலும் முன் மனத்திற் றங்கிய மாசற்ற விரதங்களாலும் மீட்கலாமோ?

முறுக்கவிழ்ந்த கரிய நீலமலரை ஒத்த இவளுடைய கரிய கண்கள் அழுது, எரிகின்ற திரி கக்கிய நெய்போலச் சுடும் படி தெளிந்த கண்ணீரைச் சிந்தும். இவ்வாறு கெட்ட அழகை, பிறநாட்டிற் போய்ப் பெற்ற பற்றை அறுத்த ஞானத்தினால் மீட்க முடியுமோ?

இவளின் உறுப்புகள் அழகு கெடாமல் பாதுகாத்துப் பின்னர் நீ நினைந்தவற்றை ஆராய்ந்து பார். அக்கல்வியினால் உண்டாகும் பெருமையோ இவ்விடத்திருந்து நாடோறும் செய்துகொள்ளும் செயலாயிருக்கும். முளை போன்ற நிரையான பற்களுடையாளுடைய ஆராயப் பட்ட இளமை போனபின்பு அக் கல்வி அவ்விளமையைத் தருமோ?

## 16

இது; தலைவன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து அவன் போகிய காட்டது கடுமை நினைந்து ஆற்றாள் ஆகிய தலைமகள், அவர் இப்பொழுதிற்றாக நாம் இவ்வகைப்பட்ட தெய்வங்களைப் பரவுதல் நம் கற்புக்கு இயைந்ததோ என, அது கேட்ட தோழி, "அவர் திரும்பிடுவர் நீ கவலைவேண்டா" எனக் கூறியது.

துயிலில்லாமல் பசந்த எனது கண்கள் வருந்தி கண்ணீர் சொரிந்து நிறம் வாடி அழகு கெட்டன. தாழ்ந்த முன்கையினின்றும் வளையல்கள் கழல்கின்றன. இவ்வழ

கின் அழிவுக்கு அஞ்சினேன் அல்லன். பிரிந்து சென்ற தலைவர்பொருட்டு யான் ஒரு காரியஞ் செய்ய நினைந்தேன். அதனாலும் பெறப்படுவது என்? அக்காரியம் தானும் ஆராயுமிடத்து நம் கற்புக்குப் பொருந்துவதன்றாய் இரா நின்றது.

நங் காதலர், யாம் இயற்கை நலம் கெட்டு இவ்விடத் திருந்து வருந்திப் புலம்பும்படி நம்மைக் கைவிட்டுப் பிரிந் தார்; பின்னர் என்னை நினையாராயினர். பொருள்மேல் அன்பு மிகுந்து நம்மேல் அன்பைத் துறந்து அவர் செல்லும் அரிய வழியிடத்தே பாறைகள்மீது வெப்பம் உண்டாகும். அவ்வெப்பம் நீங்கும்படி மிகுந்த மழைத்துளிகளை சிதறுவா யாக என்று இனிய ஓசையுடைய மேகத்துக்குரிய ஞாயிற் றைத் துதித்து இரக்க நினைந்தேன். இக்கருமம் கற்பிற்கு இயைவதாகுமோ? அல்லவே.

அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்களை உடையாய்? இவ்வி டத்தேயிருந்து நாம் தனிமையுறும்படி பொருளை விரும்பிச் செல்லுமிடம் பகைவர் நாடுஎன்றும் கருதாராய் நங் காதலர் பிரிந்தார். அவர் செல்லும் வழியில் மரக்கொம்புகள் வாடும் படியாக எறிக்கும் உன் சினம் தணிவாயாகவென்று நெருங் கிய கதிருடைய ஞாயிற்றைத் தொழுது நாம் வேண்டிக் கொள்ளுதல் கற்பிற்கு இயைவதொரு காரியமோ.

ஒள்ளிய பூணினையுடையாய்! நம் காதலர், இவ்வி டத்தே யிருந்து நாம் வருந்த நம்மிடத்தில் அருள் இல்லா ராகி பொருளிடத்தே விருப்பமுடையராய் அகன்று சென் றார். அவர் செல்லும் அரிய வழியிடத்து, சிறிய உயர்ந்த பற்றைகளிலே தங்கி, வந்த வெப்பம் ஆறி அவர்மீது படுவா யாக என்று தொழுது காற்றைத் தருகின்ற ஞாயிற்றினை வாழ்த்தின் நம் கற்புக்கு ஏற்குமோ? அல்லவே.

தேன்போன்ற வார்த்தையுடையவளே! இவ் வியல்

பினராகிய மற்றத் தெய்வங்களையும் மனத்தில் வேண்டுதல் செய்யக்கருதி, தேடுகின்ற பொருளால் உண்டாகும் சிறப்பை நினைத்துச் செல்கின்றவரிடத்து மனம் சுழலாதே. வற்கடகாலத்திலே உலகம் கெட்டதாயின் உலகில் மழையைப் பெய்விக்கும் கற்பினையுடையவள் நிறம் கெட்டு பசப்புப் பரத்தல் உண்டாம் என்று கருதி, அவருடைய முயற்சியிடத்தே அறக்கடவுள் சென்று விலக்கிற்று. இனி வருந்தல்.

வறனோடின் வையகத்து வான்தருங் கற்பினா(ள்)

(கலி—16)

## 17

இது, பகைவர் திறைதந்த நாடு காத்தற்குப் பிரிகின்றமை யுணர்ந்த தலைவி வேறுபட்டமைகண்டு தோழி அவனை எதிர்ப் பட்டு அவனது ஆற்றலையும் இளமையது நன்மையும் கூறிச் செல வழுங்குவித்தது.

வாசம்பொருந்திய நெற்றியுடையவளே! "எனது தலைவர் (போர்புரியும்) படைக்கலங்களைப் புதிதாகச் செய்து தாம் மேற்செய்யும் கருமத்தின் நினைவினால் என்னை முயங்காது மெத்தைகள் பரப்பப்பட்ட படுக்கையிற் கிடந்தார். முயங்குதலைப் பெறாத யான் அவன் புறத்தைத் தழுவினேன். அப்போது அவர் யான் பிரிந்தால் இவள் எவ்வாறு ஆற்றுவாள் என்று பெருமூச்செறிந்தார். இப்பொழுது இவர் கருதிய காரியம் எவ்வகையினது" என்று நினைந்து உனது கூட்டத்துக்கு இடையூறு வருமென்று கருதினவரிடத்து நீ ஒழுகாது மிகவும் ஏங்கி நடுங்காதே.

இவள் அழகு கெட்டு வருந்த நீ பிரிந்து வலிய காவலாலே பகைவர் தந்த நாட்டை விளக்க மிகவும் துணிவை.

அவ்வாறு துணியுமிடத்து பூரணைக் காலத்துக்குப்பின் சந்திரன் தேயுமாறுபோல நாடோறும் நிலைகுலைந்து கெடும் அழகு இவளுடன் நிலைபெறுமோ?

இவள் வலிய காமநோய் வருத்துகையால் அழகு அழிவாள். நீ அவளைப் பிரிந்து பகைவர் தந்த நாட்டைக் காத்து திரண்ட பொருளைப் பெறுவதற்கு முயல்வை. அங்ஙனம் முயலுமளவில் தாமரை முகைக்குக் கூற்றமாகிய அலர்ச்சி அதன் குறைவிற்குக் காரணமாவதுபோல, இவளுக்கு விதித்த வாழ்நாளும் இவளுடன் நிலைபெறுமோ?

இவளது உறுப்பழகும் தோற்றப் பொலிவும் கெடும். நீ மலைந்து பகை கெடுத்து, நாடாகிய பயனைத் தரும் காவற் பிரிவை நினைந்து முயல்வை. அவ்வாறாயின் வண்டுகள் நுகர்தற்கு தாது அலர்ந்த பூவையும் முகையையும் உடைய தடாகம் நாள்தோறும் குறையுமாறுபோல, நாள்தோறும் குறையும். இவளுடன் நிலைபெறுமோ?

பெரிய புகழுடைய தலைவனை அடைந்து அறன் உண்டாக நினைந்து யான் கூறிய வார்த்தைகள் மருத்துவன் ஊட்டிய மருந்துபோல நல்மருந்தாயின. அவன் மனம் மகிழ்ந்து போக்கைத் தவிர்ந்தான்.

## 18

இது, பொருள் வயிற் பிரிய நினைந்த தலைவனை நாளது சின்மையும் இளமையது அருமை முதலியவற்றைக் கூறிச் செலவு தவிர்த்தது.

ஐய! அரிய பொருளிடத்திற் செல்கின்ற ஆசை தூண்டுதலால் பிரிந்துபோயிருத்தலை நினையாதே. நீ தலைவி தோளில் விரும்பி எழுதிய தொய்யில் தருகின்ற அழகினையும், நின்னை வலியாகவுடைய இவள் மார்பிற் சுணங்கின்

அழகையும் கைவிட முடியுமாயின் நினைந்து பார். நீ நன்கு மதித்த பொருளும் சென்றவர்கள் தத்தம் நிலைமைக் கேற்பக் காலம் நீட்டி நின்று தேடுவதன்றி இப்பொழுதே அள்ளிக்கொள்ள ஓர் இடத்திற் கிடவாது. பொருள் தேடப் போகாதிருந்தவர்கள் எல்லாரும் உண்ணாது இருந்தாருமல்லர். இளமையும் இருவரும் ஒத்த காமமும் சேரப் பெற்றவர்கள். விரும்பத் தக்கதொரு நன்மை அச் செல்வத்துக்கு இல்லை. இல்வாழ்க்கையானது தமது நாளெல்லாம் *உள்ளே ஒரோ ஒருபுறத்தில் ஒரோ ஒரு கைகளாலே தழுவி, ஒன்றன் பகுதியாய ஆடையை உடுத்திருப்பவராயினும் பிரியாதிருப்பவர்களுடைய வாழ்க்கையே. வாழ்க்கை கழிந்த இளமை மீண்டு தருதற்கு அரிது.

## 19

இது, பிரிவு உணர்த்தப்பட்ட தோழி செலவு விலக்கவும் பிரிவின்மேற் சென்ற உள்ளத்தினனாயினானை நீ பிரியின் இவள் இறந்துபடும் எனக் கூறிச் செலவு மறுத்தது.

ஐய! வஞ்சனையில வாய் இனிய சொற்களை மெல்லச் சொல்லித் தழுவின அக் களவொழுக்கம் நிகழ்ந்த நாளிற் கூறியவை எல்லாம் பொய்யாயிருத்தலை அறிவில்லாத யான் எங்ஙனம் அறிவேன்? அகன்ற மனையில் உள்ளாரால் அடக்க வொண்ணாத அலரை எம்மிடத்தே தந்து ஞாயிறு கோபிக்கும் வெப்பமான காட்டே போக நினைத்தலை இப்பொழுது அறிந்தேன். இனி நீர் நல்ல தன்மை உடையை அல்லை.

---

* பொருள் இன்மையால் உள்ளே ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு வெளியே ஒரு ஆடையை உடுப்பாராயினும் என்பது இன்மையது இழிவு.

நீர் நினைந்த காரியத்தே செல்வீராக. சென்று அவ்விடத்துச் செய்யும் காரியத்தை முடித்தபின் இவ்விடத்தினின்றும் வருவாரை, "நாம் வருந்தும்படி விட்டுவந்தவராகிய எனது தலைவியின் செய்தி அறிவீரோ" என்று வினவாதீர். வினவின் அவள் இறந்துபட்டிருக்கவும் கூடும். அது கேட்பின் உமது தலைமை அழியும்படியாக அவ்விடத்தில் நீர் புரியும் காரியம் முடியாமல் அவ்விடத்தில் அவலம் பிறத்தலும் உண்டு.

## 20

இது, பிரிவுணர்த்திய தலைவர்க்குத் தலைவி எம்மையும் உடன்கொண்டு செல்மின் என்றற்கு, தலைவன் கானின் கடுமையும் தலைவியின் மேன்மையும் கூறுவது கேட்ட தலைவி நாளது சின்மையும் இளமைய தருமையும் கூறி எம்மையும் உடன்கொண்டு செல்மின் என்றது.

யான் செல்லத் துணிந்த காட்டில், பல உணவுகளையும் விளைந்து கொடுத்து எல்லாரையும் நுகர்விக்கும் பயனையுடைய நிலத்தில் ஞாயிறு கோபத்தோடு தனது கதிர்களைச் சொரியும். அதனால் குளிர்ச்சியை விரும்பிக் கூடும், பசியால் மெலிந்த யானைகளைத் தாங்கும் மலை வெம்ப மண் பிளக்கும். தெளிந்த நீர்நிலைகளும் வற்றிப் புழுதி எழும்.

"கிளிமொழியாய்! அழல்போன்று வெய்ய சுரம் மழை பெய்தலைக் கண்டறியாது. ஆதலின் அக் காடு நின் அடிக்குப் போதற்கு எளியதாயிருக்குமோ"வென்று கூறுகின்றவரே! உமது மார்பிடத்தில் முயக்கத்தை, கண்டார், காற்றினும் காட்டில் ஓர் எல்லையில் அகப்பட்டு நில்லாதவளுடைய வாழ்நாழ் என்று கூறும்படியாக யான் அதனை (முயக்கத்தை) வாழ்நாளாகவுடையேன். ஆதலால் அவலத்

தைக்கொண்டு இவ்விடத்திலிருந்து நெஞ்சழிவேனோ இறந்துபடுவேன்.

"தன்னிடத்து ஊறுகின்ற நீர், அமிழ்தத்தை ஒத்தற்குக் காரணமாகின்ற எயிற்றையுடையாய்! வெஞ் சுரத்து வழி, தண்ணீருண்டலை விரும்பின் நீர் இன்று" என அறத்தைக் கூறுகின்றவரே! யான் உமது நெஞ்சு என்று சொல்லப்படும் தெளிந்த தன்மையை ஆறு நீர் கழிந்தாற்போன்ற இளமையாக உடையேன். ஆதலால் இவ்விடத்தே சுழன்று நெஞ்சழிவேனோ? இறந்துபடுவேன்.

"மாட்சிமைப்பட்ட அழகினையுடைய மூங்கிலை வென்ற தோளினையுடையாய்! நீ வெப்பமான காட்டுவழியே வரின் அவ்விடத்தில் மரங்கள் நின் இளைப்பை ஆற்றும் நிழலை உடையனவல்ல" என்று கூறுகின்றவரே! நீர் நீங்கினால் எனது அழகு நீண்ட நிழலில் நின்ற தளிர்போல வெளுத்தலை அறிந்திருப்பேன். ஆதலால் யான் உமது திருவடியில் அருளைக் கைவிட்டு இங்கே இருத்தலைச் சூழ்வேனோ? இறந்துபடுவேன்.

அவ்விடத்துக் காடு நீ அடைதற்கரிய வெம்மையுடையது என்று பின்னும் கூறுகின்றவரே! கல்லின் நெருக்கத்தால் எய்த அம்பு ஓடாத அரிய வழியிடத்துப் பெரிய கழுத்தினையும் அழகையுமுடைய ஆண் மான் பின் நீங்காமல் திரியும் பெண் மானையும் காணாதிருக்கின்றீரோ? அவை நீர் அறியப் பிரியாவே. ஆதலால் எம்மையும் உடன்கொண்டே சென்மின்.

## 21

இது, தலைவனால் பிரிவுணர்ந்தப்பட்ட தோழி, அவனை நெருங்கிக் களவுகாலத் தொழுக்கம் எடுத்துக்காட்டலாற் றெளிவு

பட மொழிந்து பொருளது நிலையின்மையும் அவளது ஆற்றமை யுங் கூறிச் செலவு மறுத்தது.

*காட்டிடத்தே பால்போன்ற மருப்பும் உரலை ஒத்த அடியையும் மனங்கமழும் மதத்தையும் உடைய இனத்தைப் பிரிந்த யானை வழியைக் காவல்காத்து நிற்கும் இவ்வகை யான வழியே சென்று பொருள் தேடுகின்ற இடத்தே இவளைப் பிரிந்திருந்தால் நெஞ்சு விரும்பும் என்று அருளில்லாத சொல்லை நீ சொன்னாய். எம்மை விரும்பி நல்ல நறிய நெற்றியைத் தடவி நின்னிடத்தினின்றும் பிரியேன். நீ அஞ்சுதலைத் தவிர் என்னும் நன்மையுடைய சொல்லையும் நீ சொன்னாய். அவ்விரண்டினுள் உண்மையுடையது யாது என்று அறிகிலேன். நீ தேடுகின்ற பொருள் இத்தன்மை யோர் நமக்கு உரியவர் என்று கருதாது பிறரிடத்து நின்ற நல்வினையால் மீண்டும் மீண்டும் சென்று தங்கும். உன்னை யின்றி இமைப்பொழுதும் உயிர்வாழாத இளமையையுடை யவளது மூங்கில் போன்ற இரண்டு தோள்களையும் மறந்து பிரிந்திருப்பாயோ?*

## 22

இது, பிரிவு உணர்த்தப்பட்ட தோழி அதற்கு உடம்படாது தலைவனை நெருங்கிக் களவுகாலத்து ஒழுக்கம் காட்டி மறுத்தது.

*அறிவுடைய மாந்தீர்! தாம் வாங்கி உண்ணும் கடனை வழிபட்டு இரந்து வாங்கும்போது முகமலர்ந்திருத்தலும், வாங்கிய கடனைத் திரும்பக் கொடுக்கும்போது முகம் வேறுபட்டிருத்தலும் முன்பும் இவ்வுலகத்துள்ளார் இயல் பாகும். அஃது இன்றும் புதியது ஒன்று அன்று. இது போலவே நீர் மகளிருடைய நலத்தை அவர்களை இரந்து*

தாதைத் தேடி உண்ணும் வண்டுபோல நுகர்ந்து, அதனை அவர் வேண்டின காலத்து அவர்க்குக் கொடாது கேட்டினைக் கொடா நின்றீர். அங்ஙனம் கேட்டினைக் கொடுக்குமிடத்து உதவியற்றவர் கூறுவது யாதோ? நல்ல குணமுடையவர்கள் சித்திரம் எழுதியவன் உயிர் கொடுத்த பாவை அழியுமளவும் அக்குறிப்பு நிற்குமாறுபோல தாம் கூறிய மொழியிடத்து உண்மை கெடார். உமது பொருள் வேட்கையிடத்து உனக்கு ஏதிலளாகிய யான் கூறுவது எத்தன்மையது; பயன்படாதே.

ஐய! எமது பல்லு விழுந்து முளைத்த இளமைப்பருவத்தைப் பாராட்டிவிட்டீர். அப்பருவம் ஒழிந்து முல்லை முகை ஒத்த நிரைத்த நெருங்கிய பற்களுடைய நுகர்ச்சிக்குரிய இளமைப்பருவம் எல்லாம் முன் பாராட்டிவிட்டீரோ? செய்திலையே.

ஐய! நீலமணி போன்ற எமது கூந்தலிற் புழுகு பூசித்தாயர் **ஐந்து வகையாக** முடிந்த இளமைப்பருவத்தை இதற்கு முன்பு பாராட்டிவிட்டீர். அப்பருவம் ஒழிந்து நீதான் அதனிடத்துச் செய்யும் தொழில்களை முற்றுகச் செய்து பாராட்டிவிட்டீரோ? அது செய்திலையே.

ஐய! குளத்தை அழகு செய்யும் தாமரையின் பசிய அரும்பு ஒக்கும் ஊற்றின்பம் மிகவும் இல்லாத எம்முடைய இளமுலையை இதற்குமுன் பாராட்டிவிட்டீர். அப்பருவம் மாறி ஊற்றின்பத்தை மிகவும் உடைய இடையே நீக்கம் இல்லாத ஏந்திச் சிறிது சாய்ந்த முலையிணையுடைய மிக்க இளமைப்பருவம் எல்லாம் முற்றப் பாராட்டிவிட்டீரோ? அது செய்திலையே.

நும்மோடு இவட்குப் பற்று மிகும்படி நல்வினை வந்து நெகிழ்க்கின்ற காலத்து, அதனை நுகராமையாகிய தீவினை வந்து புகுந்தது. ஆகவே அவளது பொன் தகடு போன்று

விளங்கும் * சுணங்கின் அழகு கெடும்படி வெய்யில் கொளுத்துகின்ற சுரத்தே போகும் நும்மை யாங்கள் எமது வருத்தத்தைச் சொல்லி விலக்க எம்மிடத்து நல்வினை உண்டோ? இல்லையோ யாம் கூறுவதென்?

## 23

இது, பிரிவு உணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைவி என்னையும் உடன்கொண்டு செல்மின் என்றாளாக அவன் உடன்படானாக, அவள் அவன் பிரியின் தனது இறந்துபாடு தோன்றக் கூறியது.

ஐயனே, நீர் போக நினைந்த காடோ கொடியது. ஒள்ளிய கொம்புடைய யானையை ஓட்டுவார் அதனை ஓட்டும் கவணால் மரக்கொம்பர்களிலுள்ள பூக்களை உதிர்ப்பர். இவ்வியல்பினதாகிய மலைகள் வெம்பும் போதற்கரிய சுரத்தே நீர் தனித்துப் போக யான் உம்மைக் கைவிட்டிருத்தல் இந்த இரக்கமுடைய ஊரவர்களுக்குச் சிரிக்கத் தக்க காரியமாகும். நீர் பிரிவீராயின் யான் உண்ணவும் மாட்டேன், உயிர் வாழவும் மாட்டேன்.

தோளின் நலத்தை நுகர்ந்த கணவரால் பிரியப்பட்ட மகளிர் தண்ணீர்த் தாகத்தால், கோலித் தண்ணீர் குடிக்கப் பட்ட எச்சிலாற் பயன்படாத குடையோலையை ஒப்பர். அந்நிலையை ஆராய்ந்து பார்ப்பீராக.

மனம் விரும்பிய கணவர், நலத்தை நுகர்ந்துவிடப்பட்ட மகளிர் குடியிருப்பார் போகிய பாழூரை ஒப்பர். அந்நிலையை ஆராய்ந்து பார்ப்பீராக.

மனம் விரும்பிக் கூடின கணவரால், தம் நலத்தை நுகர்ந்து விடப்பட்ட மகளிர் சூடுவார் சூடிப்போட்ட பூவை ஒப்பர். அந்நிலையை அறிந்து பார்ப்பீராக.

* அழகுதேமல்.

நின்னிடத்து யானும் பயன்படாத தன்மையுடையேன். கொலைத் தொழிலுடைய நாய் தனக்கு உரித்தென்று அகப்படுத்திக்கொண்ட மான் அதற்கு உரித்தாகாது வலைக்காரருக்கு உரித்தானாற்போல, எனக்குரித்தாக யான் அகப்படுத்திய என் நெஞ்சு என்னிடத்தில் வாராது உன்னிடத்தில் வரும் என்னைப் பாதுகாத்துக் கொள்.

## 24

இது தலைமகன் குறிப்புக் கண்டு பிரிவன் என ஐயுற்றுச் செல்கின்ற தலைவி, அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றினமை கேட்டுப் பொருள் வயிற் பிரிகின்றனெனத் துணிந்து ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.

இனிய வார்த்தையுடையவளே! நங் காதலர் பிரிவார் என்று நெஞ்சு திடுக்கிடும்படி கேட்டேன்; கேட்டு அதனை உண்டோ இல்லையோ என ஐயுற்றேன். தாம் அஞ்சியிருந்த பொருளைத் தாம் பிறர் சொல்லக்கேட்டால் உண்மையாக வருத்தம் உண்டாகும் என்னும் பழமொழி உண்மையாயிற்று. அது எவ்வாறெனில், எனது ஆருயிர்க் காதலர், பல நாளும் புதிய தன்மையாக என்னைப் பாராட்டினார். யானும் இப் பாராட்டுதல் ஒரு பிரிவைக் குறிக்கும் என்று கருதி அதனை ஆராயா நின்றேன். அவர் ஒரு நாள் தூய அழகிய படுக்கையில் என்னைக் கூடித் தோள்மீது துயில் கொண்டு கனாக்கண்டார். அவர் "ஆராய்ந்த அழகிய இறுகிய வளையல் அணிந்த முன்கையுடைய என் காதலி கவலை யடையாதிருப்பாளாக. குத்தும் கொம்பினையுடைய யானை நீர்வேட்கையினாலே பேய்த் தேரின்பொருட்டு ஓடும் நெடு மலையில் வெப்பமான காட்டுவழியைக் கடந்து சென்று

இருவேந்தருக்கு நடுவாக நின்று அவரைச் சமாதானப் படுத்துவேன். பின்பு அவர்கள் எமக்குப் பூசனையாகத் தரும் பொருள் தந்து முடியுமளவும் இவள் இல்லறத்தையும் காத்துச் செந்தீயையும் ஓம்ப வல்லளோ" என்று அரற்றினர். ஆய்ந்த ஆபரணங்களை உடையவளே! தலைவரின் கூட்டத்துக்கு இடையே நிற்பது பொருள் வயிற் பிரிவாயினும், யாம் அவரைப் பிரிந்து உயிர் வாழும் வலியில்லேம் ஆயினும், "இவள் மார்பிற் *தொய்யிலை நீங்காதார் இப்பொழுது இவளைத் துறந்தார்" என்று சிறு மகளிர் அற்பமாகக் கூறும் பழி அவரிடத்தே நிற்கும். என்னுயிர் அவரோடு கூடச் சென்றது என்று சொல்.

## 25

இது, பிரிவு உணர்த்தப்பட்ட தோழி நீ பிரிந்தால் பேதைமை யில்லாதவர் தொடர்புபோல நம்மை அவர் துறப்பன இவ் வகைப்பட்டன சிலவுளவெனத் தலைவி ஆற்றாமை கூறிச் செல வழுங்கியது.

*திருதராட்டிரனது மக்களுள் மூத்த துரியோதனனது சூட்சியாலே ஐவரென்று உலகத்தாரால் புகழப்படும் தரும புத்திரர் முதலியோர் உள்ளேயாக கையினால் செய்யப்பட்ட அரக்கு மாளிகையை விரைவாக நெருப்புச் சூழ்ந்தது. அது போல மத யானைகள் உள்ளேயாக உயர்ந்த மூங்கிலுடைய மலையைச் சூழ்ந்து அழல் முழங்கும். மதிற் கதவைத் தாழிடும் (கணைய) மரம்போன்ற கையுடையதும் தன் இனத்தைக் காக்கின்றதுமாகிய வேழம், அரக்கு மாளி கையை வீமசேனன் அழித்துத் தனது சுற்றத்தோடே பிழைக்கப் போகின்றவனைப்போலக் குழி உண்டாகும் படி மிதித்துத் தனது கூட்டத்துடன் செல்லும். இவ்*

* தோளினும் முலையினும் எழுதும் கோலம்.

வியல்பினதாகிய காட்டுப் பரப்புச் சூழ்ந்த குன்றுகள் அழன்றுகொண்டிருக்கும் சூடான சுரத்தைக் கடப்பீராயின், ஐயனே! பின்னை இவளுடைய நிலைமையைக் கேட்பீராக.

புறங்கூறுவார், தம்மிடத்து இருந்தவர்களுக்குச் சிறப்புகள் செய்து புகழ்ந்து வாழ்த்துவர். அவர் எழுந்து சென்ற அளவிலே அவர்களுக்குள்ள பழிகளைப் பலர்க்கும் கூறுவர். அவர்களின் உறவுபோல நாம் நீர் கூடியிருக்கும் காலத்து செவ்வியைத் தோற்றுவித்த மலரை ஒத்த தன்மையினை உடையேம். ஆயினும் நீர் சிறுபொழுது பிரியுங்காலத்து நும் பழியைத் தூற்றி அழுதல் மாறாத கண்களாயின என்று சொல்லும் சில பழியும் உளவன்றோ?

அறிவில்லாதவர், ஒருவர்க்குச் செல்வம் உண்டானவிடத்து நீங்காதிருந்து அவருடைய செல்வத்தை நுகர்ந்து பின்னை அவர் வறுமையுற்ற காலத்து அவர்க்கு ஒன்றையும் உதவார். அவ்வியல்பினர் உறவுபோல் நீர் இவ்விடத்தே கூடியிருந்து அருள் செய்யுங் காலத்து இவட்கு உண்டாகிய அழகை வளையல் தானும் பெற்று இறையிற் கிடந்து சிறந்து காட்டிற்று. நீர் பிரியும் காலத்து தோள் மெலிகையாலே அவ்வளை உதவிசெய்யாது கழன்றுபோம். இவ்வாறு சில பகை உளவன்றோ?

பெருமையில்லாதவன், இருவர் பூண்ட நட்பினுள் ஒருவன் கூறிய இரகசியத்தை அறிந்தபின், அவன் சென்றவிடத்து பிறர்க்கிருந்து சொல்லும். அப்பெருமையில்லாதவனது உறவுபோல இவள் நெற்றி நீர் அருள் செய்யும் காலத்து உமது அருளுக்குத் தானும் விளங்கினாற்போல ஒளி மிகுந்தது. இனி ஒரு நாள் நீர் அருள் செய்யாக் காலத்து நுதல் நும்முடைய குணத்தைப் பிறர்க்கு அறிவிப்பதுபோல் பசந்து காட்டும். இதுபோன்ற ஒரு பகை உண்டன்றோ?

யான் நினக்குக் கூறுகின்ற வார்த்தையால் என்ன பயன் உண்டு? அப்பகை யுண்மையை எம்மினுங் காட்டில் நீ நன்றாக அறிந்தாய். அதுவுமில்லாமல், நெடுந்தகாய் இந்த ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களை யுடையவளது அழகு, நீ அருள் செய்தலை நீங்கும் காலத்து, இவ்விடத்து வானம் துளி மாறும்பொழுது இவ்வுலகம் கெடுமாறுபோலக் கெடுங்காண். அதனை உட்கொள்ளாய்.

## 26

இது, பகைமேற் சென்ற அரசன் திறைபெற்ற நாட்டைக் காத்து அதன்கண் தன் நெறி முறைமையைத் தாபிப்பதற் கட் பிரிவன் என்றலின், பிரிவின்கட் தலைவன் பிரிய, இளவேனிற் காலவரவின்கண் தலைவி ஆற்றளாய் அவர் நமக்கு அருளுங் காலையில் அருளார்காண் என்றட்குத் தோழி, அவர் வரவிற்கு இக்காலம் தூதாய் வந்தது அன்றோ? நீ ஆற்றுவீரென வற் புறுத்தியது.

நீர் பெருகுகின்ற கரையில் நிற்கும் வெண் கடம்புகள் ஒரு அழகிய காதணியை உடைய பல தேவனைப்போலப் பூங்கொத்துகளைப் பூத்தன. செருந்தி சூரியனைப்போல் அரும்புகளை அலர்த்தின. காஞ்சியும் மீனக்கொடியுடைய காமனைப்போல் வண்டுகள் ஆரவாரித்தலுக் கிடமாயின. ஞாழலும் அவன் தம்பி சாமனைப்போல் நிறம் விளங்கிய பூக்கள் நெருங்கின. இலவமும் இடக் கொடியுடைய இறைவனைப்போல பூக்கள் பொருந்தின. ஐவர்களுடைய நிறத்தின் தன்மைபோலப் பூக்கள் விரிந்த அக்கரையிடத் துப் பிறமரங்களோடே முன் கூறிய மரங்கள் அழகு பெற்றன. பிரிந்தார்க்கு வருத்தம் உண்டாகவும் கூடினோர்க் குப் பெருமை பொருந்தவும் இளவேனில் வந்துற்றது.

முன்னர் ஆள்பவர் கலக்கக் கலக்கமுற்றுப் பின் தன்னை நிழலாக அடைந்த குடிசனங்கள் வருந்தாதபடி, முன்பு ஆண்ட பகைவரை வென்று அவர்களினின்றும் காத்த புகழை உலகத்தார் புகழும்படி நங் காதலர் நாட்டிலே இருக்கின்றார். அவர் இயற்கை அழகு கெட்ட எனது பெரிய மிருதுவான தோளை புதிய தேனை கூட்டமாகிய வண்டுகள் நுகரும் இளவேனிற் காலத்தே கூட நினைப்பார்.

நம்மைக் காத்தற்கு உரியான் இவனென்று விரும்பி தம்மை நிழலாக வந்தடைந்த குடிசனங்களைத் தமக்குப் பாரமென்று பொறுத்துத் தம் புகழ் உலகெங்கும் பரக்கையினால் அவ்வுலகத்தார் புகழத் தமக்கயலாகிய நாட்டிலே நங் காதலர் இருக்கின்றார். அவர் குற்றமில்லாத என் அழகு கெடுதற்குத் தேனினம் திசைதோறும் திசை தோறும் ஆரவாரிக்கும் திருமருதந் துறையிலே அருளுதல் செய்வார். [திருமருதந் துறையில் என்னுடன் துறை படிந்தாடி அருளுதலைச் செய்வார் என்றவாறு].

முன்பு நாடாண்ட அரசர் செய்த வருத்தத்துக்கு அஞ்சி நிழலாக வந்தடைந்தவர்களுக்கு நெஞ்சு வருந்தாத படி பகைவர் அணுகாதபடி காத்து, அவ்வரசர் தருமம் அல்லாது பொருளை விரும்புகையினாலே அவரை நீங்கின நாட்டிலே இருக்கின்றார். அவர் எம்முடைய அழகிய நெற்றி பசந்து நாமும் வலிய பெரிய அழகை இழப்பதற்கு நீரற்று ஓடுதல் சுருங்கின இளவேனிற் காலத்தே அருளுதலைச் செய்வார்.

இவ்வாறெல்லாம் கூறி மனம் சுழலாதொழி. அதற்குக் காரணம் நங் காதலர் போர் யானையை யுடையராய்ப் போர் செய்தற்கு எதிர்த்து வந்தவர்களுடைய போரிடத்தே நீ கூறியவாறே மேலான நாடுகளைப் பெற்ற வெற்

றியையுடையர். ஆகவே, அவர் வருவர் என்று சொல்லி அவருடைய மெய்மொழியாகிய தூது வந்தது. இனி, தோழி! நீ இனிது வாழ்க.

## 27

இது, தலைவன் குறித்துப் பிரிந்த இளவேனில் வரவின்கண், "எம்மையோ மறப்பது. இக்காலத்து இவ்வூரின்கட் தாம் விளையாடும் விளையாட்டையும் மறந்தாரோ" எனச் சொல்லி ஆற்றாளாய தலைவிக்குத் தோழி தலைவன்வரவு உணர்ந்து கழி உவகையாற் கூறியது.

கொடுப்பதில் குறைகாட்டாமல் கொடுத்து இல்லறம் நடத்தும் முறையை அறிந்து நடத்திய தீவினையில்லாதவனுடைய செல்வம் மிகும். அதுபோல நீர் மிகும் ஆற்றங்கரையில் மரங்கள் தழைத்தன. கேட்டார் மயக்கம் உறுதற்குக் காரணமான மடமொழியினையும் மான்பிணையின் நோக்கினையும் உடைய காதலுடைய மகளிரின் பற்கள் போல மணமுடைய மல்லிகையின் முகைகள் அலர்ந்தன. குளிர்ச்சியுடைய மணல் உதிர்ந்த பூந்தாதுகளாலும் தளிராலும் காதலரைக் கூடினவருடைய மயிர்போல அழகு பெற்றது. இவ்வாறு இளவேனிற்காலம் அறிவில்லாத அமைச்சன் காரியத்தைப் புலப்படுத்தப் படைவலியில்லாத அரசனது நாட்டிலே பகையரசன் படை வந்துவிடுமாறு போலத் தங்குதலைச் செய்தது.

குயில்கள் நிலம் அழகுபெறுதற்கு ஏதுவாகிய மரங்கள் மீது இருந்து இளவேனிலைக் கண்டு காவில் ஆரவாரஞ் செய்யும். அக்குயில்கள் நம்மை இகழும்படி நல்ல அழகிய நமது நிறம் கெடும்படி தாம் விரும்பாத நம்மை அவர் மறப்பாராக. தாம் அணிந்த ஆபரணங்கள் அழகுபெறு

தற்குக் காரணமான அழகுடைய பரத்தையருடைய அழகு தமது மனத்தே மகிழ்ச்சியைச் செய்கையாலே தமது அறிவு பூரிக்கப் பெற்றவரைப் புகழ்தல் மாட்டாத கூடலை அவர் நினையாரோ? நினைக்கில் வருவரன்றோ?

நமது அழகு கெட்டமை கண்டு மலைமேலே மயில்கள் ஆரவாரித்து ஆடும்படியும், ஊரிலுள்ளார் ஆரவாரித்து அலர் தூற்றும்படியும் நமது இயற்கை அழகு மிகக் கெடும்படி, தாம் விரும்பாத நம்மை அவர் மறப்பாராக.

பகைவரை வஞ்சனையாற் கொல்லாது வென்று கொல்லும், பரந்த கடலிடத்து முளைத்து நின்ற மாமரத்தைப் பிளந்த வெல்லும் வேலையுடைய முருகனது திருப்பரங்குன்றின்மேல் பரத்தையருடன் விளையாடும் விளையாட்டையும் விரும்பாரோ? விரும்புவரன்றோ?

என்னை மையலாக்கி நீலமலர்போன்ற கரிய எனது கண்கள் மகிழும்படி தன்னோடே மருவுதல்செய்து, தான் செய்த பொய்யாலே மனம் தன்னிடத்திலே பொருந்திய, விரும்பாத நம்மை மறப்பாராக. கோலஞ்செய்த பரத்தையர் கூட்டத்தோடு மனம் விரும்பி விளையாடும் வையையாற்றிடத்து நீண்டு உயர்ந்த மணலிடத்து நுகர்ச்சியையும் நினையாரோ? நினைக்கில் வருவரன்றோ?

தோழி! நோய் மிக்க நெஞ்சோடு வருந்தா தொழி. நமது காதலர் தனியராயிருப்பின் அது நாம் இல்லாத தனிமையாகும். காலமோ பிரிந்தார்க்கு நடுக்கஞ்செய்யும் இளவேனிற்காலமா யிருந்தது. ஊரிலுள்ளார் கொண்டாடும் விழாவோ காமவேளுக்குச் செய்யும் விழாவாயிருந்தது. ஆதலால் நம் காதலி மிகவும் கலங்குவாளென்று கருதி வலிய வேகமுடைய தேரை விரைந்து செலுத்தித் தாம் எமக்குத் துணையாயிருக்குந் தன்மையை எமக்குத் தந்தார்.

# 28

இஃது, இளவேனில் வரவின்கண் ஆற்றாத தலைவி தூது விடக் கருதத் தோழி, அவர் பிரிந்திருந்தவை நம்மினுந் தாம் வல்ல ரல்லரெனச் சொல்லி வற்புறுத்தியது.

பூக்களைப் பறிப்போர் சுனையிடத்துள்ள பூக்களைப் பறிக்கவேண்டா. நாங்களே தருகின்றோம் என்று சொல்வதுபோல மரங்கள் தமது கிளைகளில் வண்டுகள் பாடுகின்ற மலர்களைத் தாங்கி அவற்றைக் கொடுப்பனபோல இதழ் விரிகின்ற கண்ணிகளை மகளிர் கட்டிச் சூடும்படி தாழ்ந்து கொடுத்தன. இவ்வாறு துறைதோறும் மரங்கள் அழகு பெறும்படி நின்றன. மகளிரின் சிவந்த தலைக்கோலம் தங்கின மயிர்போல் வையையாற்றின் சிலவிடங்கள் சிவப்பு மணல் உடையனவாயிருந்தன. அவ்வாற்றில் வாரடித்து ஓடும் கருமணல் திருமகளுடைய மார்பிடத்தே கிடக்கும் முத்தாரம்போலவே ஊடாகச் செல்லும்.

வளைந்த இறையை உடையவளே! மலர்கள் மலர்ந்து முடிவடையாவாயினும், குயில்கள் தம் பேடையை அழைத்துக் கூவுமாயினும், நமது தலைவர் நம்மைப் பிரிந்து பின் நினையாராயினும், அரிய துயரைச் செய்யும் காம நோய்க்கு இவள் தாங்கி இருப்பாள் என்று கருதாது இவள் இறந்துபடுவள்என்று நீ வருந்தும்படி எனக்குக் காம நோய் மிகுமாயினும், அவர் நம்மாட்டுச் செய்யும் அருள் என்ன பயனைத் தரும்?

சிறிய பற்றைகளில் மலர்கள் இருப்பனவாயினும், வண்டுகள் சோலையிடத்தனவாயினும் அயலார் அலர் தூற்றுவராயினும், நம் தலைவர் நம்மைப் பிரிந்து பின் நினையா ராயினும், பசப்பு நெற்றியில் படருமாயினும், அசைகின்ற வளையுடையவளே! நம்மாட்டு அவர் செய்யும் அன்பு என்ன பயன் தரும்?

வருகின்ற நீர் மணலிடத்தே சுவறினதாயினும், கொம்பர்களிடத்துள்ள பூக்களில் வண்டு ஆரவாரிக்குமாயினும் மாவிடத்துத் தளிர் உள்ளனவாயினும், நந்தலைவர் நம்மை மறந்து நினையாராயினும், அழகை இழந்த கண்கள் உறக்கத்தைக்கொண்டு ஆற்றியிராமல் தனிமையால் உண்டான நோய் மிகுமாயினும், பசிய வளையல் அணிந்தவளே! நம்மிடத்து அவர் செய்யும் அன்பு என்ன பயனைத் தரும்.

ஆயிழாய்! இவ்வாறு பயனில்லாது கூறுதலை ஒழி. தொலைவான நாட்டில் உறைகின்றவருக்கு எமது வருத்தத்தைச் சொல்லி நாம் தூது போகவிடவேண்டா. இக்காலத்து நம்மினும் தாம் பிரிந்திருத்தலைத் தாங்கமாட்டாதவராய் விரைந்து வருவர். ஆதலால் வருந்தி என்ன காரியஞ் செய்கின்றாய்.

## 29

இது, பருவ வரவின்கண் ஆற்றாத தலைவியைத் தோழி வற்புறுத்த, அதனை எதிர் மொழிந்தாளுக்கு, தோழி அவன் வரவு உணர்ந்து கழியுவகையாற் கூறியது.

கருப்பந் தங்கியகாலத்துப் பெண்ணுக்குத் தோன்றும் வயாநோய் அவளது இளமைக்காலத்து அழகைக் கெடுக்கும். அதுவல்லாமல் அவள் மிக வருந்துகையால் அதைக் கண்ட சுற்றத்தாரும் வருந்துவர். பின்னர் அவளின் மெய்நோக்காடு கண்டு சுற்றத்தார் வருத்தமுறும்படி அவள் புதல்வனை ஈன்றெடுப்பாள். பின் அப்புதல்வனைக் கொண்டு தனது குடி எல்லாம் பாதுகாத்திருப்பாள். இதுபோல உழவர் உலகில் பயிரை உண்டாக்குவர். இடையில் வந்த நோய்க்கு வருந்திய வருத்தம் நீங்கும்படி உலகம் தானீன்ற உணவுகளைக்கொண்டு குடிமக்களை எல்லாம் பாதுகாக்கும்.

அவள் தனது ஈன்ற அணிமை தீர்ந்து புதிய அழகு பெற்றாற்போல, இளையோர் இழைத்த வண்டற் பாவையும் பூவும் கலந்து கிடப்பனபோல, வார்ந்த மணலில் பூக்கள் உதிர்ந்து கிடத்தலினால்தான் (உலகம்) ஈன்ற பசுமை தீர்ந்த அழகு தோன்றும். ஆறிடு மணலை ஊடறுத்துச் செல்லும் நீர் ஒழுங்கு அவ்விளைய மகளிருடைய மயிர்போல விருக்கும். மாமை நிறத்தையுடையவளின் மார்பிற் படர்ந்த சுணங்கு போல மாவின் சிறிது முற்றின தளிர்மேலுள்ள பூவின் தாது உதிரும். இவ்வாறு இளவேனிற்காலம் வந்தது.

சிலவார்த்தைகளைப் பேசுகின்றவளே! தூரத்தே பிரிந்தாரிடத்திற் சென்ற என் நெஞ்சினை ஆற்றிக்கொண்டிருக்கவேண்டுமென்று நீ சொல்லும் அளவுக்கு அதிகம் ஆற்றி நிற்பேன். அதனாற் பெற்றதென்? யான் ஆற்றியிருத்தலை மீறும்படி, வாடைக்காற்று, விரிந்து பனி ஏற்று நின்ற விரவிய பல மலர்களை அளைந்துவந்து பிரிந்தோர்க்கு நோய் செய்தற்குக் காரணமான இளவேனிலின்கண் வருத்தத்தைத் தரும்.

விளங்குகின்ற ஆபரணங்களையுடையாய்! இளவேனிற் காலத்து நம்மை நினையாராய் மறந்தவரிடத்தில் மனம் செல்லுதலால் என் மேனி வாடும். அதனைப் பிறர் அறிதல் கூடாதென்று கருதி அப்பொழுதே மறைப்பேன். அதனால் பெற்றதென்? யான் அவ்வாறு மறைப்பதைக் கைக்கடங்கும்படியாக படுகின்ற ஞாயிறு அவர்த்தின பூவின் தேனை உண்ணும் தும்பியின் யாழோசை ஒத்த முழங்குகின்ற ஓசையுடைய மாலைக்காலம் வந்து வருத்தத்தைத் தரும்.

குற்றம் நீங்கிய வார்த்தையுடையாய்! வளையல்களை நிற்கின்ற நிலையினின்று நெகிழப் பண்ணினவரிடத்து நின்று தோய்கின்ற என்னுடைய அரிய உயிரை அவரிடத்துச் சென்று நெருங்காமல் காக்கத் துணிவேன். அதனால்

பெற்றதென்? யான் அங்ஙனம் துணியவும் வண்டுகள் திறந்து உண்ணும்படியாக நிரையாக இதழ்கள் விரிந்த மணமுடைய மலர்கள் நாறும் நாற்றம், நிலாவுடைய இராக் காலத்தே வந்து வருத்தத்தைத் தரும்.

என்று இவ்வாறு சொல்லி வருந்தியிருந்தாய். உன் வளைகள் கழலும்படியாகச் செய்த தலைவன் பொருள் தேடுதற்குத் தொலைவிடத்தே சென்றிருந்து, நின் பற்கள் தோன்றக் கூறும் உனது தேன்போலும் மொழியை நினைந்து நம் அரிய துயர் களையவந்தார். இனி நீ வருந்தாதிருப்பாயாக.

## 30

இது, பருவ வரவின்கண் ஆற்றாத தலைவி கழிந்தது நினைந்து, “அவர் நம்மாட்டு அன்பிலராயினும் சொல்லுவார் உளராயின் இக்காலத்து இவ்வூரின்கட் பண்டு தாம் விளையாடியவாறு நினைந்து வருவர்” எனக்கேட்ட பாணன் பாசறைக்கட் சென்று தலைவனைக் கண்டு கூறியது.

செய்தற்கு அரும் தவங்களைச் செய்தவர்கள் குறைவற்ற போகங்களை நுகர்வர். அதுபோல அரும்புகள் விரிந்து ஒழியாத கிளைகள் தோறும், தான் விரும்பிய தாதை உண்டு ஒலிக்கும் வண்டோடு கருந்தும்பிகளும் வருத்தம் தீர்ந்து மரங்களின் எவ்விடங்களிலும் தங்கும். இவ்வாறு இளவேனில் வந்தது.

இக்காலம் வெயிலின் ஒளியைக்கண்டு அறியாத விரிந்த மலருடைய குளிர்ந்த சோலைகளில் குயில் கூவுங் காலமென்று நங் காதலருக்குக் கூறுவார் இலர். கூறுவார் சிலர் உளராயின் யாம் துயிலின்றி யாமக்கடலை நீந்த தான் மயிலின் சாயலுடைய பரத்தையரை மருவியும் அவருடன்

மடுக்களில் ஆடியும் நம்மை மறந்து அவர்களிடத்தில் தங்கியிருப் பாரோ?

இக்காலம் அடங்காத புகழுடைய மதுரையில் அரும்புகள் அவிழ்ந்த நறிய முல்லையிலே தேனினம் ஆரவாரிக்கும் காலம் என்று அவருக்கு அறிவிப்பார் இலர். கூறுவார் உளராயின் நடுயாமத்தே யான் மிகுந்த வருத்தமுற, தான் மூங்கிலின் அழகையும் அணையின் மென்மையையுமுடைய தோளையும், மானின் நோக்கத்தையுமுடைய பரத்தையருடன் கூடி நம்மை மறந்து அவர்களிடத்தில் தங்கியிருப் பரோ?

இக்காலம் பெறுதற்கரிய இளவேனிற் காலத்துடனே, பெரிய பூங்கொத்துகளுடைய ஆற்றிடைக் குறையைப் பக்கங்களில் வையை ஆறு சூழ்ந்து அறலுண்டாகும்படி பாயும் என்று அவருக்குச் சொல்லுவாரிலர். சொல்லுவார் உளரேல், தம்மை அடைதற்குரிய யாம் ஒளி கெடும்படி காமனுக்கு எடுத்த திருநாட்காலத்து ஆபரணமணிந்த பரத்தையருடன் விளையாடுவரோ?

இது பாணன் கூற்று:—காமநோயினால் வருந்தி ஆற்றாத பெருமையுடைய நின் காதலி, உனது அடியைப் பணிந்து சேராத பகைவரைப்போலப் பெரிதும் நடுங்குகின்றாள். அவள் அழகைப் பெறும்படி அழகு விளங்கின நெடிய திண்ணிய தேரைச் செலுத்துவாயாக.

## 31

இஃது இளவேனிற் காலத்து வருதல், அந்துணையும் ஆற்றியிரு என்று நாடு பெறும் அவாவால் அரசன் சென்ற வழி, முன்பனிக் காலமும் பின்பனிக் காலமும் வந்து வருதலின் ஆற்றாத தலைவியை தோழி, வருவரென வற்புறுத்தவும், அதனை

எதிர் மறுத்துக் கூறிய வழி, தலைவன் யாங் குறித்த பருவம் வருந் துணையும் ஆற்றியிராளோனப் பின்பனிக் காலத்து வருகின்ற வரவு உணர்ந்து தோழி கழி உவகையாற் கூறியது.

ஆறு கூதிர்காலத்திற் பெருகியது போலல்லாமல் வேகங் குறைந்து வற்றி வாய்க்கால்களாக ஓடித் தெளிந்து அழகு பெறும். பெரிய குளங்களின் பக்கங்களில் நுண்ணிய மணல் தோன்றும். அம்மணல்மீதுள்ள கருமணல் மறையும்படி அழகு செய்ததுபோல ஈர்ங்கையின் வாடிய பூ காம்பு கழன்று விழுந்திருக்கும். கணவரைப் பிரிந்த மகளிரின் நெற்றிபோல முன் பூத்த பீர்க்கு இப்பொழுது பூவின்றாய்க் கிடக்கும். தாம் காதலித்த தலைவரைக் கூடிய மகளிர் முகம்போல் தாமரைப்பூவைப் பொய்கை பூக்கும். இவ்வாறாக முன்பனிக் காலத்துக்கும் பின்பனிக் காலத்துக்கும் இடையாய் நின்ற இளவேனிற் காலம் வரும். ஆயிழாய்! நம்மைக் கூடினவர் தப்பாமல் வருவேன் என்று கூறின காலம் அதுவாகும். அக்காலம் வரும் துணையும் ஆற்றியிராது முன்பனிக் காலத்து வராமையாலும், மெய் வளைதற்குக் காரணமான பின்பனியாலும் உண்டாகிய சோர்வு இறந்துபாட்டை நமக்குத் தருதலால் நெஞ்சு கலங்குகின்றது. யான் எங்ஙனம் ஆற்றுவேன்?

இந்த அசைதலையுடைய வாடைக் காற்று, உலகுக்கு உணவை விளைவிக்கும் சந்திரனின் கிரணங்கள் பால்போல் விளங்கும் இராக்காலத்து, விளங்குகின்ற ஆபரணங்கள் குளிரும்படி வந்தது. இரண்டு படைகளும் கலந்து செய்யும் போரிலே பகை அரசனைக் கொன்று அவன் நாட்டைக் கொண்டு யானைமீது வரும் அவருடைய வீரத்தால் பிறந்த அழகை நாம் கண்டு நுகரும்படியாக அவ்வாடைக் காற்று நம் உயிரைக் கொள்ளாது விடுவதொன்றாய் நின்றதோ?

இம்மழை நீண்ட கரும்பில் உயர்ந்த பூவை நிறம்

கெடும்படி காற்றால் தூற்றி தோள்கள் குளிரால் வருந்தி நம் மார்பைச் சேரும்படி தூறுகின்றது. வாளாலே வென்று நல்ல குதிரையை ஏறி வரும் அவருடைய வீரத் தாற் பிறந்த அழகை நாம் கண்டு அனுபவிக்கும்படி அம் மழை நம் உயிரைக் கொள்ளாது விடுவது ஒன்றாய் நின் றதோ ? புகைபோலச் சிறிய பற்றைகளைச் சூழ்ந்துகொண்டு பூவாக மலர்ந்து தேன் பொருந்தாத அரும்பு போன்ற பல் லின் முனைகள் கொட்டும்படி பனி மிகுந்திருக்கும். பகையை வென்று திறையை வாங்கிப் பாய்ந்து செல்கின்ற குதிரை பூட்டிய தேரில் வரும் அவரின் வீரத்தாற் பிறந்த அழகை நாம் கண்டு நுகரும்படி அப்பனி நம் உயிரைக் கொள்ளாது விடுத்தது ஒன்றாய் நின்றதோ ?

விளங்குகின்ற ஆபரணங்களையுடையவளே ! பயனில் லாதவற்றைக் கூறாதே. கூற்றுவனை ஒத்தவேற் படையை யுடையவர் தான் சொல்லிச் சென்ற நாளெல்லையில் வரு தற்கு இன்னுஞ் சிறிது நாட் செல்லும் என்று இவள் ஆற்றா மையால் வருந்துவள் என்று கருதி கூடலிலே நெடிய வெற் றிக்கொடி கட்டும்படியாகப் புகுந்தான்.

## 32

இது, தலைவி கால வரவு கண்டு ஆற்றளாய விடத்து, தோழி காலத்தை நோக்கி "வந்து அழகிதாகச் செய்தாய்" எனச் சொல்லி தலைவிக்கு, "நங் காதலர் வருகின்றாரெனச் சொல்லி வந்த தூது இது காண். நாம் விருந்தயர் வோம்" எனச் சொல்லியது.

மேகம் மழை பெய்யாமையால் புலர்ந்த கருமணல் கத்திரிகைகொண்டு இடையே நறுக்கப்பட்டிருக்கும் மேகம் போன்ற கரிய ஐந்து பகுதியுடைய மயிர் போன்றது. நறுக்கி ஐதாக்கப்பட்ட ஐம்பாலில், விளங்குகின்ற ஆபர

ணங்களுக்கு இடையே செருகிவைத்த பொன்னாற் செய்த மாலைபோல அந்த மணலிலே முறுக்கவிழ்ந்த பல பூக்களும் வேங்கையின் விரிந்த பூக்களும் ஒழுங்காகக் கிடக்கும்.

தெளிந்த நீராலும் நல்ல நிலவுடைய நாளாலும், புதல் வனை ஈன்றவளுடைய வயிற்றிலுள்ள தேமல்போல நெய்ப் பினை உண்டாகும் மாந்தளிராலும், அறிவாற் பெரியவர் தங்காரியம் முடிதற்குரிய காலம் வருந் துணையும் அடங்கி யிருக்குமாறுபோல காலம் வருந் துணையும் மலராத அரும்பு களையுடைய கொம்புகளாலும், வாசித்தவரது யாழோசை போல வண்டுகள் ஆரவாரிக்கும் சிறிய பற்றைகளாலும், நல்ல மகளிருடைய கூத்துக் கண்டார்க்கு விருப்பஞ் செய்யு மாறுபோல விருப்பம் வந்த பூங்கொம்புகளாலும், நிலையா மையை உணர்ந்தவருடைய கொடைபோல பூங்கொத் துகள் அலர்ந்து எல்லார்க்கும் பயன்படும் மரத்தாலும், அன்பாற் கூடினவருடைய புல்லுதலைப்போலப் பின்னுத லுற்ற கொடியாலும் பொழில்கள் அழகைப் பெறவந்த இளவேனிலே! அழகுபெற எப்பொழுதும் வருவை என்று நம்பி யிருந்தார்க்கு நீ மிகவும் நல்லையோ?

இளவேனிலை நோக்கிக் கூறியபின் தோழி தலைவியை நோக்கிக் கூறுகின்றாள், "இவ்விளவேனில், குளிர்ந்த அருவி யின் அருகே நின்ற நறிய முல்லையின் மகளிர் பற்களை ஒக் கும் பூக்களை வாசம் கமழ்கின்ற திரண்ட மயிருக்கு நிறையக் கொய்து கொள்மின் என்று கூறுநிற்கும். அதுவுமல்லாமல் உலகில் பசந்து வருந்தும் காமநோயைத் தனக்குப் பகை என்று கருதி ஓட்டி, சிறப்பாக நமது இனிய உயிர் உண் டாக்கும் மருந்துமாய், நாம் துயர் தீர்தற்குக் காரணமான வார்த்தையோடே நாம் முயங்கிய காதலருடைய தூதாய் இவ்விளவேனில் வந்தது. ஆதலால் அக்காலத்துக்கு விருந் தானவற்றை நாம் செய்வோம்" என்றாள்.

## 33

இது, பருவ வரவின்கண் தோழி வலிட்டுறுத்திக் கூறியதற்கு எதிர்மறுத்து ஆற்றாளாயினாளை அவள் தலைவனது வரவு உணர்ந்து ஆற்றுவித்தது.

தான் விளைவித்தலின் பெருமை அடைந்த ஆறு, உலகின் பெரிய அழகைக் காணவேண்டிக் கண் விழித்துப் பார்த்ததுபோலப் பக்கத்தே கிடந்த நீர் நிறைந்த குளங்கள் பூக்களால் அழகு பெறும். பளிங்கு மணியை ஒக்கும் கண்ணாடிக்குள் பவளங்கள் அழுத்தப்பட்டுத் தோன்றினாற் போல அரும்ப விழும் முருக்கின் இதழ்கள் குளங்களிலே காம்பினின்றும் கழன்று விழும். தெளிந்த குளங்களிலே தம்மையும் தாம் ஊதும் பூவையும் கண்டு அவ்விடத்தே வண்டுகள் சேர்ந்து ஆரவாரிக்கும். இவ்வாறாக கரையினின்ற மரங்கள் எல்லாம் அரும்புகள் அலர்ந்து பல மலர்களைச் சூடினாற்போலப் பூக்களைச் சூடும். எம்மைப்போலன்றி கணவரைக் கூடினவர் தழுவிய கையை நெகிழாது பூந்தாதை உதிர்க்கும் இளவேனில் வந்தது. பூப்போன்று அழகிய எமது கரிய கண்கள் வருந்த நம்மைக் கைவிட்டவர் வாராராயினர்.

இளவேனிற் காலத்தே நெருப்பின் உருவை ஒப்ப இலவம் பூக்கும். பொரியின் உருவை ஒப்பப் புன்குகள் பூ உதிர்க்கும். புதிய மலர்களையுடைய கோங்குபொன் எனும்படி தாதை அலர்த்தும். அது தனித்திருப்பாரை இவ்வூர் இகழ்ந்து அலர் தூற்றும் கொடுமையை ஒக்கும். அது, பசப்பு எனது அழகை மறைப்பதுபோன்றிருந்தது.

பிரிந்த மகளிரை நகைப்பதற்கு நம் காலம் வரவில்லையே என்று வருந்தியிருந்து, அது வந்தபின் எமது வருத்தங் கண்டு சிரிப்பனபோல கொம்புகள் மிகுந்த பூவைப் பூத்தன.

அதனைக்கண்டு எனது நெஞ்சு வருந்தித் தலைவரை நினைந்து அழிவதுபோல இராநிற்கும். மயில்கள் நம்மை இகழ்ந்து திரண்டு ஆடுவனபோலே இராநிற்கும். நம் கைவளைகள் நாம் காப்பவும் கழல்வனபோலவும் இராநிற்கும். என் கண் போலே நீர் ஒழுகும் இளவேனிற் காலத்திலும் வாரார். ஆதலால் இந்நோய் இனி இந்நிலையினும் மிகுவதுபோல இராநிற்கும்.

நரம்பின் இசையை தானத்திலே நிறுத்தும் வங்கியம் என்னும் குழல்போல ஒலிக்கும் வண்டோடு தும்பி தாதை ஊதா நின்றது. நமக்கு வருத்தம் தரும்படி இனிய குயில் கூவாநிற்கும். இவ்வளவிலும் தலைவர் ஒரு தூதாயினும் வரவிட்டாரல்லர். அவர் நம்மைத் துறப்பாரோ, துற வாரோ.

அதுகேட்ட தோழி, நீலப் பூப்போலும் கரிய கண்ணினை யுடையாய்! நீ மனம் வேறுபட்டு நம்மை இகழும் குயிலையும் தலைவரையும் புலவாதேகொள். தாம் வரும் நாளின் எல்லையை நம் நெஞ்சிலே நிறுத்திச் சொல்லிய கூற்றுக்கள் பொய்யாகா. மாலை அணிந்த அகன்ற மார்பை யுடையவர் காற்றுக்கும் வேகமான தேரை விரைவாகச் செலுத்தி நமது நெளிந்த கூந்தலைப் பின்னின பின்னல் விடும்படி விரைவாக வந்தார்காண் என்றாள்.

## 34

இது, பருவங்கண்டு தோழி வருவர் என்று வலியுறுத்தியதை எதிர்மொழிந்து ஆற்றாளாய தலைவிக்கு அவன் வரவு உணர்ந்து கழிஉவகையாற் கூறியது.

அகன்ற ஆறுகளின் நீர் பெரிய உலகில் உயிர்கள் எல்லாம் நிலைபெறும்படி பல வாய்க்கால்களால் சென்று

பரக்கும். பரந்து மன்னுயிர்களை ஊட்டிப் பாதுகாக்கும். ஆற்று நீர் வற்றியபின்பு வாய்க்கால்களால் சிறிது நீரோடு மணல் செல்லும். தமக்கு முன்பு ஓர் உதவியைச் செய்தவர் கெட்ட விடத்து பெரியவர்கள் மறுபடியும் ஓர் உதவியைச் செய்வர். அதுபோல் அவ்வாறுகள் அழகு பெறும்படி, அந்நீரை உண்ட கொப்புகளினின்றும் வண்டுகள் ஊதும் பல மலர்கள் ஆற்றில் சொரியும்படி இனிய இளவேனிற்காலம் வந்தது.

அலர்ந்த காஞ்சிப்பூவின் தாதை அளைந்து கரிய குயில்கள் கூவாநிற்கவும், இக்காலத்தே பிரிந்துறைதற்கு அஞ்சாதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன். அதனாற் பெற்றதென் ? பொய்ச்சாட்சி சொன்னவன் நிழலுக்கிருந்த மரம்போல யான் அழகு கெடும்படி என் நெஞ்சு காமத்தீ கொளுத்தி என்னைச் சுடுமாயின் யான் அதற்கு என் செய்வேன் ?

(பொய்ச் சாட்சி சொன்னவன் பாவத்துக் கஞ்சி மரம் அழகுகெடும் என்றவாறு.)

பூவின் பாரத்தால் தளர்ந்த கொம்பின்மேலே வண்டின் கூட்டம் தங்கவும் நிறை என்னும் குணம் தளராதவருடைய கொடுமையை யான் மறையாநிற்பேன். அதனாற் பெற்றதென் ? மறைப்பினும் நாடாளும் முறைமை தளர்ந்த அரசன்கீழ் இருந்த குடிமக்களைப்போலக் கண்கள் கலங்கிப் பொறுத்தல் ஆற்றாது நீர் ஒழுகுமாயின் அதற்கு என் செய்வேன்.

முறுக்கவிழ்ந்த பூக்களையுடைய கொம்பரிடத்தே வண்டுகள் யாழ்போல ஒலிக்கவும் கொண்ட கோட்பாட்டினைக் குலையாதவருடைய தீமையை மறையாநிற்பேன். அதனாற் பெற்றதென் ? மறைப்பினும் சுற்றம் கெட வாழ்பவன் செல்வம் கெடுமாறுபோல் தோள்கள் அழகழிந்து

வளைகள் தங்கப் பெறுவாய் நெகிழ்ந்து கழலுமாயின் யான் அதற்கு என்ன செய்வேன்?

நின் நெஞ்சின் நோய் கூறி நீ சுழலாதே. ஏடி! நாம் வருவமெனெ எண்ணியிருந்த நாளெல்லை கடவாமல் கண் தருகின்ற வருத்தத்தைக் கைநீக்கினாற்போல் வந்தார்.

## 35

இது, வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி இக்காலம் அல்லவோ அவர் வருமெனச் சொன்ன காலம் என வன்புறை எதிர் அழிந்தாளை நீ துனி கொள்ளேல், அவர் வந்தாரென தலைவன் வரவு உணர்ந்து தோழி ஆற்றியது.

உள்ளம் சோம்புதலில்லாதவன் செல்வம் பெருகுமாறு மரங்களிடத்தே பூக்கள் மிகும். அவன் முயன்று வருந்திப் பெற்ற செல்வத்தை வருந்தாமற் பெற்று உண்பவர்களது நுகர்ச்சிபோல அம்மரங் கொம்பர்களிலே வண்டுகள் தேனை உண்டு ஆரவாரிக்கும் கரிய நிறமுடையவளின் மேனி போலத் தாளி பூக்கும். அந்நிறத்திற் பரந்த சுணங்குபோல அத்தளிர்மீது தாது விழும். அம்மலர் பரந்த சோலையை அடுத்து பளிங்குபோலும் நீரையுடைய குளங்கள் வற்றாது நிற்கும். பூப்பரந்த துறைகளை அணுகி அம்மணலை அலங் கரித்து நீர் பாயும். இவற்றின் மேலே இருந்து பகையாற் பிரிந்திருந்தாரை மிக இகழும் குயிலைப் பார்த்து வருந்திய நெஞ்சத்தோடு அவர் நம்மைப் பிரிந்து இனி நினையார் என்று கருதி நீ வெறுப்புக்கொள்ளாதே.

விளங்குகின்ற நெற்றியையுடையாய்! நாம் நிறுத்த நில்லாவாய் கண்கள் நீர் வடிக்க, முயங்கி அதனை நிற்பாட்ட அவர் இள்ளகாலத்தில் வருவோமென்று சொன்னார். அக் காலம்தான் வண்டுகள் ஆரவாரித்து, இன்பம் அளவிட

முடியாதனவாய் ஆற்றின் உயர்ந்த இடுமணலிடத்துக் குளிர்ந்த அருவி நீராலே வளர்ந்த நறிய முல்லைப் பூவிற் றுதையுண் இவ்விளவேனிற்கால மல்லவோ?

ஒள்ளிய ஆபரண மணிந்தவளே! "நீ எடுத்துக் கொண்ட காரியம் வெற்றியுண்டாவதாக" வென்று கூறித் தொழுது நாம் வழியனுப்ப அவர் நமக்கு வருவோமென்று உரைத்த காலம், பெருகியகாலத்து நீர் நிறைந்த ஆற்றிடைக் குறையிலே அவர் தம்மை மகிழும் பரத்தையரைக் கூடிக் காமனுக்கு நிகழ்த்துகின்ற விழவிடத்தே அவருடனே விளையாடும் இவ்விளவேனிற்கால மல்லவோ?

விளங்குகின்ற ஆபரணங்களையுடையவளே! இறந்துபடுவோமோ ஆற்றியிருப்போமோ என்று பலவற்றை ஆராயும் நெஞ்சினையுடையோமாய் நாம் வருந்தி வழியனுப்ப அவர் நமக்கு வருவோமென்று உரைத்த காலம், நிலத்தி லுள்ளார் புகழும் நீண்ட மாடங்களையுடைய மதுரையி லுள்ளாராகிய சான்றோர் நாவிற் பிறந்த கவிகளின் புதுமையைக் கொண்டாடும் இவ்விளவேனிற்கால மல்லவோ.

தம்மை நினைக்கும்பொழுதெல்லாம் நெஞ்சழியும் நினது வருத்தத்தையுடைய காம நோய்க்கு இளைப்பாறுதல் அளிக்க நின் தலைவர் நினைந்தார். பறவைபோற் பறக்கும் தேரையும் பொதிய மலையையுமுடைய பாண்டியனது தப்பாத மொழியைப்போன்ற எல்லை தப்பாத நாளோடு, நம்மை விட்டு நீங்கிச் சென்ற காதலர் நம்மைக் கூட வந்தார்.

## 36

இது, காலங்கண்டு ஆற்றாத தலைவியது நிலைமை கண்டு ஆற்றாத தோழி, தான் ஆற்றாளாய் அவட்குக் கூறியது.

தோழீ! காமனுக்கு எடுக்கும் விழாவை எதிர்கொள்ளும் இளவேனிற்பருவம வந்தது. கலப்பைப் படையினையுடைய பலதேவனுடைய தாழ்பமாலைபோல உயர்ந்த வெண்கடம்பின்மீது மயில்கள் இருக்கும். அதில் வண்டுகள் யாழ்

இப்பாலைக் கலியில் வரும் பொருள்களை நோக்குமிடத்து இது மற்றைச் சங்க நூல்களிலும் பிற்பட்டதாதல் தெள்ளிதில் விளங்குகின்றது. கலித்தொகையில் வரும் ஒவ்வொரு பகுதியும் ஒவ்வோர் காலத்திற் செய்யப்பட் டிருக்கலாம்.

## The works of N. S. KANDIAH PILLAI

**Tamilagam:** Prescribed as a Text Book for Vidwan Examination of the Madras University from the year 1935 onwards, and as a text book for M. A. Examination of the Annamalai University.

**Tamilar Charitram:** Prescribed as a text book for Vidwan Examination of the Madras University.

# குறிஞ்சிக்கலி

## குறிஞ்சித்திணை

மலையும் மலைசார்ந்த இடத்தும் வாழும்மக்களின் காதல் ஒழுக்கத்தைக் கூறும் பகுதி குறிஞ்சித்திணை எனப்படும். மக்கள் ஆதியில் வேடராய் அலைந்து திரிந்தபின் சிறிது முன்னேற்ற மெய்தி மலைகளில் தங்கி வாழ்க்கை நடத்தினர். இக்காலத்தில் அவர்கள் மலையிற் கிடைக்கும் தேன் கிழங்கு காய் கனி முதலிய பிரயோசனங்களையும், வேட்டையாடிப் பெறும் விலங்குகளின் மாமிசத்தையும், மலை நெல் தினை முதலிய புன்செய்களையும் கொண்டு சீவித்தனர். மலைகளிலே சிறிய இல்லங்களமைத்து வாழ்ந்த கானவரின் மைந்தரும் மகளிரும் மரஞ் செறிந்த மலை ஒதுக்குகளில் ஒருவரை ஒருவர் தனியே எதிர்ப்பட்டுப் பிற ரறியாவகை மறைவிற் காதலித் தொழுகிப் பின்பு பலர் அறியக் கிழவர் கிழத்தியராயினர். காதல் ஒழுக்கக் காலங்களில் நிகழக் கூடியவற்றை நாடக முறையாகச் சிறப்பித்துப் பாடப் பட்டனவே அகப் பொருட்பாடல்களாகும். களவொழுக்கம் பற்றிப் புலவர்கள் மனோ கற்பனையாற் கூறியிருக்கும் பொருள்கள் மிகவும் சுவையுடையன. புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி ஒழுக்கத்துக்கு உரிய பொருள்களாம்.

### 1

தோழி தலைவியிடத்தே சில புதிய மாறுதல்களைக் கண்டாள். அவற்றால் அவள் தோழியின் ஒழுக்கத்தை அறிந்தாள்; அறிந்து, தலைவி தன்னிடத்து அவளது ஒழுக்கத்தை

மறையாதிருக்கும்படி மெய்யோடு பொய்யும் கலந்த சில வற்றைக் கூறுகின்றாள் :

தடாகத்திலே பூத்த நீல மலரின் நிறத்தை உண்ட கண்களையுடையவளே! யான் கூறும் அவற்றை நின் மனத்தால் ஆராய்ந்து பார்ப்பாயாக. தனக்குப் பிறர் இணையில்லாத ஒருவன் அழகாகக் கட்டப்பட்ட (விரியாத) மலர் மாலையைக் குஞ்சியிடத்தே சூடியிருப்பான். அவன் வில்லுடையவனாய் யானை முதலிய விலங்குகளின்அடியைத் தேடுபவன்போல் எனக்கு முன்வருவான். வந்து என்னை நோக்கித்தானுற்ற நோயைக் குறிப்பால் யான் அறியும்படி காட்டுவான். ஆனால் வாய்விட்டு யாதுங்கூறான். இவ்வாறு அவன் பலநாளும் வந்து போவான். அவனிடத்து மிகுந்த பழக்கமிலலாத யான், அதனைக்கண்டு அவன் இவ்வாறு வருந்துகின்றானே என்று நினைந்து இரவில் நித்திரை பெறாது வருந்துவேன். அவனும அங்கு நின்று தன் குறை யாதென்று கூறுகின்றானில்லை. அவனை நோக்கி, "உனது வருத்தத்தைக்கண்டு யானும் வருந்துகின்றேன்" என்று கூறுதல் எனது பெண் தன்மைக்கு ஏற்றதுமன்று.

இவ்வாறு யான் யாதும் பேசாதிருத்தலைக்கண்டு, அவன் ஆராய்ந்து பாராது இறந்து விடுதலும் கூடும் எனக் கருதினேன். இவ்வாறு நினைந்து வருந்தியமையால் எனது தோள்கள் மெலியும்படி வருந்தினேன். அவ்வருத்தம் காரணமாக யான் துணியாத தொன்றைத்துணிந்து நாணமில்லாத தொன்றைச் செய்தேன். வாசங்கமழும் நெற்றியுடையவளே! அதனைக் கூறுகின்றேன் கேட்பாயாக,

தினைப்புனத்தில் கூட்டமாகிய கிளிகள் விழாமல் நாம அவற்றை ஓட்டிப் பாதுகாப்பேமன்றோ. அப்புனத்தின் அயலே கட்டப்பட்டிருந்த ஊசலின் மீது யான் ஒரு தினம் ஏறி ஆடினேன். அப்பொழுது அவன் அவ்விடத்தே வந்

தான். யானும், ஐயனே! சிறிது நேரம் இவ்வூசலை ஆட்டு வாயாக என்று கூறினேன். அவனும் அதற்கு உடன் பட்டுத், தையால்! "நீ கூறியது நன்று" என்று ஊசல் ஆட்டா நின்றான். அப்பொழுது யான் கை நழுவி அவனது மார்பில் விழுந்தேன் என்று அவன் நினைக்கும்படி பொய் யாக விழுந்தேன். அதனை அவன் உண்மையாகக் கருதி அப் பொழுதே விரைந்து என்னை எடுத்து அணைத்துக்கொண் டான். யான் மயக்கந்தெளிந்து எழுந்துணையும் யான் அவன் மார்பிடத்தே இருப்பின் பிறர் அறிவார் என்று அஞ்சினன் அவன். "விளங்கும் ஆபரணமணிந்தவளே! நீ செல்வாயாக" என்று கூறிவிட்டு என்மீது ஒரு பார்வை யுடையவனுயிருந்தான். அதனல் யான் அறிவு மயங்கியவள்போற் கிடந்தேன். இதுவே அங்கு நிகழ்ந்த தாகும்.

## 2

இரவுக் குறிவந்து ஏகும் தலைவனைத் தோழி அணுகித் தலைவியின் வருத்தங்கூறி வரைவு கடாவினள். விரைவில் வரைந்தேகுமாறு தலைவன் உரைத்தமையைத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்:

கங்கை நீரால் ஈரமடைந்த சடையுடைய இறைவன் இமயமலையிடத்திற் பிறந்த மூங்கிலாகிய வில்லை வளைத் தான். அவன் இறைவியோடு பொருந்தி உயர்ந்த கைலை மலையிலிருந்தான். அப்போது அரக்கர்க்கு அரசனுகிய பத் துத் தலைகளையுடைய இராவணன் அம்மலையை எடுத்தற்குக் கைகளைக் கீழே கொடுத்தான். கங்கணங்கள் அணியப் பெற்ற விசாலித்த கைகளினல் அம்மலையை எடுத்தல் ஆற்றாது அவன் வருந்தினன்.

அவன் வருந்தியதை ஒப்ப மதமுடைய ஆண் யானை புலியின் வடிவை மிகவும் ஒப்பப் பூத்த வேங்கை மரத்தைப்

புலியெனக் கருவி அதன் அடியை மருப்புகளாற் குத்தும். குத்தியபின் தனது கொம்பை இழுக்கவாற்ருது, பெரிய மலை வெடிப்புகளில் எதிரொலி எழும்படி கூச்சலிடும். இவ்வியல் பினதாகிய மலைநாட்டையுடைய ஐயனே! யான் கூறுவதைச் சிறிது கேட்டருள்க.

நின் காதலி, நீரற்ற நிலத்தே வளர்ந்த பயிர்போல், நின் அருளைப்பெருது அழகழிந்தாள். வருதற் கருமை யுடைய இடமென்று கருதாமலும் பாம்பை அஞ்சாமலும் நீர் வந்தமையால் விடியற்காலத்தே, மழை பெய்யப்பெற்ற நிலத்திற் பயிர்போல் அழகு பெற்ருள். அவள் பெற்ற அழகு இவளை விட்டு நீங்காமல் நிலைபெற்று நிற்கும்படி காக்கும் ஒரு தன்மை உண்டாகிய அதனை எங்களுக்குக் கூறுவாய்.

கைப்பொருள் இல்லாதவன் இளமை போல நின் அருளைப் பெருமல் இவள் அழகழிந்திருந்தாள். இராக் காலத்தில் இருள் என்று கருதாமலும், வழியிடத்துள்ள இடையூறுகளை அஞ்சாமலும் நீ வருதலும், அவள் அருள் பெற்றவன் செல்வம் போல், விடியற்காலத்தே அழகு பெற்ருள். அவ்வாறு பெற்ற அழகு பிறரால் வந்த அழகு என்று பிறர் புறஞ்சொல்லுவதாகிய ஒரு பொருள் உண்டாகில் அதனை எங்களுக்குக் கூறுவாயாக.

தருமநெறியிற் செல்லாமல் வறிதே முதுமை எய்திய வன் மறுமையிற் கிடைக்கும் செல்வத்தை இழப்பான். அதுபோல அவள் நின் அருளைப் பெருமல் அழகழிந்திருந் தாள். மலைச்சாரலிடத்துள்ள வழிகளிடத்துக் கொலைத் தொழிலிற் குறைவில்லாத கானவர் திரிவரென்று கருதாது நீ இவ்விடத்து வருதலினுல் தழுவுதலாகிய இன்பத்தைப் பெற்ருள். அதனுல் செல்வப் பொலிவுடையவனது செல் வம்போல் விடியற்காலையில், அழகு பெற்ருள். அவ்வழ

கைக் கண்டு அயலவர் கூறத்தக்க புறங்கூற்றுரையை மாற்றத்தக்க பொருளுண்டாகில் அதனை எங்களுக்குக் கூறுக.

தோழி! யான் இவ்வாறு மலைநாடனிடத்துக் கூறினேன். அதனைக் கேட்ட அவன் "வேங்கை அலர்கின்ற காலத்தைப் பார்த்துப் பெருத்த இறையினையுடைய பணைத்த தோள்களை வரித்துக்கொண்டு செல்ல வருவேன்" என்று கூறினான், (வேங்கை மலர் அலர்த்துங்காலம் தினை கொய்யுங் காலமாகும்.)

## 3

தலைவன் பெண் கேட்டவிடத்து அவளின் சுற்றத்தினர் மறுத்துக்கூறினர். அஞ்ஞான்று தோழி தாய்க்கு அறத்தோடு நின்றாள். தாய் தந்தைக்கும் தமையன்மார்க்கும் அறத்தோடு நின்றாள். அதுகேட்ட அவர்கள் பெண்கொடுக்க இயைந்தனர். இந்நிகழ்ச்சியைத் தோழி தலைவிக்குக் கூறினள். விரைவில் மன்றல் முடியுமாறு தலைவியும் தோழியும் வரையுறை தெய்வம் உவப்பக் குரவையாடினர். அக்காலத்துத் தலைவன் மலை அருகில் இருந்தமையைத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள் :

அன்னையே! கேட்பாயாக; ஒரு நாள் என் தோழி வேகமாக ஓடும் அருவி நீரில் என்னோடு உடன் நின்று ஆடினாள். அப்போது அவள் கால்கள் தள்ளாடி விழுந்தாள். அவள் அச்சத்தினால் தாமரை மலர் போன்ற கண்களைப் பொத்திக்கொண்டு நீரோட்டத்திற் சென்றாள். அப்போது சுரபுன்னை மலரால் கட்டிய மாலை அணிந்த ஒருவன், அவ்வாசமிக்க தொடையல் அசையும்படி நீரிற்குதித்துப் பூணினையுடைய இவள் மார்பு தன் மார்போடு பொருந்தும்படி எடுத்தணைத்தான். அணைத்துக்கரையை அடைந்து இவளைச் செல்லும்படி விட்டான். அவனுடைய அகன்ற

மார்பை இவளுடைய எழுகின்ற முலைகள் கூடினவென்று பிறர் கூறுவர். அதனால் இவள் நமக்கு மழையைப் பெய் விக்கத்தக்க கற்பின் பெருமை யுடையளாயினள்.

அப்பாற்றெரிகின்ற மலை நாட்டிடத்தே தினைப் புனத்தி லிடப்பட்ட பரண்மீது அகிற்கட்டைகள் எரியும். வானி டத்தேதிரியும் சந்திரன் அப்புகையினால் ஒளி மழுங்கி அம் மலைத்தலையிற்றங்கும். அதனை அம்மலையில் வைத்ததேன் கூடு என்று நினைந்து அதனை அழித்தற்குக் கானவர் மூங் கில் ஏணி கட்டுவார்கள். அம்மலையிடத்துள்ள காடகன்ற நாட்டையுடையவனது புதல்வனே இவளைச் சுனையினின் றும் எடுத்த அத்தோன்றலாவன்.

சிறு குடிலிலுள்ளீரே! சிறு குடிலிலுள்ளீரே! இம் மலையில் வாழ்வார் இவ்வாறு உதவி ஆற்றியவர்க்கு இவளைக் கொடுக்க நினையாது தரும மல்லாதவழியிற் செல் கின்றனர். இனி இவ்விடத்தில் வள்ளி கிழங்கும் வீழ்த்தாது; மலையிடத்திற் றேனீக்கள் தேன்கூடுகளையும் வையா; கொல்லையிற்றினைகளும் கதிர்கள் ஈனா. காந்தட்பூ நாறும் இக்கரியமலையிடத்தே வாழும் குறவரின் இளையமகளிர் வரையிடத்து வளரும் மூங்கில் போன்று அழகியதோளும் பார்த்தவர்கள் கண்களைத் தன்னிடத்தே வாங்கிக் கொள் ளும் அழகுமுடையர். அவர்கள் தமது கணவரைப் பிழைத் தொழுகாராய் அவரே தெய்வமென்று வணங்கி எழுந்திருப்பர். அதனால் அவர்களின் தந்தையர் எய்யும் கணைகள் இலக்குத்தப்பாதன வாகும்.

தோழி! நின் தந்தையும் தமையன்மாரும் விவாகத்தை மறுத்த விடத்து யான் என் அன்னைக்கு இவ்வாறு கூறி அறத்தொடு நின்றேன். அவள் அதனை நற்றாய்க் கெடுத் துக் கூறினாள். அவள் நின் தந்தையும் தமையன்மாரும் அறியும்படி எடுத்துரைத்தாள்.

அதனைக் கேட்ட அவர்கள் சிறிது நேரம் நெஞ்சு கொதித்துக் கண் சிவந்து தெரிந்த அம்புகளையும் வில்லையும் பார்த்தார்கள் ; எழுந்து மனஞ்சுழன்றார்கள் ; பின்பு இருவரிடத்தும் குற்றம் இல்லை என்று கூறிச் சினம் ஆறித தலைசாய்த்திருந்தார்கள்.

[அறத்தோடு நிற்றலாவது, அறத்துக்கு மாறுபடா வகை தலைவியின் களவொழுக்கத்தைக் குறிப்பால் வெளிப் படுத்துதல்.]

தெரிந்தெடுத்த ஆபரணங்களை அணிந்தவளே! நீ நின் கணவனைச் சேருமாறு இவ்வரையிலுறையும் தெய்வம் மகிழ்ச்சி கூர ஆயத்தாரும் யாமும் மனம் மகிழ்ந்து குரவை யாடுவேம். அக்குரவைக் கூத்துக்கு நீ பாடலைப் பாடு வாயாக.

அது கேட்ட தலைவி, நல்லாய்! "நம்மை வரைந்து கொள்ளும் நல்லான் நம்மிடத்தே வருவதற்கு நஞ்சுற்றத் தினர் என்ன நல்வினையைச் செய்தார்கள்.

புனத்தே நின்ற வேங்கைப் பூவின் தாது முற்றத்தின் வெளியே உள்ள பாறைமேல் உதிரும். அப்பாறைமீது நாம் இணையில்லாத கூட்டத்தைப் பொருந்தினேம். அக் கூட்டத்தைக் கனவிடத்தே காணின் மெய்யாகிய கூட் டத்தை விட்டு விடுவேமல்லவோ."

அது கேட்ட தோழி, வானை முட்டும் மலை நாட்டை யுடையவனும் நீயும் அக்கலியாணத்தே பண்டறியாதார் போல நடப்பிரோ? பண்டறியாதிர் போல நடக்கும் நும் பழைய உறவை யான் கண்டறியாத தேன் போல மிகவும் மறைப்பேனோ?

மேகந் தவழும் மலை நாடனுடைய மணக்கோலங் காணுமல் கையால் மறைக்கப் பெறுகின்ற கண்களுங் கண் களென்று கூறப்படுமோ? என்றாள்.

அது கேட்ட தலைவி நின் கண்ணாலே யான் மிகவும் காண்பேனென்றாள்.

அது கேட்ட தோழி நெய்தலிதழ் போலும் மையுண்ட கண்ணாகிய நின் கண்கள் மிக என் கண்ணாவதாக என்றாள்.

இருவருங் கூடுதற்கு ஏதுவாகிய முகூர்த்தம் வைத்தற்கு நேரத்தைக் கணக்கிட்டுக் கூறுவதிற் பிழையாத சோதிடருடன் மலைநாடன் மலைச்சாரலிடத்தே வருகின்றான்.

இனி மூங்கிலையொக்கும் உன்னுடைய மெத்தென்ற தோளிற் பசலையும் ஊரிற் கூறும் பழி வார்த்தையும், பொய்யாகிய கனவிற் கூட்டமும் நீங்குவனவாக.

## 4

தோழியும் தலைவியும் தலைவனது மலையை வாழ்த்திப் பாடுகின்றனர். தோழி தலைவர் அன்புடையர் எனப்பாடுகின்றாள் தலைவி அதனை மறுத்து அவர் அன்புடையரல்லர் என்று பாடுகின்றாள். இதனைத் தலைவன் மறைவிடத்தினின்றும் கேட்கின்றான்; கேட்ட தலைவன் தலைவியை வரைந்து கொள்ள வருகின்றான். அதனைத்தோழி தலைவிக்குக் கூறுகின்றாள் :

“ தோழியே ! நமது விருப்பத்துக் குரியவற்றை யெல்லாம் பாடுவேம் வா ” என்றாள் தலைவி, “ அழகிய தினைப் புனத்தில், முகததிற்கேற்ற கண்ணும் மகிழ்ச்சியைத தரும் வார்த்தையுமுடைய நல்ல மகளிர் நாணி இறைஞ்சும் நிலைபோல முற்றிவிளைந்த தினைக்கதிர்கள் வளைந்திருக்கும். அக்கதிர்களை உருவிச் சந்தன உரல்களில் இடுவேம். முத்து நிறைந்த யானைக்கொம்பு உலக்கையால் இருவேமும் குத்துவேம். மருந்தில்லாத நோயைச் செய்தவனுடைய பயன் தருகின்ற மலையை வாழ்த்தி நம் கருத்துக்கு வேண்

டிய வற்றை யெலலாம் கூறிப் பாடுவேம்'' என்று உடம்பட்டாள்.

தோழி :—அழகிய நெற்றியையும், அழகிய கூந்தலையும், மூங்கில் போலும் விசாலித்த மெல்லிய தோளையும் பூமணம் நாறும் கன்னத்தையும் உடையவளே ! மூங்கில் ஒலிக்கின்ற வெடிப்புகளுடைய மலைமீது நீ இனி ஒன்றைப் பாடு. பின்னர் யானும் ஒன்று பாடுவேன்.

தலைவி :—கொடிச்சியர் கையிரண்டையுங் குவித்துத் தங்குறைதீர முருகனுறையும் மலையைத் தொழுவர். தன்னை அடைந்தாருடைய வருத்தத்தைப் போக்கும் அவனது மலை அவர்களது கைபோல உயர்ந்திருக்கும். அம்மலையினிடத்தே பூங்கொத்துகள் அசைகின்ற காந்தள் மீது வைத்ததேன் ஒழுகும்படி அது (காந்தள்) அசையா நிற்கும்.

தான் கூடின மகளிருடைய இயற்கை அழகு கெடின் அம்மகளிரினும் அவன் வருத்த முறுவான். கடுவன் தனது களவொழுக்கத்தை விட்டுத்தான் காதலித்த மந்தியை வரைந்து கொள்ளும். இதனை அக்கடுவனிடத்தினின்றுங் கற்றவர்கள் திரண்ட சுற்றத்தோடு சென்று மகட் பேசுவர். அது போல அவனது மலை, மெல்லிய விரலுடைய மந்தியைத் தனக்குத் தரவேண்டுமென்று தன் குறையைச் சொல்லும் தலைமையை உடையது.

கொம்பு மறையும்படி முறுக்கவிழ்ந்த நெருங்கிய பூவுடைய தாழ்ந்த கொம்பின் தளிர்போன்றது என் மேனி. அது அழகு பெறும்படி நமக்கு நோய் செய்தவனுடைய பெறுதற்கரிய உச்சி மலைகளையுடைய பக்கவரைகளை இனி நாம் பாடுவேம். பாடுமிடத்து அவனது அன்பில்லாமையாகிய இன்னொன்றையும் பாடுவேம்.

தண்ணிய மலைச்சாரலிடத்துத் தாதை உண்ணும் வண்டு அப்பூவைத் துறக்கும். பெண்டிருடைய நலத்தை

நுகர்ந்து பின் அவரைத் துறக்கின்றவன் மலையாயிருந்து போதும் விண்ணைத் தீண்டும் அம்மலையிடத்தே தெய்வ மகளிர் பந்தடித்த இளைப்புப் போகத் தண்ணிய தாழ்ந்த அருவியிலே ஆடுவர்.

தோழி :—தன்னைச் சேர்ந்தாரிடத்து நின்று நீங்கேம் என்றிருப்பானுடைய மலையிடத்தே, அழகிய யானை தான் விரும்பிய பிடிக்கு முதற் சூலினால் ஏற்பட்ட வயாநோய்க்கு நெடிய கிளைகளையுடைய கருப்பங் கோலை முறிக்கும்.

இவ்வாறு நாம் அம்மலை நாடனைப் பாடினோம். அதனால் அம்மலைக்குரியவன் விருப்பத்தோடு கேட்டு மெய் நிறைந்த உவகையனாய் முயங்கி முடி வெய்தாத மெல்லிய முலையினையுடைய ஆகம் அழகெய்தவும், நீ தலைமை அடைய வேண்டியும வரைவோடு புகுந்தான்.

5

தலைவியும் தோழியும் வள்ளைப் பாட்டுப் பாடினர். அதனை மறைவில் நின்றும் கேட்ட தலைவன் வரைவு வேண்டி வரத் தமர் வரைவுடம்பட்டமையைத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள் :

தோழி ! பாடுவேம் வா. அசைகின்ற மூங்கிலின் நெல் லைப் பாறை உரலில் இடுவேம். அதனை வலிய யானைத் தந்த உலக்கையாற் குற்றுவேம். சேம்பின் இலையாகிய சுளகாற்புடைத்துப் பாடுவேம்.

தோழி ! இடி, இடித்து நெருப்பை உமிழும். எவ்விடத் தும் மழை ஒலியோடு பெய்யும். மழைக்கால் இருட்டிலே மின்னல் ஒளியில் யானைகள் பிடிகளுடன் வந்து புன் செய் யாகிய தினையை மேயும். யானைகள் நடக்கின்ற ஓசையைக் கேட்ட கானவன் உயர்ந்த மலையிலே ஆசினிப்பலாமீது கட்டிய பரணில் ஏறிக் கடும் விசையுடைய கவணிற் கல்லை வைத்து எறிவான். அக்கல்லு முறிந்தவரையிடத்து நின்ற

வேங்கையினது ஒள்ளிய பூக்களைச் சிதறும. ஆசினிப்பலாக்களின் பழங்களை உதிர்க்கும்; தேன் கூடுகளைத்துளைக்கும்; மாம்பூக்களைச் சிதறும்; குலையீன்ற வாழையின் மடலைக் கிழிக்கும்; பலாப்பழத்தினுள் தங்கும். இவ்வியல்புடைய மலை நாட்டுக்குரியவனைப் பாடுவேமாக.

தலைவி :—தோழி! வாழ்க. தான் செய்த சத்தியத்தைப் பாதுகாவாது பொய்த்தவனுடைய மலையாயினும் அதுமழை பெய்தலால் வீழ்ந்து விளங்கும் அருவியையுடையது.

தோழி :—அவ்வாறு கூறு தொழி. அவன் தன் சத்தியத்திற் பொய்ப்பானோ? தான் சத்தியங் கூறிய மகளிரைப் பாதுகாவாது விடுவனோ? நீ அஞ்சாதொழி. மலை அகன்ற நல்ல நாட்டையுடையவன் கூறிய மெய்யிலே பொய் தோன்றுமாயின் திங்களிடத்தே தீ தோன்றிய தன்மைத்து.

தலைவி :—என் முன் கையில் வளை கழலுமாறு என்னிடத்து வாராதவன் மலையாயிருந்தும் இளமழை உலாவா நிற்கும்; அது ஒரு காலத்து உலாவுதலன்றி நாள்தோறும் உலாவா நிற்கும்.

தோழி :—நீ அங்ஙனம் கூறு தொழி. உன்னிடத்து வாராது ஆற்றியிருப்பானோ. இருத்தல் மாத்திரமல்லாமல் அம்மலை நாடனுடைய அருளிடத்தே இத்தன்மையவாகிய கொடியவை தோன்றுவனவாயின் நிழலையுடைய குளத்துள் நீரின் நின்ற குவளை வெந்ததன்மைத்து.

தலைவி :—என் மேனியைச் சேர்ந்து துறந்தவனுடைய மலையாயிருந்தும் அது கழுவாத நீலமணிபோலத் தோன்றும்.

தோழி :—நீ அஙஙனம் கூறு தொழி. அவன் நம்மைக் கை விடுவானல்லன். அவனோடு கொண்ட உறவின்கண்ணே இத்தன்மையவாகிய கொடியவை தோன்றுவனவாயின்

ஆகாயத்திற்றிரியும் ஞாயிற்றுள்ளே இருள் தோன்றிய தன்மைத்து.

தோழி :—நம் வள்ளைப் பாட்டிடத்தே நாம் பொருந்திப் பாட நம்மென்றோட்கு உரிமையுடையவனும், மறைந்து நின்று கேட்டு அருள் செய்யவேண்டி வந்தான்.

உன் தந்தை வாசமிக்க வேங்கையின் கீழ் இருந்து அம் மலை கிழவோனுக்கு மணஞ் செய்தலை விரும்பிக் கூறினான். ஆதலால் நமக்கு நன்றாய் உண்டாகா நின்றது. இனி நீ வருந்தாதொழி.

## 6

தலைவி தலைவனின் அருள் தோன்றப் பாடினாள். அதனை மறைவில் நின்று கேட்ட தலைவன் அவளின் புறத்தே அடைய அவள் ஆற்றாமை தணியப்பெற்றாள், பின் ஒரு முறை அவள் அவ்வாறு பாடியபோது அவன் வாராமை கண்டு கலங்கித் தன் நெஞ்சுக்குக் கூறுகின்றாள் :

தோழி :—முறம்போலும் செவியுடைய யானை வீர முடைய பெரிய புலியின் பழைய பகையைக் கெடுக்கும் ; தனக்கு முன்னால் கிடக்கும் இலைகளைத்தின்று அருவி நீரைப்பருகும். பின்பு அவ்வருவிநீரின் ஓசையில் தூங்கும். இவ்வகையான சோலையுடைய மலை நாடன் நாம் வருந்த நம்மை மறந்திருந்தான். இனி அவன் மறந்திருப்பானாக. இகுளையே ! அவன் நமக்குச் சிறந்தவனாதலை மறுபடியும் அறிந்தேம். யானைத்தந்த உலக்கையினால் மூங்கில நெல்லைக் குற்றவருவாயாக, நாம் அவன் செய்த கொடுமை களை வள்ளைப்பாட்டாகப் பாடுவேம்.

இவ்வாறு தலைவனது அன்பின்மையைத் தோழிதான் அவனது அன்பு தோன்றக் கூறக்கருதி, ஏடீ! நீ கூறிய வாறன்றி அவன் திறத்தை நாம் வள்ளைப் பாட்டாகப் பாடுவேமாக என்றாள்.

தோழி :—தோழி வாழ்க. நம்மை அருளாத கொடுமைக்கு நாணு திருக்கின்றவனுடைய நாட்டின் மலையாயிருந்தும் பக்கமலையிலே ஒள்ளிய நிறமுடைய அருவி ஓடா நின்றது. இதற்குக் காரணத்தை நம்மனத்தால் ஆராய்வேம், வா.

தலைவி :—ஒரு பக்கஞ்சாயாத நா நிற்கும் துலாக்கோல் போல அறிந்து அறத்தையே விரும்பும் நெஞ்சுடையவன் தன்னால் நுகரப்பட்டார் நெஞ்சை அழியும்படி விடுவனோ?

தோழி :—நமக்கு அருளி இல்லறப்பயனை ஆளாமல் பயன் இன்மையை ஆளுகின்றவன் நாட்டு மலையாயிருந்தும், தண்ணிய நறிய கோங்கு பூத்தபக்க மலையெல்லாம் பொன்னுபரணமணிந்த யானைகள் போன்று பொலிந்து தோன்றும் இதற்குக் காரணம் யாது?

தலைவி :—தன் கொடையை விரும்பி வந்தோர்க்குத் தேரைக் கொடுக்கும் கொடையை யுடையவன், நம்மாட்டுத் தன் மலையின் நீரினும் மென்மையுடையவன் ஆதலால் வரையாமல் நமக்கு மிகுகின்ற நோய் நம்மைப் பொருந்த விடுவனோ? விடான்.

தோழி :—பூண் நெகிழ்ந்து விழும்படி நம்மை வருத்த முறுத்தினோன் குன்றாயிருந்தும், பக்க மலைகளின் மேலே வைத்த தேன்கூடு முகிலில் மறைகின்ற சந்திரனைப்போலத் தோன்றா நிற்கும். இதற்குக் காரணம் யாது?

(இதைக் கேட்டுப் பொறாத) தலைவி ; ஏடி ! ஓயாமல் அவன் கொடுமையைக் கூறா தொழி. என் நெஞ்சைத் தன் அன்பாற் பிணித்தவன் பிறர் அஞ்சும் கொடுந் தொழிற்கு அஞ்சாத அறன் இல்லாதவனல்லன்.

இவ்வாறு நாங்கள் பாட இனிய மார்புடையவன் மறைந்து நின்று கேட்டான். தாழ்ந்த இருண்ட கூந்தலுடைய எனது தோழியைக் கை கவித்து எனது முதுகுப்

பக்கஞ் சார்ந்து தடவினன். அதனால் எனது ஆபரணங்களை அணிந்த மேனியின் பசப்பு ஞாயிறுமுன் நின்ற பனி போற் கெட்டது என்று பாடினேம். அவன் பிரிந்த வழி மேனியிற் பசப்பு மாயாமல் நின்றது. இவ்வாறு தலைவி தனது நெஞ்சொடு கூறினள்.

# 7

வரைவு நீடித்த விடத்துத் தலைவி ஆற்றளாயினள். தானும் தலைவியும் வள்ளைப் பாடலுள் முருகனைப் பாடுதல் போலத்தலைவனைப் பாடுதலைக் கேட்ட அவள் (தலைவி) ஆற்றியிருந்தாள் என்று தோழி தன்னுள்ளே கூறுவாள் போலத் மறைவில் நின்ற தலைவனுககுக் கூறுகின்றள் :

*தையலாய்! நாம் இருவேமும் ஐவன நெல்லைப் பாறை உரலிற் சொரிவேம் ; புலியைக் கொன்ற யானையின் கொம்பாலும், வண்டு ஒலித்துத் தாதை அளையும் சந்தன மரத்தினாலும் செய்த உலக்கைகளாற் குற்றுவேம். குற்றுமிடத்து முருகனைப் புகழ்வதுபோல, மழைபொழிதலின் மிகுந்த பயன் தருகின்ற மலை நாடனைப் பாடுவேம்.*

*மலைநாடன் மீது ஒருருவர் பகை என்று கூறின கூற்றுவன் வரினும் கெடுதலை அடையான் ; தன்னை உறவுகொண்டார்க்குத் தோற்றலை நாணன். அம்மலையிடத்துள்ள தும்பி மகளிர் கையிலிடும் " நீலக் கடைச் செறி " போலக் காந்தளின் முகை மீது இருந்து (அது) அலருங்காலத்தைப் பார்க்கும்.*

*தெரிந்தெடுத்த ஆபரணங்களை யுடையாய்! வருடை மானின் குட்டிகள் பாறையிடத்துள்ள குரங்கைப் பார்த்து வெருளும். அம்மலை நாட்டவன் புகழ் விளங்க நீ ஒன்று பாடுவாயாக.*

**தலைவி :—***அவர் பிறரது பெருமைகளைப் பொருதிருப்பரென்று பலர் கூறினும் அவர் பிறர் குற்றங் கூறுதல்*

அறியார். அவரது குன்றிடத்தே புள்ளிமானின் செவி போல மூங்கில் முளையினது கண்ணைப் பொதிந்த பாளை கழன்றுவிழும் பண்பினையுடையது.

தோழி :—பிடியோடு கூடி நிற்கும் யானை வளகு என்னும் புல்லின் தழையை விரும்பியுண்ணும். அவ்வியானை நடத்தல் இரண்டு கொம்புள்ள வரை நடத்தலை ஒக்கும். மணம் நாறும் கூந்தலையுடையாய்! இம்மலைநாடனை அன்புடையன் என்று பாடினாய் இனி அவன் அன்பில்லாதவன் என்று பாடுவாயாக.

தலைவி :—வறுமையினால் தம்மிடத்தில் பொருளின்மையைச் சொன்னார்க்கு அப்பொருளை அவர்க்குக் கொடுத்தலாற்றாத அவர் தன் உடம்பைத துறக்கும் இயல்புடையர் அவர் மலையிடத்துப் புலியின அடியை ஒத்த வாளையின் வளைந்த காய் குலைகடோறும் தூங்கும்.

இவ்வாறு யானும் தலைவியுங் கூடித் தலைவன், திறத்தையும் முருகன் திறத்தையும் பாடினேமாக, என்னுடைய தோழிக்கு, அசைகின்ற மூங்கிலையுடைய மலை நாட்டவன் அருள் செய்தாற் போல் தோள்கள் அழகு பெற்றன.

## 8

வரையாது வந்தொழுகுகின்ற தலைவனிடத்துத் தோழி. தலைவியது கற்புமிகுதியும் இவ்வொழுக்கம் அலராகின்றமையும் அவளது ஆற்றாமையும் கூறிவரைவு கடாவுகிறாள் :

எதிர் எதிரே பெரிய மலைகள் ஓங்கி நிற்கும். அவைகளில் உதய வெய்யில் படுகின்ற அகன்ற சாரலிடத்து அருவிகள் ஆரவாரத்துடன் ஓடும். அருவிகளின் தண்ணிய நீர் மேளம் போன்ற தாள் உடைய வேங்கையின் கொம்பர்களில் விழுதலால் பூங்கொத்துகள் அலர்ந்து நெருப்புப் போல் தோன்றும். அத்தோற்றம், புகர் மத்தகமுடைய அழகிய யானைகள் பூவோடு கூடிய நீரை மேலே சொரிய முறுக்கவிழ்ந்த தாமரைமலரின் அழகிய அல்லியிலேவிரும்பி

*யிருக்கும் இலக்குமியின் தோற்றம் போன்றது. இவ்வாறு அழகிய வெற்பையுடையவனே! என்னுடைய தோழி, தனது வருத்தம் மிகாநிற்கவும் நீ செய்த அருள் இல்லாமையை எனக்கும் மறைத்தாள். அவள் அவ்வாறு மறைத்ததற்குக் காரணம் அவ்வருளின்மையைக் கேட்டு யான் நின்னைப் பிறர் முன்னே பழி கூறுதலைத்தான் நாணினமையினுலாகும்.*

*எனது தோழி, காம நோய் மிகுந்த விடத்தும் நீ செய்த அருளின்மையைச் சேரியிலுள்ளார் தானும் அறியாதபடி மறைத்தாள். அவள் அங்ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் கேட்டு நீ நிலையான தன்மை உடையையல்லை என்று யான் பிறர்க்குக் கூறுதலை நாணினமையினுலாகும்.*

*எனது தோழி காம நோய் வருத்துகையினுலே வருந்தியும் நீ செய்த அருளின்மையை ஆயத்தாருக்கும் மறைத்தாள். அவள் இங்ஙனம் மறைத்தது அவ்வருளின்மையைக் கேட்டு மாயத்தில்வல்ல நினது பண்பில்லாமையைப் பிறர் கூறுதலைத்தான் நாணினமையினுலாகும்.*

*நினது தீமையால் உண்டாகிய அருந்துயரத்தை, அத்தன்மைத்தாகிய அரிய நற்குணத்தினுனே பிறர் அறியாதபடி நின்னைக்காத்தாள் அவ்வாறு காத்தவளுடைய பெரிய துயரைத்தீர்க்கும் மருந்தாகிப், பெரும்! நாம் விரைந்து செல்வேம்.*

## 9

தலைவி வரைவு தாமதித்தமையின் ஆற்ருளாயினுள். அப்போது தோழிதான் தலைவனை நெருங்கி வரைந் தேகுமாறு கூறினதும், தலைவன் வரைந்து கோள்வதற்குச் செய்யும் ஏறபாடுகளினுல் வருகை தாமதித்தமையும், சுற்றத்தினர் வரைவினை ஏற்றுக் கோண்டமையுமாகியவற்றைக் கூறித் தலைவியை ஆற்றுவிக்கின்ருள்.

மூங்கில் நெருங்கி வளர்கின்ற மாணிக்கப்பாறை விடி யற்காலத்தே ஞாயிற்றின் ஒளியைக் கெடுக்கும். அப்பா றையின் மீதுள்ள சுனையிடத்து அழகு பெற்று வளர்ந்த காந்தளின் பூங்கொத்துக் கிடக்கும். அப்பூங்கொத்துக் களைத் தலையில் இரத்தினமுடைய பாம்புகள் நீர் குடிக்கின்றனவென்று கருதிய இடியேறு மலையைக் கீழ் மேலாக்குதல் போலச் செறிந்த மழையில் இடி இடிக்கும். அவ்விடி பூக்களுடைய மலைச்சாரலில் ஒலிக்கும். அதனால் சிறு குடியிலுள்ளார் விரைந்து துயிலெழுவர். இவ்வாறான மிக உயர்ந்த கொடுமுடியையுடைய மலைநாடனே!

முயங்குகின்ற கூட்டத்தினைப் பெறாமல் வருந்தின என் தோழியின் பல இதழுடைய மலர் போன்ற கண்கள் பசக் கும்படி நீ கெடுத்தாய். காற்றடிக்கவும் அசையாமல் ஒலிக் கின்ற அருவிகளையுடைய நின் மலைச்சுனையிடத்து நிற்கும் மலரை ஒத்தன இவள் கண்கள், என்னும் பொறாமையி னாலோ நீ இவ்வாறன்பிலலாமல் இருப்பது.

உயிர் போம் பருவம் என்று கூறும்படி கலங்குதற்கு ஏதுவாகிய காம நோயைக் கடக்கும்படி பெருத்த என் தோழியின் தோள்களை அழகு கெடும்படி கெடுத்தாய். அவ்வாறு நீ கெடுத்தது, புகர் முகமுடைய களிற்றோடு புலி பொருது பகைத்துத் திரியும் நின்னுடைய அகன்ற மலையில் மூங்கிலை ஒக்கும் அவள் தோள்கள் என்னும் பொறாமையினாலோ? அது காரணமாக அருளில்லை ஆயி னையோ?

நடுயாமத்துந் துயில் கொள்ளுதலிலளாய் மனந்தடு மாறும் என் தோழியுடைய விருப்பம் பொருந்திய நல்ல அழகு வாடும்படி நீ கெடுத்தாய். அவ்வாறு நீ செய்தற் குக் காரணம் ஞாயிற்றைத் தீண்டும்படி நீண்ட மலையின் முழைஞ்சுகளுடைய சாரலில் வண்டுகள் ஒலிக்கின்ற எரி போலும் வேங்கையினது பூங்கொத்தை ஒக்கும் அவள்

அழகு என்னும் பொருமையினுலோ? அது காரணமாக அருளில்லை ஆயினையோ?

இவ்வாறு அவன் பொல்லாங்குகள் பலவற்றையுஞ் சொல்லியான் கழறினேன், அவர் என் கூற்றினை மெய் யென்று தெளிந்தார்; களவொழுக்கத்தின்கண் அவர் நெருங்கி வருகின்ற உறவு வரைவு முயற்சியால் நீடியது. பிறை ஒத்த நுதலினையுடையாய்! இக்களவொழுக்கத்தில் வேட்கை நீங்கி நாம் அவரைப் பேணி அவரிடத்தே தங் குதலை அவர் விரும்பினுர். அவர் அவ்வாறு விரும்பி வரையும் நாளில் நஞ்சுற்றத்தாரும் அவருக்கே நின்னைக் கொடுப்பதாக உடம்பட்டனர். இதுவே நமக்குண்டாகிய நன்மையாகும்.

## 10

**இரவுக்குறியிடத்தே வந்த தலைவன் அல்ல குறிப்பட்டுத் தலைவியை எதிர்ப்படமுடியாமையில் மீண்டான். தலைவி, அதனைத் தன் பிழையெனக் கருதித் தலைவன் வருந்துவான் எனக்கவன்று ஆற்ருளாயினுள். அப்போது தோழி தலைவனை அது தோழியின் பிழை என்று கூறி, ஆற்று என்கின்ருள்.**

தும்பி அழகிய சிறகினையும் நீலமணி போன்ற நிறத் தினையும் உடையது. அது தான் நுகர்கின்ற பூ தன்னை யின்றித் தனித்திருக்கத் தான் விரும்பிய பூவின்மேற் செல்லும். பெருகி வாயிடத்தே வீழ்கின்ற மதமும் வெள்ளியமருப்புமுடைய யானைத்தலைவனோடு அழகிய வரி யுடைய புலி வந்து போர் செய்யும்.

(முன்கூறிய) தும்பி அழகிய பூங்கொம்பென்று கருதி வலிய புலியைச் சூழும்; வேங்கைச்சினை என்று கருதிப் புள்ளியுடைய யானையின் புகர் முகத்தை அணுகும்; வலி மிகுந்த கோபத்தாலே 'வாட்போரைச் செய்யத்தொடங் கிய மன்னரை நட்பாக்கும் உபாயத்தை ஆராய்ந்து நட்

பாக்குஞ் சந்து செய்வாரைப் போலப் பலகாலுந் திரியும். அருவிபாயும இவ்வியல்பின மலைகளை யுடையவனே !

"யான் பகற்குறியை விலக்கி இரவுக்குறியில் வருக வென்றேன். யான் அவனைக் கூடுதல் விருப்பால அவன் செய்யும் ஓசையை எதிர் பார்த்திருந்தேன். நொச்சிப் பூ விழுதலும் அதனை அவன் செய்த குறி என்று எண்ணி அவரைக் காணாது வந்தேன். அதனால் அவர் இரவுக் குறி பிழைத்தார். இடி இடிக்கின்ற நடு இராப்பொழுதிலும் அவர் கூட்டம் பெறாராய்ப் பகற்பொழுதையும் யான் மாற்றினேன்" என என்தலைவி கூறிவருந்துவாள்.

தமது நிலைமை உயர்தற்குக் காரணமான கடவுளுக்குத் (தமது) வரைவுமுடியின் செய்யும் பரவுக்கடன்களை நினைந்து வந்தார். குறிபெறாமையின் அவர் அதனை நினைந்து வருந்துவர். அவர் நம்மை அருள் செய்தற் பொருட்டு அரிய வழிநடந்து வந்து நம்மை எய்தப் பெறா ராய்ப் 'பகற்குறியும் பெறாமல் வருந்தினனே' எனப் பல வார்த்தை கூறாநிற்பர்,

மழை தன்னைப் (வானம்பாடியைப்) பாதுகாக்கவேண்டு மென்னும் வேட்கையால் வானம்பாடி வானத்தைப்பாடும். அவன் அளிக்கின்ற அளியை விரும்புதலான அவர் மேல் நிறைவுற்ற அன்பினையுடையேனாய் நிற்பேன். அவர் இர வுக் குறியையும் பகற் குறியையும் பெறாது வருந்துவார். ஆபரணங்களை அணிந்தவளே ! என்னிடத்துண்டான பழியை அவர் உனக்குச் சொல்லா நிற்பர்.

இவளிடத்து நீர் கொண்ட உறவு இவளை மிகத் துன்புறுத்தலால் அதனைக்கண்டு யான் துயில் கொள் ளேன். நின் மலையின் பக்கமலை, கூறியவற்றை எதிர் ஒலிப்பது போல, நீ கூறுகின்றவற்றையே கூறும், இலங்கு கின்ற வளையணிந்த இவளுடைய நோயை இவள் ஆற்றும்

படி, ' இது தோழியின் பிழை ' யென்று ஒரு பொய்ம்மொழி கூறியாயினும் வெல்வாய். நீ உரைத்ததே இவட்கு உரையாம்.

## 11

**தலைவனது குறையைத் தீர்க்க நேர்ந்த தோழி அவனது தன்மையும், அவன் தனக்குக் கூறுவனவும், அக்கூற்றுத் தன்னாற் பொறுக்க வொண்ணாத வாறும் அவன் கருத்தும் தலைவியிடங் கூறுகின்றாள் :**

*விளங்குகின்ற ஆபரணங்களையுடையவளே! ஒரு தலைவனுவான் என்னிடம் ஒரு காரியத்தை இரந்து நிற்பான் போலத், தான் பிறரால் இகழப்பட்டு எளியராந் தன்மை தோன்றவும் சில மொழிகளைக் கூறுவான்; அங்ஙனம் குறை யிரந்து நிற்பினும் அவன் உலகத்தை எல்லாம் பாது காப்பான்போலே இருப்பதொரு வலியுமுடையன். மெய்ப் பொருள் கூறும் நூல்களைக் கற்று வல்லவர்களை வழிபட்டு நின்று அப்பொருளை அறிந்தான்போலே நன்மக்களைக் கண் டாற்றேன்றும் மன அடக்கமுமுடையன். வறியோர் வறுமையைக் கொடையினற் போக்கவல்லான்போலே இருப்பதொரு வலியுமுடையன். அவன் தனக்குரிய ஆளுந் தன்மையைக் கைவிட்டு என்னை நோக்கிக் கூறும் பல காரி யங்களும் பெருமையடையும் சொல்லைக் கேட்பாயாக. நறி யநுதலினையுடையாய்! அவன் நின்னையின்றி உயிர் வாழேன் என்று கூறுகின்றான். இங்ஙனம் இறந்துபடும் தன்மையையுடையவன் கூற்றை யாரும் நம்பமாட்டார். அவ்வாறாயின் நின் நிலைமைக்கண் யான் அடையும் வருத் தம் பிறர்க்கும் உண்டோ? இல்லையன்றே!*

*அவன், ' யான் வருந்துவல் நீ யறியாயோ ' என்று கூறிநிற்பான். அவ்வாறாயின், தமக்கு உயிர் போலச் சிறந்த தோழியரோடு உசாவித் துணியாமல் தமியராயிருந்து*

துணிதல் மகளிர்க்கு அரிதாயிருக்கும். இந்நிலைமையில் அவன் வலையிலே அகப்பட்டார் எம்போற் சிலர் அவனுக்கு அளிக்கத் தக்காராயிருப்பரோ? அளியாதிருப்பரன்றோ (தலைமகள் கூற்று).

தோழி:—அவன் நீ அருளா தொழியின் யான் உயிர் வாழேன் என்பான். அவ்வாறாயின் அவர் குடிப்பிறந்தாருள் பேதையாயிருப்பரென்று நன்மக்கள் அவரைச் சிறப்பித்துச் சொல்வர். அது நினக்குப் பழியாயிருக்கும் இந்நிலைமைக்குச் செய்யலாவதோர் காரியத்தை ஆராயுங்கால் ஒன்றையும் நினைக்க மாட்டாதவளாய் வருந்துகின்றேன். நறிய நுதலினையுடையாய்! இந் நிலைமையை நம்முள்ளே ஆராய்ந்து பார்ப்பேம்.

நம்மை நாணம் வருத்துகின்றது. அவன் இறந்து படும் நிலைமையில் இருப்பதால் அவனைப் போகும்படி செய்தல் தகாது. இறந்து படுகின்றவனைக் காப்பாற்றினாள் என்று நன்மக்களாற் புகழ்ந்து கூறப்படுதல் பெண் தன்மையுமன்றாய் நின்றது. இவ்வாறாகவும் அவன் நின்னைத்தழுவும் அளவுக்குத் தன் நெஞ்சிலே எண்ணிவிட்டான். அதற்கு நீ இசைகின்றிலை. இதற்கு இனியான் கூறத் தக்கது ஒன்றும் இல்லை. இவ்வாறு தோழி தலைவிக்குக் கூறியபின் அவள் தன் நெஞ்சிற்குக் கூறுவது போலத் தலைவி கேட்கும்படி கூறுகின்றாள்.

நெஞ்சே! குறியிடத்தே வாவென்று கூறுவாள் போல அவனுக்கு ஒரு பொய்க் குறியைக் காட்டி அவன் சென்ற வழியிலே செல்வாயாக.

## 12

வரையாது வந்து ஒழுகுந் தலைவற்குத் தோழி தலைவியின் ஆற்றாமையும், இவ்வொழுக்கம் புறத்தார் அறியப்படுகின்றமையும் கூறி வரைவு கடாவுகின்றாள்:

மலையிடத்தே தன் கூட்டத்தைக்காக்கும் யானை பகைத் தவை எதிர் நிற்கமாட்டாத வலியுடையது ; அதன் கன்னங் கள் மதநீரால் நனைந்திருக்கும். அதன் புகரினையுடைய முகம் நீர் வீழ்கின்ற அழகிய மலையிடத்துத் தேனினம் மொய்க்கும் பூக்களையுடைய வேங்கையினது அழகுபோல வண்டுகள் மொய்க்கப் பெற்றது. மழை பெய்யும் பெரிய பக்க மலையிடத்தும், பெரிய மரங்கள் உடைய ஆற்றி டைக் குறையிடத்ததுமாகிய அக் குஞ்சரம் யானைத் திரள் களோடு பெரிய கழுத்தினையுடைய வலிய புலியை எதிர்த் துப் போர் செய்யும். இவ்வகையான மலை நாடனே !

தாழிட்டுக் கதவடைத்தாற்போன்ற கடிய காவலைத் தாய் செய்வாள். அதனால் நின் மலையிடத்துள்ள முதிர்ந்த வெண்காந்தள் உதிர்வதுபோல விளங்குகின்ற வளைகள் கழலா நின்றன. இராக்காலத்தே ஓய்வின்றி மழை பெய் யும். அப்போது நீ குறி செய்து அழைக்கும் அழைப்பினைக் கேட்கும் மன ஒடுக்கத்தோடு இருக்கும் அவளது வருந்து கின்றதோள்கள் நினக்குச் செய்த தீமையுண்டோ.

இவள் இன்னவாறு ஒழுக்கம் உடையள் என்று அய லார் எடுத்துச் சொல்வர். அதனால் அவளது கண்கள் நின்னுடைய சுனையிடத்து நெருங்கி வளரும் மழையேற்ற நீலோற்பலம் போல நீரைச்சொரியும். இது யாம் வருந் துதற்கு ஏதுவாகிய இருள் என்று நின் வரவை விரும்பி நினைத்தலால் உண்டான வருத்தத்தினாலே கண்ணீர் விட்டு வருந்தும் துயில் இல்லாதவளது கண்கள் நினக்குச் செய்த பழிகள் உண்டோ ?

இளவேனிற் காலத்து நுரைகளையுடைய இனிய நீரூற்று ஓடி ஆரவாரிக்கும். அப்போது உனது சோலை யில் ஒளி கெட்ட தளிர்களைப்போன்ற நிறக்கேடு வந்து அவளது நோயைப் பலருக்கும் கூறுவதாயிருக்கும். பல நாளும் நினைவு வருத்துகையினாலே பசலையுண்ணப்பட்ட

வளுடைய பொன்னை உரைத்த மணிபோன்ற பசலை பரந்த மாமை நிறஞ் செய்த பழியுண்டோ? இல்லையே!

அவள் இவ்வாறாகிய விடத்து அவள் படுத்துறங்குவதையும் யான் அஞ்சுவேன். அதற்குக் காரணம் அந்நித்திரையில் நினைந்து வருந்தத்தக்கன வாற்றான் உற்ற கேட்டைத் தூக்கிப்பார்க்கில் அது எல்லையறிய வொண்ணுத மலையிலும் பெரியதாயிருந்தது. இனி இவ்வருத்தம் அவள் உறுதபடி, நீ வரையாமற் பிரிந்திருப்பவளோடு கொண்ட உறவு கூடுதலைக் கொடுத்தல் வேண்டும்.

## 13

நீ இவ்வாறு வருகின்ற வரவு எமக்குத் துன்பத்துக்குக் காரணமாய் நின்றது. எனத்தோழி கூறி இரவு வருவானைப் பகல் வருக வென்றது.

யானை, வளைந்த வரியுடைய புலி வந்து போர் செய்கையால் அதனை வென்ற வருத்தத்தோடு நெடிய மலையிடத்தே துயில் கொள்ளும்.

அதுதான் நனவிற் புலியைக் கொன்ற செய்கையைக் கனவிற் கண்டு விரைவாக அஞ்சி எழும். எழுந்து மலர் பரப்பி நிற்கின்ற வேங்கை மரத்தைப் புலி யென்றுகருதித் தன் வலியினுலே அதன் அழகைச்சிதைக்கும்; அடங்காக் கோபம் ஆறியபின் அது அவ் வேங்கை மரத்தைக் காணுமிடத்து அதனைப் பாராது நாணித் தலை குனிந்து செல்லும்.

அலரும் பருவமுடைய மலர் போலும் அழகிய மையுண்ட கரிய கண்களையுடையவளாகிய இவளிடத்து இன்றியமையாத காதலுடையேன் என்று நீ கூறுகின்ற வார்த்தையோ இனிது. மின்னலைக் கண்ணுகக்கொண்டு வழியைப் பார்த்து, மழையென்றும் இடியென்றும் கருதாது நீ இவ்வரிய வழியைக் கடந்து வருதல் எமக்குத் துன்பத்தைத் தரும்.

இவள் இன்புறும்படி அருள்செய்தாயாதலின் இவளிடத்து நீ இன்றியமையாத அன்புடையை எனப்படும் வார்த்தை இனிது. மணம் நாறும் மார்பினையுடையாய்! முகில் பரக்கின்றபக்கமலையைக் கடந்து தெய்வ மகளிர் திரியும் அரியவழியைக் கடந்து இவ்விடத்தே நீ வருகின்ற நிலை எமக்கு இன்னாது.

இருளை ஒத்த கரிய கூந்தலை யுடைய இவளிடத்து நீ இன்றியமையாத அருளினையுடையை என்று கூறுகின்ற வார்த்தையோ இனிது. விளங்குகின்ற வேலை வலக் கையில் ஏந்தி நீ ஒருவனென்று கருதாது யானை உலாவு கின்ற அரிய வழியால் இவ்விடம் வருதல் எமக்கு இன்னாது.

அவ்வின்னாமையினால் எமக்குத் துன்பம் வருதலின், ஐய! இனி இராக் காலத்து வாராதீர். இவளுடைய மிருதுவான தோள்களைப் பூக்கள் விரவிய அகன்ற பாறையிலே, அழகு செய்யும் மலைச்சாரலிடத்தே, பகற் காலத்துப் பெறுவை.

## 14

**தோழியிற் கூட்டம் நிகழ்ந்தபின், முற்காலத்திற் பணிந்து பின் நின்றோனைத் தோழி தானே பணிந்து கூறு கின்றாள்.**

கரியபிடி முழந்தாளில் நின்றுதானே வளைகின்ற மூங்கிலின் கோலை நெல்லுடனே வளைத்துத் தின்னும். தின்ற பின் அம்மலையில் நெருங்கி வளரும் வாழைகளுட் புகும். புகுந்து வருடை மானின் இளம்மறிகள் பரந்து திரியும் அவ்விடத்தே துயில் கொள்ளும். இருள் செறியும் சோலையினையும் விளங்குகின்ற நீரினையுமுடைய மலைநாட! பகைவரை வருத்தும் வலியினையுடையதும், பாம்பின் பொறிபோலும் புள்ளிகளுடையதுமாகிய வில்லிடத்தே

வைத்த கையுடையையாய் நின்முய்; நின்று நிரைத்தவளை யணிந்த முன்கையுடைய என் தோழியை நோக்கி அவட்குக் காமக்குறிப்புத் தோற்றுவித்தாய்; அவள், பசியபுனத்திற் படிகின்ற கிளிகளை ஒட்டுவதைப் படிப்படியாக மறப்பித் தாய். இவளை நின்வயத்தளாக்கி விட்டாயாதலின் அவள் உன்னை இடைவிடாது நினைத்தலை விரும்புவாள்.

இம்மலையிடத்தே பாறை மீது பலாப்பழங்கள் விழும். அப்பழங்களைக் குன்றிடத்து வாழும் கானவர் எடுத்து உண்பர். அங்குப் பலாப்பழமும் பெரிய சோற்றுத் திரளு முடைய, பிள்ளையால் வறுமைப்பட்ட சிறுகுடிலில் இருக் கும் செல்வமுடையவன் ஒருவன் உளன். அவனது செல் வப்புதல்வியே இவள். ஆதலால் அவள் நின்னைப் பிரிந்து வருந்துதல் ஆற்முள்.

நீயோ காற்றிலும் பார்க்க வேகமாகச் செல்லும் தேரையும், களிற்றையும் நின்பால் வந்த புலவர்களுக்குக் கொடுத்தலால் கை ஓய்ந்து இராது மழையினும் பார்க்கக் கொடுத்தலிற் சிறப்படைந்தாய். முன்னர், நீ, சுரபுன்னை வளரும் மலைச் சாரலிற் றிரியும் வருடைமான் மறியை வளர்ப்பவர்போல நீங்காமல் இவளைப் பாராட்டித்திரிந் தாய். இப்பொழுது பிரிவையாமுல் ஆபரண மணிந்த மார் பையுடைய என்தோழியது அழகு நீங்கும். குதிரையை மிகக் கடுமையாகச் செலுத்தும் முட்கோல்போல நீ கொடுமையுடையை யல்லை யாதலை யான் அறிவேன். ஆதலின் யான் அவளை நின்னிடத்திற் சேர்ப்பேன்.

## 15

தலைவன் விருந்தாகச் சென்றவிடத்து நிகழ்ந்ததைத் தலைவி தோழிக்குக் கூறுகின்முள்.

ஒள்ளிய வளையினையுடையாய்! இங்கு நிகழ்ந்தது ஒன்றைக் கேட்பாயாக. நாம் தெருவிடத்து மணலாற் சிறு

வீடு கட்டி விளையாடும்போது சிற்றில்லைக் காலால் அழித்துக் கூந்தலிற் சூடிய மாலையை அறுத்து, வரியினையுடைய பந்தை எடுத்துக்கொண்டு ஓடி நமக்கு வருத்தத்தை உண்டு பண்ணும் காவலில்லாதவனை நீ யறிவாயன்றோ? ஒரு நாள் யானும் அன்னையும் இல்லிடத்திருந்தோம். அஞ்ஞான்று, அவன் வந்து "வீட்டில் இருப்பவர்களே! உண்ணும் நீர் விடாய்த்து வந்தேன்" என்றான். அன்னை என்னை நோக்கி, விளங்குகின்ற பூணினையுடையாய்! பொற்கரகத்தால் நீர் ஊற்றி உண்ணச் செய்துவா வென்று சொன்னாள். யான் அக்கள்வன் என்று அறியாது சென்றேன். தண்ணீர் வார்த்தலும் அவன் எனது வளையணிந்த முன் கையைப் பிடித்திழுத்தான். யானும் கலங்கி, அன்னாய்! இவன் செய்த காரியத்தைப் பார் என்றேன். அன்னையும் சத்தமிட்டு ஓடி வந்தாள். வருதலும் யான் அதனை மறைத்து இவன் தண்ணீர் குடித்து விக்கினான் என்று ஒரு பொய் கூறினேன். அன்னையும் அவன் முதுகைத் திரும்பத் திரும்பத் தடவினாள். அவனும் என்னைக் கொல்லுவான்போலப் பார்த்துச் சிரித்தான். இதுவே நிகழ்ந்ததாகும்.

## 16

இரவுக்குறி வந்த தலைவனிடத்துத் தோழி, இரவுக்குறியது ஏதமும். ஏதத்தால் வருந்துன்பமும் தன்னுள்ளத்து விருப்பமும் கூறி வரைவு கடாவுகின்றான்:

புலி, யானையின் முறம்போன்ற செவி மறைப்பிடமாக வந்து அதன் மீது பாயும். யானை கோபித்துத் தனது நீண்ட கோட்டின் கூரிய முனையினாற் குத்திப் புலியினது மார்பைத் திறந்து தன் கோபத்தைத் தணிக்கும். பின்பு அது மல்லரின் வீரத்தைக் கெடுத்த திருமால்போல உயர்ந்த பாறையுடைய மலைச் சாரலிற்றன் சுற்றத்தோடு திரியும். யானை புலியைக் கொல்லும் தோற்றம், துரியோதனனைப் பீமசேனன் தொடையில் அடித்து உயிரைப்

போக்கியது போல் இருக்கும். இவ்வகையான மலைநாட்டை யுடையவனே ! யான்கூறுகின்றதனைக் கேட்பாயாக.

நீ தாமரைப் பூவாகிய கண்ணியைச் சூடிச் சந்தனத்தைப் பூசி மாலையணிந்தவள் செய்த குறியிடத்தே வருவாயாயின், மணம் நாறுகின்ற மலைக்கண்ணே நின்று பலியைக் கொள்ளும் தெய்வங்களில் ஒரு தெய்வம் என்று கருதிச் சிறுகுடியிலுள்ளோர் அஞ்சுவர்.

குளிர்ந்த ஆடையை உடையையாய் ! இராக்காலத்தே சோர்ந்து விழும் கூந்தலையுடையவள் செய்த குறியிடத்தே நீவரின் தினைப்புனங்களைக் காவல் செய்யும் குறைக்கொள்ளியும் கவணில் வைத்தெறியும் கல்லும் வில்லுமுடைய கானவர் யானைவருகின்றதென்று கருதி ஆரவாரிப்பார்கள்.

முத்து மாலையணிந்த மார்புடையாய் ! ஒடுங்கிய இடையுடையவள் செய்த குறியிடத்து இராக்காலத்து நீ வருவாயாயின், நின்னைக் கண்டு விலங்குமுதலியன பயந்து ஓடுகின்ற ஓசையினாலே, மிளகு படர்ந்த இம்மலையிலே உலாவுகின்ற புலியென்று இந்தச் செருக்குப் பொருந்திய ஊர் நினைக்கும்.

யாவராலும் புகழப்படுகின்ற ஒப்பில்லாதவனே ! அவர்கள் (விலங்கென்று அறியாது) நின்னை உண்மையாக அறிவார்களாயின் இக்கள வொழுக்கம் அறிந்தாரென்று இவள் உயிர் வைத்திராள். இவளின்றியான் உயிர்வாழேன். ஆகவே நீ நின் காரியத்தைத் தமர்க்குக் கூறி அவர் உடன்பட்டபின்பு பூக்கள் அலர்கின்ற விடியற்காலையில் வந்து இவளை வதுவை கொள்ளுதலை விரும்பாநின்றேன். அதற்குக் காரணம், அப்பொழுது நீ புதியாய் போல் வரும் வரையும் இவள் கலியாணத்திற் றோன்றிய நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும், யான் கண்டு மகிழ விரும்புவதாகும்.

## 17

தாமதித்து வந்த தலைவற்குத் தோழி தலைவி ஆற்ருமையும் ஆற்றுவித்தலது அருமையும் கூறி வரைவு கடாவுகின்ருள் :

வறட்சி என்பதை அறியாத புன்னை பக்கமலையிடத்தே நெருங்கி வளரும். உயர்ந்த மலையின் பாறையிடத்தே ஆண்யானை உறையும். அது தான் விரும்பின பிடி தன்னிடத்து நிற்கையினுல் தனக்குமாருன யானையைத், தனது நெஞ்சிடத்தில் கொண்டவலியினுல் அதன் புகர் முகத்தைக் குத்திப்புண்ணுக்கும். அவ் வீரம் மிக்க வேழம் குத்திவாங்கிய கொம்புபோல நறியகாந்தளின் உயர்ந்த முகை பள்ளங்கள் எல்லாம் நிமிர்ந்து நிற்கும். அப்பள்ளங்கள் நிறையும்படி அருவிகள் ஆரவாரித்து ஓடுமாறு மழை பெய்யும். இவ்வியல்புடைய மலைநாட்டையுடையவனே!

அயலார் அலர் தூற்றுகையினுல் என் தோழியின் கண்கள் தம் அழகை இழந்தன. அக் கண்கள் கயல் மீன் உமிழ்கின்ற நீர்போல நீரைச் சொரியாத காலத்துக் களவொழுக்கத்திற் கூடினுய். நீ மறந்தபின் இறையிடத்துக் கிடந்த வளைகள் நெகிழ்ந்து கழலாநின்றன. அவ்வருத்தத்தைப் பெற்றுக் கொண்டு இருக்கவும் கூடும். ஆனுல் அக் கண்கள் அதற்கு இயைகின்றனவல்ல.

ஊரார் அலர் தூற்றுகையினுல் நறிய நுதல் ஒளி கெட்டுப் பீர்க்கம் பூவினது அழகைத்தான் கொண்டது. அந்நுதல் பிறையின் அழகை இழவாதகாலத்து இயற்கைப் புணர்ச்சி நேர்ந்தது. அதன் பின் துன்பஞ் செய்யும்படி பிரிந்தாய். அதனுல் உண்டாகிய பசப்பைத் தெய்வத்தினுல் நேர்ந்த குறை என்று ஆய் பரவுக்கடன் செய்யவும் கூடும். அதனுல் எய்தும் பயன்யாது? அவ்வழகிய நெற்றி அதற்கு இயைகின்றதில்லையே.

நனவுக் காலத்தே அழகு கெடும்படி வருத்தஞ் செய்த (பிரிதலாகிய) நடுங்கத்தக்க துன்பம் கனவின் கண்ணும் வந்து வாட்டுதலால் இவள் வருத்தமுற்று ஆற்ருளாவள். இவள் நெஞ்சழிதற்குக் காரணமான வருத்தம், இறந்துபாடு எய்து வியாநிற்கவும் உயிரைப் போக்காமல் நிறுத்தவுங் கூடும். அக்கனவின் ஆற்றல் அதற்கு உடன் படுகின்றதில்லை.

கெடாத நோயாலே வருந்தி அமையாத என் தோழி மலையிடத்து இறக்கும்படி வருந்தியதினையின் முளை மழையைப் பெற்று அழகு பெற்ருற்போல இவள் நெற்றியின் அழகு நின் அளியைப் பெற்ற வடிவினைப் பெறும்.

## 18

**“யான் கொண்டு கலங்கிய வருத்தத்தைக் களைந்தேன்” எனக்கூறி அறத்தொடுநில் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்ருள் :**

கொடியிடத்தவும் கொம்பிடத்தவும் பூக்களைப்போலப் பொன்னுற் செய்த மாலையும், நெருங்கியவளையணிந்த கையும், அணைபோல் மெத்தென்ற மெல்லிய தோளும் உடையவளே ! நினது அடிகளில் நான் தங்குதற்கு நீ அருளாதிருத்தல் நினக்கும் பொருந்தினதோ என்று கூறினுன். பொன்னுற் செய்த மகரவாய்போன்ற தலைக்கோலம் மறைந்த நரந்தப் பூநாறும் கரிய கூந்தலின் முடியை ஓயாமற்றடவினுன். அது அழகு பெறும்படி கட்டிய ஒரு மாலையை விரலாலே சுற்றி மணந்து பார்த்தான். அதுவல்லாமல் நறவம் பூ அலர்ந்ததுபோன்ற எனது மெல்லிய விரலுடைய கையைத்தூக்கி அருளுடைய தனது சிவந்த கண் மறையும்படி வைத்துக் கொல்லன் உலை மூக்குச் சூடுடையதாய்க் காற்று ஊதுவதுபோலப் பெருமூச்சும் விட்டான். அது வல்லாமல் தொய்யில் எழுதின இளைய முலைகளை இனிய

வாகத்தடவினன். தொய்யில் எழுதும் குழம்பைக் கொண்டுவந்த கையினாலே, தான் விரும்பின பிடியைஅருள் செய்யும் மயக்கமுடைய யானைபோல மெய் முழுவதை யும் தடவுதலையும் செய்தான். தோழி ! அச்செயலால்யான் கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைப் போக்கினேன். இனி நீயும் யான் விரும்பிய விருப்பத்தில் மனம் வைத்து "நின் மகள் நங்குடிக்கு வடுவாகாமல் கற்புப் பூண்டாள்" என்று கூறி, நம்முடைய மனைக்கண் நிகழ்கின்ற அரிய மணம் அவனை விட்டு நீங்காமல் ஆய்க்கு அறத் தொடு நில். அது நமக்கு நல்ல தொன்றென்று கருதி நின்னோடு உசாவுவேன்; நீ இங்ஙனம் கூறின் நிலையில் லாத உலகத்திலே நிலையில்லாதோர் புகழ் நமக்குப்பொருந் தும்.

## 19

**"தலைவன் போய் பாராட்டிப் புகழந்தான் எனது மட னும் நாணும் நிற்காமல் நின்றேன் எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள் :**

மேகத்தை மின்னுகிய கோடுகள் பிளந்தோடும். அது போல ஐந்து வகையாகப் பிரித்துக் கோதி முடிந்த கூந்த லிடத்தே பொன்னுபரணங்கள் விளங்கும். பின் புறத்தே, தாழம்பூவை இடையிடையே வைத்துப் பின்னிய கூந்தல் தூங்கும். இவ்வாறு அழகிய கரிய கூந்தலும் மணம் வீசும் பூமாலையும், இனிய நகைப்பும், இலங்குகின்ற பல்லும், இனிய மொழியும், செவ்வாயும், நல்ல நெற்றியும் உடைய வளே ! உனக்கு ஒரு வார்த்தை கூறுகின்றேன் அதனைக் கேட்குதி.

அவன் போகாதே நில் என்று என்னை நிறுத்தினன். நிறுத்தி அணுக வந்தான். வந்து, நுதலையும் முகத்தையும் தோளையும் கண்ணையும் சொல்லையும் நோக்கி நின்று

உவமை கூறி நினைந்தான். நுதல் வியர்வை உடையதாய்த் தேய்ந்ததாயினும் பிறையுமன்று; முகம் மறுவற்றதாயினும் மதியுமன்று, தோள்கள் மூங்கிலின் தன்மையுடையனவாயினும் அவை மலையிடத்துப் பிறந்தனவல்ல. கண்கள் பூவின் தன்மையுடையன, ஆனால் அவை சுனையிடத்துப் பிறந்தனவல்ல. சாயல் மயில போன்றது, ஆனால் அது மெத்தென நடக்கும் மயிலுமன்று. சொல்லுச் சொல்லத் தளருமாயினும் கிளியுமன்று, என்று உறுப்புக்களைப் பொய் பாராட்டிப் புகழ்ந்தான். வலையர் விலங்குகளின் சோர்வைப் பார்ப்பதுபோல என் நெஞ்சழிந்த செவ்வியைப் பார்த்தான். தீண்டுதலையுஞ் செய்தான். மதத்தால் அறி விழுந்து குத்துக்கோல் எலலையில் நில்லாத களிறு போன்று பல முறையும் தொழுதான்; தீண்டினான்; ஆதலால் அவன் குணத்தில் அறியாமையே இல்லை.

## 20

**காம விருப்பு இல்லாத ஒருத்தியிடத்து ஒருவன் தனது காம வேட்கை தோன்றக் கூறி எதிர்விடை பெறாது இன்புறுகின்றான்:**

எதிரே அழகின் மிக்காள் ஒருத்தி வருகின்றாள். அவள் ஊரிடத்தேயுள்ள பூஞ்சோலையில் நீர் ஓடும் வாய்க்காலில் நிற்கும் ஞாழல் மரத்தின் பூங்கொத்துகளைப் பறித்துப் பூவும் மயிரும் சேரும்படி வைத்து முடிந்திருக்கின்றாள். தலையின் அடிமயிர் தோள்களிடத்தே சிறிது குலைந்து வீழ்ந்திருக்கின்றது. அதனால் அவள் முகம் பூரண சந்திரன் நிறைந்த நிலாவொளியை வீசியதுபோல் இருக்கின்றது. இவள் யாரோ? இம்மலையிலே வல்லவனாலே பண்ணப்பட்ட ஒப்பில்லாத பாவையோ? அன்றிப்பிரமாவினாலே நல்ல மகளிருடைய உறுப்புக்கள் எல்லாவற்றையும் ஒருங்கு கொண்டு ஒருவடிவாகப் பண்ணப்பட்டா

ளொருத்தியோ ? அன்றி ஆடவர் மேலுள்ள வெறுப்பாலே தன்னைக்கூற்ற மென்று அறியாதபடி மறைத்துப் பெண் வடிவு கொண்டு வந்ததோர் கூற்றமோ ? கொடிபோன்ற நுடக்கமும், எண் கோவையாகிய மேகலையையும், சில பூத் தொழிலுடைய ஆடையையும் உடையளாய் இருத்தலின் இவள் இவ்வூரிடத்துப்பிள்ளையால் மிடிப்பட்டாருடைய செல்வத்தையுடைய மகள் காண் ; இவளைக் காத்துவந் தவர்கள் இப்பொழுது காவாராய்ப் புறப்பட விடுதல் கொடிது.

இனி இவளை, நல்லாய்! யான் கூறுகின்றதைக்கேள் என்று போகாமற்றடுத்து வார்த்தை சொல்லிப் பார்ப்பேன்.

கண்டார் காதல் கொள்ளுதற்குக் காரணமாகிய மான் போலும் நோக்கத்தினையும் மடப்பத்தினையும் உடைய நல்லாளே ! சூட்டு மயிரினையுடைய அன்ன மன்ன நடையும் அழகிய விரும்பத்தக்க மயில்போன்ற சாயலும், கல்லை யுண்ணும் அழகிய புறப்போன்ற மடப்பமுமாகிய நல்ல தன்மைகள் அமைந்த உனது இவ்வழகு உன்னைக் கண்டவர் களை மயக்க முறுத்தும் என்னும் நிலைமையை நீ தான் அறிவையோ ? அறியாயோ ?

வளைந்த முன் கையினையும் வெள்ளிய எயிற்றினையு முடைய அழகிய நல்லாளே ! நிறத்தாலும் திரட்சியாலும் வளைகின்ற மூங்கிற் கூட்டத்தைப் போன்றதும், மென்மை யால் நுண்ணிய துகிலினையுடைய மெத்தை போன்றது மாகிய நின் விசாலித்த தோள்கள் காமக்கடலை நீந்துதற்குத் தெப்பமாகும். மூங்கிற் கோல்களாற் செய்தனபோன்ற உன் தோள்களைக் காண்பவர்களுக்கு வருத்தமாகும் என் பதை நீ யறிய மாட்டையோ ?

மயிர் நேரிதான வரிகளையுடைய முன்கையினையும் மடப்பத்தினையுமுடைய நல்லாளே ! முற்றின கோங்கமரத்

தின் இளையமுகை போன்றதும், மழைத்துளியாலுண்டான மொக்குள் போன்றதுமாகிய உனது தனங்கள் நின்னைக் கண்டவர்களின் உயிரை வாங்கிக்கொள்ளுமென்னும் நிலைமையை நீ தான் அறிவையோ? அறியாயோ?

இவ்வாறு யான் கூறவும், மயக்க முற்றாய்போலப் பிறருடைய வருத்தத்தை நீ அறியாயாது கேட்டார்க்கு யாதொன்றுஞ் சொல்லாயாய்க் கழிந்து போகின்றவளே! இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; நீயுங் குற்றமுடையையல்லை. உன்னை வீட்டின் புறத்தே புறப்பட விட்ட உன்னுடைய, சுற்றத்தாருங் குற்றமுடையரல்லர்; குற்றமுடையான் யாவனெனில், நிறையழிந்து கொல்கின்ற யானையை நீர்க்கு விட்டால் பறையடித்துச் செல்லுமாறு போலப் பறைசாற்றிச் செல்வதல்லது, பறைசாற்றாமற் செல்லாதொழிகவென்று சொல்லாத இறைவனை யென்க.

## 21

இதுவும் கைக்கிளை; கைக்கிளை என்பது ஒரு தலைக் காமம் "காமஞ்சாலா இடும்பை யோள்வயி—னேமஞ்சாலா விடும்பை யெய்தி—நன்மையுந் தீமையுமென்றிரு திறத்தாற்—றன்னொடு மவளோடுந் தருக்கிய புணர்த்துச்—சொல்லெதிர் பெறா அன் சொல்லியின்புறல்—புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே" (தொல்-பொருள்-அகத்திணையியல்-சூத் 50.)

மூங்கில்போற்றிரண்ட தோளும், மணம் நாறுங் கடை சுருண்ட ஐந்து வகையாய்ப் பின்னிமுடித்த கூந்தலும், மானின்பார்வையை வென்ற மடநோக்கும், மயில்போன்ற சாயலுமுடையாய்! அழகிய சிலம்பின் உள்ளிடுமணி ஆரவாரிக்கவும், ஒளியினையுடைய ஆபரணங்கள் விளங்கவும், செல்பவளே! ஒடுக்கத்தாற் கொடியும் விளக்கத்தால் மின்னலும், கண்ணுக்குத் தெரியாமையின் வருத்தம் போன்று யாதொன்றுந் தெரியாததுமாகிய இடையிடத்தே

கண்கள் விரும்பிச் செல்கின்றன. நின்னுடைய இளமைப் பருவத்திலே, செல்வமும் தலைமையுமுடைய உன் தந்தையின் பழைய அகன்ற வீட்டில் நின்றும் அடிக்கின்ற பந்தோடே தளர்ந்து ஒதுங்கிப் புறப்படுகின்றவளே! இப்பொழுது யான் கூறுதலைக் கேள்.

சில வார்த்தைகளை யுடையவளே! பாண்டியன் குளிர்ந்த பூமாலையைச் சூடிச் சந்தனத்தைப் பூசியிருப்பான். அவனது உயர்ந்த மதுரையிடத்துத் தேன் பரக்கும்படி நீலம் முறுக் கவிழ்ந்திருக்கும் ஏந்திய அழகிய மருப்புடைய யானையை வைத்திருக்கும் பகைவரைப் பாண்டியனது வேல் வருத்துதல்போல் நீலமலர் போன்ற நினகண்கள் கோபித்து என்னை வருத்தா நின்றன, நீ இவ்வாறிருத்தல் உன் இளமைக்கு ஏற்றதோ?

பொன்னாற்செய்த குழையினையுடையாய்! உன் நிறமோ மழைபோற் கொடையுடைய பாண்டியனது அசோக மரச்சோலையின் நடுவே நின்ற மாவின் தளிரை ஒத்தது. பந்தியிலே நிற்கும் பாய்ந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேருடைய பாண்டியனாற் கோபிக்கப்பட்டவர்களது மார்பில் தைத்த அம்பிலும் காட்டில் உனது நிறம் எனக்கு நோயைத் தருதல் உலகிற் கொடுமைகளில் மிக்க கொடுமையன்றோ?

பலவகைப்படத் தொடுத்த குளிர்ந்த மாலை அணிந்த பாண்டியனது, உயர்ந்த சிகரமுடைய பொதிய மலையிடத்து அழகிய இளம் பூங்கொத்துக்கள் போன்ற சுணங்கினையுடையவளே! முத்து வடத்தைத் தன்னிடத்தே கொண்ட நின்னுடைய இளைய தனங்கள் இப்பருவத்திலும், அப்பாண்டியனுடைய மிகுந்த வலியும் மதமுமுடைய யானையின் கொம்புகளிலும் கோபமுடையனவாயிருக்கின்றன. இக் கொடுமை இப்பருவத்திற் றக்கதோ?

இவ்வகையான பலவற்றை யான் நீள நினைந்து கூறினேன். அவற்றிற்கு விடையாக யாதொன்றுங்

*கூறுது, கவிழ்ந்து நிலத்தைப் பார்த்துப் பின்னை, அவ் விடத்தே தோழியரை நினைவாள்போல, துணையாயமைந்த தோழியர்க்குப் பொருந்தின கண்ணையுடையளாய் என்னறிவைத் தனனிடத்தே அகப்படுத்திக்கொண்டு தன் மனையிடத்தே மீண்டு போனள்.*

## 22

### இதுவுங்கைக்கிளை :

வாரிய கடை சுருண்ட ஐம்பாலும், வளைந்த இறையுடைய மெல்லிய தோளும், பெரிய அழகிய மலர் போலும் கண்ணும், மான்பிணையின் வெருவிய நோக்கும், மழைபெற்ற தளிர்போலும் நிறமும், பிறைபோல் நெற்றியும், முகைபோலும் கூரிய பல்லும், கோடிபோல் இடையும் உடையவளே! காலுக்கு ஏற்ற சிலம்பின் உள்ளிடுமணி ஆரவாரிப்ப, நிறைத்த வளையுடைய கையை வீசினவளாய் என் அரிய உயிரைப் பற்றிக்கொண்டு அதனைத்திருப்பிக் கோடாது போகின்றவளே ! யான் கூறுகின்றதனைக்கேள்.

*வருத்தந்தரும் காமநோய் அளவுகடந்து யான், சிறிது உயிருடன் இருக்கும்படி என் உயிரை வாங்கிக்கொண்டு இளமைப் பருவத்தாலே அறியாமற் போகின்றவளே ! நின்னிடத்திற் றவறில்லை. ஆயினும் நின்னை யல்லாமல் அந்நோயைப் போக்குவார் பிறரில்லை. அழகிய இவள் இவ்வகை நோய் செய்யும் என அறிந்தும் தஞ்செல்வச் செருக்காற் புறப்படவிட்டலு முடைய சுற்றத்தாரைத் தவறுடையர் அல்லரென்று கூறலாமாகிற் கூறு.*

*(அறிவு நிறை ஓர்ப்புக் கடைபிடி) என்னும் ஒழுக்கங்கள் தேய்ந்து யான் மறந்திருக்கும்படி என்னைச் செய்து, தினமும் என்னை வருத்துதற்குக் காரணமான நீ செய்த நோயை நினது இளமையால் அறியாமற் போகின்றவளே !*

நின்னிடத்திற் பிழையில்லை. ஆயினும் உண்டென்று காட்டாது வருத்தும் இடையுடைய நின்வடிவை அறிந்திருத்தும், தஞ்செல்வச் செருக்கால் உன்னைப் புறப்படவிட்ட உன் சுற்றத்தாரைத் தவறுடையர் அல்லர் என்று கூறலாமாகிற் கூறு.

வருத்தமிகுந்து நெஞ்சழியுமாறு மென்மேலும் நெருங்கி வருகின்ற காமநோயைக் குறிப்பால் அறிதலின்றிச் சொல்லிக் காட்டினும் அறியாதவளே! நின்னிடத்து அப்பிழையில்லையாயினும், பைய உயிரை வாங்காது விரைய உயிரை வாங்கும் நின் வடிவை அறிந்து வைத்தும், தஞ்செல்வச் செருக்காற் புறப்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையர் அலலரென்று கூறலாமாகிற் கூறு.

யான் குற்றங் கூறில் கூறுவது புறத்தே செல்லவிட்ட நும்முடைய சுற்றத்தாரையாகும்; நின்னையன்று. பின்னை இக்காமநோய் பொறுக்கத்தக்க அளவையன்றி மிகுதியாயிற்று. பொற்குழையாய்! யான் இங்ஙனம் வருந்தி நிற்கின்ற நிலைமையை விட்டு இவ்வூரின் மன்றத்தே மடலையேறி நீ எய்தும் பழியை யான் நிறுத்துவேன் என்று இருக்கின்றேன்.

## 23

குறையுற்று இரந்து பின்னின்ற தலைவன் ஆற்றானாய்த் தலைவியை நோக்கி இங்ஙனம் வருத்து வையாயின் நீ செய்யும் தவத்தினால் பிரயோசனமில்லை எனக் கூறுகின்றான்:

முறுக்கு அவிழ்ந்ததும் அரும்புகள் நீருக்கு மேலே ஓங்கினதுமாகிய இலையுடையதாய்த் தாமரை இருக்கும். அத்தாமரையின் வளையத்தில் முத்தை அழுத்திச் செய்தது போன்ற வளை கையிடத்தே விளங்கும். அக்கைகள் துடுப்புப் போன்ற காந்தள் மலர்களை ஒத்தன. திரட்சி மிக்க அம்மெல்லிய முன் கைகளினாலே, **சாதிலிங்கம் பூசிய ஒளி விடும் வேலைப்பாடமைந்த வாய்களையுடைய, மரத்தாற் செய்த சிறு பானை**

யாலும் பாவையாலும் விளையாடுதற்குச் செல்வாய். செல்லு மிடத்து அழகிய சிலம்புகள் மிக ஆரவாரிக்கும்படி சில அடிகளை எடுத்து வைத்து மெத்தென நடப்பாய். உன்னுடைய இளமை நீங்குதலால் பின்னுதுவிட்ட ஐம் பாலைக்கண்டு என்னிடத்துண்டானவெல்லாம் என்னை விட் டுப்போயின. இவ்வாறு எனக்கு நேருமாறு செல்கின்ற வளே! யான் கூறுகின்றதனை இப்பொழுது கேள்:

யான் மயக்க முறுகையினலே அதுகண்டு தானும் மருண்டு இவனுற்ற நோய் யாதென்று கேட்கும் அருள் இவட்கில்லையென்று யான் கூறுவேன். அது கேட்டு அய லார் நின்னைப் பழிக்கும். அதனால் கூரிய எயிற்றினை யுடைய இளையமகளிர்க்கு நடுவே பலவகைக்கோலத்தாலே பொலிவு பெற்று, நீ, தைத்திங்களில் நீராடிய நோன்பின் பயனைப் பெறுவியோ? பெருய்காண்;

தலையிற் கிடந்து அசையும் தலைப்பாளை யென்னும் ஆப ரணமுடையவளே! ஒளி கெடும்படி இவன் மனத்தில் உண் டாகிய நோய் யாதென்று கேட்கும் அருள் இவட்கில்லை யென்று யான் கூறுவேன். அதனைக்கேட்டு அயலார் பழிப் பர். அப்போது நோன்பாகிய விளையாட்டைக் கொள்ளும் மகளாய், நீ, பிறர் மனைக்கண்ணே ஐயமேற்றுப்பாடி நீ அவ்விடத்துப் பெற்றவைகளைப் பிறர்க்குக் கொடுத்ததனுலுள்ள பயன் நினக்குப்பயன் தருவதொன்ருே? தாராதுகாண்:

ஆராய்ந்திட்ட வளையினையுடையாய்! நீதான் இடை யிடையே பெருமூச்செறிந்து 'இவன் மனத்திலுண்டாகிய நோய்' யாது என்று கேட்கும் நோய் இவட்கு இல்லை யென்று யான் கூறுவேன். அது கேட்டு அயலார் நின்னைப் பழிக்கும். அப்போது, சிறுவனைப்பேணி வளர்த்து அவனுக்கு வேருே ருத்தியினுடைய பெண்ணின்மனையைக் கோடற்குச் சிறு சோற்றைச் சமைத்து ஆயத்திற்கு இட்டு நீ நறியறுதலையுடைய மகளிரோடே மகிழ்ந்த நோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ பொருந்தாது.

*நீ நெஞ்சு வருந்துபடி யான் இவற்றைக் கூறினேன். அழகிய ஆபரணமணிந்தவளே! நின்னை விரும்பினோர் வருந் தும்படி நீ செய்த கொடுமைக்கு நீ ஓர் உதவி செய்யா யாயின் நீ செய்த அத்தீங்கினாலுள்ள பயன் நின்னைப் பற்றாது விடாது. அதுவல்லாமல் நீ அருளை வெறுப்பையா யின் நினக்கு அவை பயன் தருமாறில்லை.*

## 24

தலைமகனின் குறை முடிக்க எண்ணிய தோழி தலை மகளோடு மாறுபட்டு அவனது குறை முடிக்குமாறு கூறு கின்றாள் :

*கண் சென்று நுழைந்து பார்க்கும் நுண்ணிய இடை யும், வளைந்த இறையும், வளை யணிந்த முன் கையும், மயில் போன்ற சாயலுமுடைய மடப்பத்தை யுடையவளே! அழகுதேமல படர்ந்த உன் அழகிய முலைகளையும், பிறை போன்ற நெற்றியையும், நறிய மாலை சூடிய கரிய கூந்தலை யும் ஒளி பொருந்திய அழகு தேமலையும் பார்த்தார்.*

*இனிய நகையினையுடையாய்! நின்னை நோக்கித் தொழுதபின், தெரியிழாய்! என்னை நோக்கி, "உலகத்திற் கண்ணுக்கு நிறைந்த அழகினையுடைய மகளிரைக் கண்ட வர்களுக்கு, உள்ளே நின்ற காம நோய் மிகும்படி விரைய உயிர் போகும்படி துயர் செய்தல் அவர்க்குப் பெண்டன் மையன்று" என்று கூறிக் கண்ணும் உருக நின்று நடுங் கினான். நடுங்கி, இவ்வாறொருத்தன் தன்னிடத்துப் பொரு கின்ற களிற்றையொத்த தன்மை கெட்டு மனமுடைந்து உள்ளே உருகுவான்போல இரா நின்றான். இவன் இவ் விடத்து வந்து என்ன காரியஞ் செய்தான்! என்றாள். அதுகேட்ட தலைவி, 'நம்மாற் பிறர்க்கு நேர்ந்த தீங்கில்லை யாகப் தெருவினின்று கலங்குவாரைக் கண்டு, நீ அத்துன்ப மாகக் காண்பனவற்றை நின் தலையிற் கொள்கின்றாய்.*

இது வாரணவாசியிலுள்ளார் பெறும் அருளாகிய பதவியை நீ ஏறறுக்கொண்டதுபோலாகும், அது கேட்ட தோழி, அடிபரந்த முலையினையும் ஆராய்ந்த பூணினையுமுடைய நல்லாய்! பெரிய போர் செய்யும் கண்ணையுடைய என் தோழி செய்த பொறுத்தற்கரிய வருத்தம் விரைவில் உயிரையும் வாங்கும். ஒண்டொடி! அஃது உயிரை வாங்காதபடி இந்நோய் தீர்த்தற்குக் காரணமான மருந்தை அருளாய்; அம்மருந்துதான் மிகவும் அரிதன்று; நின் முகங் காண்டல் காரணமாகப் பிறந்த அருளை மருந்தாகும் தன்மையாக உடையனென்று கூறு நின்றான்; ஆதலால் அவன்றான் நின்முகத்தை இக்காலத்தே பெறின் அது மருந்தாவதல்லது வேறு சிறிதும் மருந்தில்லையாயிருக்குமாயின், திருந்திழாய்! இனி நாம் என் செய்யக் கடவேம், என்றார். அதுகேட்ட தலைவி, 'பொன்செய்வாம்' என்று கூறி நகைத்து, உலகவொழுக்கததைத் தப்பி ஒருவன் தெருவின்கண் நின்று கூறுங் கூற்றை உண்மையென்று கொண்டு அதன் உண்மையை உணரேமாய் நாம் அதனைத் தெளிதல் எளிதென்று சொல்லக் கடவேமென்றாள்.

அது கேட்ட தோழி பின்னை நின் கருதது இதுவாயின், ஒருவன் சாந்தன்மை எளிதன்று எனக் கூறக் கடவேமென்றாள்.

அதுகேட்ட தலைவி மாட்சிமைப் படாத இவ்வூரில் அம்பல் அலராக மலரட்டும் என்று கருதி நாணையும் நிறையையும் விரும்பாத குடிப்பிறப்புக்கு உரிய ஒழுக்க நெஞ்சு இல்லாதவனாயினன். அவனுக்குத் தான் இறந்துபடும் எனக் கூறும் அத்தன்மை இல்லையாகும். அதுகேட்ட தோழி நின் பூணுகத்திற் புணர்ச்சியை மனத்தாற் கருதி இரவுந் துயில் கொள்ளானாய் நங்கேண்மையை விருப்புற்றவனை நாணம் கொல்கின்றமையான், எதிரே நின்று மீட்ட நன்மை நமக்கு வருதலின் அதற்குத் தக்கது அறிந்து செய்வாயாக என்றாள்.

## 25

**தலைமகற்குக் குறை முடிக் எண்ணிய தோழி அவளோடு மாறுபடக் கூறி அவன் நீங்கிய விடத்து அவன் குறை மறுத்திருத்தற்கு ஏற்பன சொல்லித் தலைவியைக் குறை முடிப்பிக்கின்றாள்.**

*ஏடீ! இவன் ஒருத்தன் என்ன குறையைப் பெற்றிருக்கின்றான்? இவனது கேட்டைப் பார்ப்பாயாக; அறிவுடையோர் தம்முடைய செல்வம் முடிவடைகையினால் வறுமை அடைவர். அடைந்து தமது வருத்தங் களையவேண்டித்தக்க உறவினரிடஞ் சென்று தங்குறையை அவர்க்கு வாய் விட்டுச் சொல்லத் தொடங்கிப் பின்னை அதனை முடியச் சொல்லமாட்டாதிருப்பர். அதுபோலத்தான் கூறக்கருதிய தனைக் கைவிட்டு என்னைப் பலமுறையாகப் பார்ப்பான்; பின் யான் தன்னை நோக்கின் தான் மெலலத் தலையை இறைஞ்சி நிற்பான்.*

*[தலைவன் தம்மிடத்து வருகின்றதைக் கண்டு தலைவிக்குக் கூறிப், பின்னர் அவனெதிர் சென்று அவனை நோக்கிக் கூறுகின்றாள்.]*

*ஏடா! நின்னைவிட்டு நீங்காத நிழல்போல் என்னை விட்டு நீங்காமற்றிரிகின்றவனே! நீ எம்மோடு ஒரு நட்புச் செய்யக் குறித்தாய்போலக் குறிப்பாலே எமக்கு அறிவித்தாய். அதனை இதுவென்று கூறு.*

*[தலைவன் தன் நெஞ்சொடு கூறுகின்றான்.]*

*யான் என்குறையைச் சொல்லின் இவள் மறுக்க மாட்டாளா?*

*இவ்வாறு ஆராய்ந்து தம்மிடத்து இரந்தவர்களுக்கு யாதும் ஒன்றை முகம்மாறுது கொடாது உயிர் வாழ்தலிற் சாதல் நல்லது என்றான்.*

அதுகேட்ட தோழி, இவள் தந்தை இரப்பார் மேலுள்ள காதலினால் யார்க்குஞ் சிறந்த பொருள் கொடுப்பன். நீ வேண்டிய பொருள்தான் யாது, என்றாள்.

அதுகேட்ட தலைவன், கூற்றின் குறிப்பறியாதவளே ! என்னிடத்துப் பொருளை இரக்கும் மிடி இல்லை. மருண்டு மடநோக்கஞ் செய்யும் நின் தலைவி என்னை அருளுதலை யான் இரக்கின்றேன், என்றான்.

[அதுகேட்ட தோழி இவனிடத்துக் களவொழுக்கம் அறியாள் போன்று கூறுகின்றாள்.]

கடும்போரிற் பகைவரைக் கொன்றகளிறு போன்றவனை ஒரு மகள் அருளும்படி இருந்த குறை என்னவோ ?

[தலைவன் நீங்கியபின் தோழி தலைவியிடங் கூறுகின்றாள் :]

ஒண்டொடி ! இவன் எங்கள் தந்தையின் உள்ளம் குன்றாதபடி வேண்டுவன கொடுத்துத் தான் குறித்த தொன்று கைப்பற்றாமல் போகாதிருக்கும் குணமுடையன். அதனால் நீ அருளினுந் தாழ்வில்லை. அவன குறையுற்று நிற்கின்ற காலத்து யான் தன்னை இகழ்ந்து சிரித்தாலும் பலகாலும் வருவான். கள்வர் தாங்குறித்த பொருளை நோக்காது நோக்குமாறு போல அக்குறைவுக்கு நடுவே நின்னை மனம் நோக்காது நோக்கும். அதனால் இவன் முற்றாக நாணமிலன். நாணமின்மையான் இவன் போகின்ற போக்குப் பலராலுஞ் சிரித்து இகழப்படும்.! யான் மடன்மா ஏறும்படி, நறிய நுதலினையுடையவள் அருளாளாய் அருளை மாறிவிடின், அவளோடு என்னிடை நிகழ்ந்தது ஊரிடத்தே அலரா மெனக்கருதிச் செல்வான்போல விருந்தது.

## 26

இது அடியோர் தலைவராய பெருந்திணை. தலைவனுந் தலைவியும் மாறுபட்டுக் கூறித்தலைவி கூடக் கருதிக் கூறுகின்றாள்.

"இவனொருத்தன் தன்னோடு புணர்ச்சிக் குறிப்பின்றி நிற்பாரையும் தான்புணர்ச்சிக் குறிப்புடையனாய்க் கையாலே வலிதிற் பிடித்துக்கொள்ளுவான். ஆதலால் இவன் நாணிலன் எனத் தலைவி கூறினாள். அதுகேட்ட தலைவன், "அப்புணர்ச்சிக் குறிப்பினது பகுதியாகிய மெய்ப் பாடெல்லாம் நின்னிடத்து பொருந்தியிருந்தாலும் இல்லா விட்டாலும் உள்ள நன்மை தீமைகளை நீ யறிவாய். யான் புணர்ச்சிக் குறிப்பை அறியேன்; பூங்கொத்து நெருங்கின கொடியை ஒப்பாய்! நின் மேனி தழுவுவதற்கு இனிதா யிருக்கையினாலே நினனை யான் புல்லினேன்" என்றான். அதுகேட்ட தலைவி, 'ஏடா,' தனக்கு இனிதாயிருக்கு மென்று கருதிப் பிறர்க்கின்னாதனவற்றை வலிதிற் செய்வது இன்பத்தைத் தருமோ என்றாள்.

அதுகேட்ட தலைவன், சுடர்த்தொடீ! உனது முதுமை யிடத்தே நிகழ்கின்றவற்றை இப்பொழுது கைவிடு. யான் கூறுகின்றபடி ஒழுகு. நீர் உண்பார் அதுஇனிதாயின் உண்ப ரல்லது அந்நீர்க்கு இனிதாயிருக்குமென்று கருதி அதனை உண்பரோ? ஐந்து வாயுடைய பாம்பின் வாயிலே அகப்பட்டு வருந்திச் செய்யுங்காரியம் அறிகிலேன். இனி யாது செய் வேன். மறுவில்லாத மதிபோல விளங்கும் முகத்தினை யுடைய மகளிரை வலிதிற் புணர்தலும் ஒரு மண மென நூலிற் கண்டது என்று கூறினான்.

அதுகேட்ட தலைவி, "நூல்களால் உயர்ந்த மணம் கூறப்பட்டு, உலக ஒழுக்கமும் அவ்வாறு இருக்குமாயின், அவனும் யான் மறுத்துக் கூறுஞ் சொல்லைக் கொள்ளாது வலியின்றி வருந்துவானாயின், அவன் மனத்தில் முற்பிறப் பில் யானும் அவனும வேறல்லம் என்பதொன்று அவனிடத் துண்டாகுமாயின், நெஞ்சே அவனோடு நமக்கு இனி மாறுபாடுண்டோ எனப்புணர்ச்சிக்கு உடன்பட்டுக் கூறினாள்.

## 27

தோழி தலைவனது குறையை முடிக்கக் கருதினாள். கருதி அவன் நிலைமையைத் தலைவிக்குக் கூறினாள் தலைவி உரைத்த மறுமொழியால் அவள் குறிப்பறிந்து, 'இவ்வகையான தலைவனுக்குச் சொல்லு' என அவளுடன் நகையாடிக் கூட்டமுண்மையைத் தான் அறிந்ததை அவளுக்குக் கூறுகின்றாள் :

*அவன் தான் தொழுகின்றமையைப் பிறர் காண்பர் என்பதையும் கவனிக்க மாட்டான். நாம் நோக்குங்கால் அவன் எம்மை நோக்கித் தொழுது நிற்பான். அவன் இவ்வாறு நம்மைத் தொழுதல் பழியாகுமென்று தொழுதலை விலக்கி அவனைப் போக விடுவேன். யான் அப்படிச் செய்தல் அவனுக்கு வருத்தஞ் செய்தலின் அவன் செல்லாது நிற்பன். ஆதலால் நாம் இனி அவனை இவ்விடத்தே வராமற் செய்தல் இயலாது. ஏடீ! இங்ஙனம் காத்தற்கு அரிதான நிலைமை கண்டு மேல் என் செய்யக் கடவேம்?*

*அழகிய தோடணிந்தவளே! வருத்தத்தையுடைய அவனிடத்து நீ கூடுங் கூட்டத்தை யான் விரும்பி நின்னைப் பல முறையும் அழைத்துக் கொண்டு போய் விட்டேன் போலவும் இருப்பேன். அவன் இதை அறியாதபடி நீ என் தோள் மேல் கரும்பாக எழுதும் குழம்பிற் கென்று யான் அவனிடத்திற் செல்வேன். அவ்விடத்தே நீ வந்து, 'இவ்விடத்தை நினக்கு இருப்பிடமாகக் கருதி வந்தாயோ' என்று என்னைத் தேடி வந்தாய் என்று சொல்லி அவ்விடத்தினின்றும் குறியிடத்தே செல். அவன் நோய் தீர்க்கும் மருந்து நீ யாதலின் அவன் உனது நல்ல பாதங்கள் மீது வீழ்ந்து உன்னை இரப்பான்.*

*அதுகேட்ட தலைவி, நீ வாராய்; இன்னும் ஒரு முறை அவனிடத்தே சென்று, "உன் குறை முடித்தலைத் தனக்*

குக் கடனுக அவள் ஏற்றுக்கொண்டு கூட்டத்திற்கு உடம் பட்டாள் " என்று அவனுக்குக் கூறமாட்டேனென்று என் னுடம்பைத் தொட்டுச் சத்தியஞ் செய்வாயாக.

அதுகேட்ட தோழி, யான் கூறிய குற்றம் இதுவோ ? இனி இது செய்யும் வகையைச் சுருக்கமாகக் கேள் ; நின் னேடு யான் இதனை ஆராய்ந்தபோது நீயும் நாணததால் நிலத்தைக் கீறி என்னிடத்தே வேறுபட்டு நின்ருய். இந் நிலை என்னுடன் செய்தற்கு எளிது. இதனை நீ அவனுடன் நின்று பார்த்துச் செய்தல் அரிதன்ருே ?

## 28

முன்னேல்லாம் இடைவிடாது அருமை பாராட்டி ஓய்ந்த தலைவன் வந்து தலைவியைப் புகழ்ந் துரைத்தான். தலைவி (பரிகாசமாக) இகழ்தலும் தலைவன் அவளோடு மாறுபடக் கூறி நகையாடிக் கூட்டத்துக்கு உடம்படு விக்கிருன்.

உனது அழகிய முகம் மதிபோன்றது. பின்னி விடப் பட்டதும இரத்தினம விளங்குவதுமாகிய கூந்தல மதியைச் சூழ்ந்த மேகம போன்றது. பின்னிவிட்ட மயிரிடத்தே நுண்ணிய நூலாற் ருெடுக்கப்பட்ட மலர்கள் மலர்ந்து தேனுல் ஈரமான இதழகளுடையனவாயிருக்கும. அவை (மதியை விழுங்கிய) கரும்பாம்பினிடத்தே கிடந்து அதன் கரிய நிறத்தோடு மாறுபடும் கார்த்திகை நட்சத்திரம் போன்றன. இவவாறு பொருந்திய அழகால், கண்டார் மனத்தை வருத்திச்செல்கின்றவளும் அழகிய கூந்தலுடைய வளுமாகிய அணங்கே ! நீ என்னை இகழாது யான் கூறு கின்றதை ஆராய்ந்து பார். பண்டு நீ எனக்குப் பெரிய பொன் குவியல் போன்றிருப்பாய்.

தலைவி :—இவள் யான் தன்னுல் அழகு பெறறேன் என்று கூறுவதைப் பாராய். நீ எழுதுதலால் அழகு பெற்ற

எமது முலையாலும் மார்பிடத்தே இடைவிடாது உழுத நல்வினையுடையேமோ ? அஃதின்றே.

**தலைவன்** :—வண்டுகள் ஒலிக்கின்ற பூவாற் செய்த மாலையணிந்த அழகுடையாய்! நீ உழுதாய் ; திருந்திய ஆபரணமணிந்த மெல்லிய **தோளில் யான் தீட்டிய கரும்பு** அழகு பெற்றது, நின் முலைகள் இடைவிடாமல் என் மார்பைப் புணர்ந்ததன் பயனலன்றோ ? நின் குற்றந்தீர்ந்த முகம் போலக் குவளை மலர் மலர்ந்திருக்கும். அக் குவளை மலர் போன்ற கண்கள் அழகு பெறுவதும் நீ இடைவிடாது புணர்ந்ததன் பயனலன்றோ முல்லை முகை ஒத்த எயிற்றினையுடையாய். இவ்வழகுகளன்றி வேறு அழகு உண்டாக நீ புணர்வாயாக (இனி யான் வரைந்துகொள்வேனென்றவாறு.)

அதுகேட்ட தலைவி ; ஏடா ! **நீ எனது தோளிடத்து எழுதிய கரும்புக்கு நீ** கூறிய அழகை ஏற்றுக்கொண்டேன். நீல மலர் போன்றதும் வேல்போன்றதுமாகிய கண்களுக்கும் மற்றுமுள்ள உறுப்புகளுக்கும் பெரிய பசப்பு உண்டென்று கூறுவாய் ?

அதுகேட்ட தலைவன் ; நல்லாய் ! இகுளையே ! யான் கூறுவதைக் கேள். அரசனைச் சார்ந்து அவன் செல்வத்தைப் பெற்று ஒருவன் உயர்வடைவானாயின், அவனாலுள்ள பலனை வேந்தன் கொள்வன்.

இவ்வாறு இவ்விடத்தே யான் எய்துவேன். [கூட்டத்தால் செயற்கை அழகுபெற்ற உன்னை மணந்து கொண்டு நின்றே பெறும் பயன் எல்லாங் கொள்வேன் என்றவாறு.]

**தலைவி** :—அவ்வாறே ஆவதாக.

**தலைவன்** :—முத்தை ஒக்கும் முறுவல் உடையாய் ! நீ அவ்வாறு வெறுப்பொடிருந்து கூறினையாயின், நீ முன்பு அடைந்த பசப்பு எல்லாம் இனி ஒரு காலமும் அடையாத

படி ஒழித்து விடுதற்கு, வேங்கைப் பூபோன்று மிக்க அழகு தேமலுடையதும் பூணையணிந்ததுமாகிய நெஞ்சினாலே பொய்யாகவாயினும் என்னை ஒரு முறை தழுவுவாயாக.

## 29

இரவுக் குறியிடத்துத் தலைவன் வருதல் அலராகும் என்று தோழி அஞ்சினாள். அவள் தலைவன் வருதலை நிறுத்தக் கருதி, அவன் இராக்காலத்தே செய்த குறியை அறிவதற்குத்தான் வெளியே சென்றவிடத்து நிகழ்ந்த செய்தியாக ஒரு பொய்யை நாடக வழக்கும் உலகியல் வழக்குமாகப் படைத்துக்கொண்டு தலைவன் மறைவிடத்தே வந்தபோது தலைவிக்குக் கூறுவதுபோல அவன் கேட்கும்படி கூறுகின்றாள் :

*திருந்திய ஆபரணங்களை அணிந்தவளே! இவ்வூரிடத்தே நரைத்த தலையனும், போர்வையுடையவனும், கருங்குட்டத்தால் காலுங்கையும் முடமாகியவனுமாகிய ஒரு முதிய பார்ப்பான் நமது தெருவில் வந்து போகாமல் ஒளித்துத் திரிவான். அவனை நீ அறிவையல்லையோ! அவனினின்றும் உன்னைப் பாதுகாத்து நடப்பாய் என்றும் நீ என்னிடம் கூறுவாயல்லையோ? அதனை யான் கவனியாது உயிர்கள் எல்லாம் உறங்கும் இராக்காலத்தே எமது மார்பைச் சேரும் தலைவன் செய்யும் குறியை அறிதற்கு வந்து நின்றேன். அந்தப்பார்ப்பானாலே இராக்காலத்து நகைக்கத்தக்க ஒரு சம்பவம் நடந்தது. அதனை ஊரவர்கள் கேட்பின் சிரித்து மகிழ்வர். அது நிகழ்ந்தபடியைக் கேட்டருள். அவன் யான் நின்ற இடத்தே குனிந்து பார்த்தான். பார்த்து பெண்கள் இவ்விடத்தில் நிற்கும் காலமல்லவாதலின் இவ்விடத்தில் நிற்கும் நீ யார். நீ என்னிடத்தில் அகப்பட்டுக்கொண்டாய்" என்று மெல்லென்று வணங்கி வைக்கோலைக்கண்ட முதிய எருதுபோல என் பக்கத்தினின்றும் போகாது நின்றார். நின்று, பெண்ணே! வெற்றிலை போட்*

டுக்கொள் என்று கூறித் தனது வெற்றிலைப் பையைக் குலைத்து நீ எடுத்துக்கொள் என்று தந்தான். யான் யாதும் மறுமொழி கூறாது நின்றேன். அவன் அஞ்சித் தனது எண்ணத்தைக் கைவிட்டு விரைவாகச் சென்றான். யான், "யான் பெண் பசாசு ; எனக்கு அருள்செய் ; எனக்கு அருளாது வருத்துவாயாயின் இவ்வூரில் நீ பெறும் பலியை நீ பெறாமல் யான் எடுத்துக் கொள்வேன்" என்று பல வார்த்தைகளைச் சொன்னேன். முதிய பார்ப்பான் என்னைப் பெண்பசாசென்று கருதி அஞ்சினானென்று யான் அறிந்தேன் ; ஒரு கையால் மணலை அள்ளிக்கொண்டு ஓயாது அவன் மேலே தூவினேன். அவன் அவ்விடத்தில் நின்று பயத்தினால் ஊரெல்லாங் கேட்கும்படி குழறத் தொடங்கினான். இவ்வாறு தனியே நிற்கும் மகளிரைக் கண்டால் தன் காமவேட்கையால் மேல் விழுதலாகிய விருப்பமுள்ள முதிய பார்ப்பானுடைய நாடகம், நங்காதலர் நம்மைக் குறியிடத்து வந்து காணுங்காட்சி கெடும்படி நமக்கு வருத்தமாய் விளைந்தது. இது சம்பவித்தது எப்படியிருக்கிறதென்றால் ; கொடிய புலியைப் பிடிக்கும்படி கட்டிய வலையில் அத்தன்மையிலலாத ஒரு குள்ளநரி அகப்பட்டது போலாகும். ஆதலால் இனி இரவுக்குறி நிகழ்ச்சி இன்றாகும் போலும்.

குறிஞ்சிக்கலி முற்றும்

# மூன்றாவது

## மருதக்கலி : மருதம்

*மருதம என்பது வயலும் வயல் சூழ்ந்த நிலமும். மனி தன் வேடனும் (வேடனுக்கும் இடையனுக்கும் இடையி லுள்ள) குறவனும், இடையனும் வாழ்ந்து இறுதியில் உழவனுக வாழ ஆரம்பித்தான். மருத நிலத்தில் மக்கள் உணவுக்கு வேண்டிய தானியங்கள் விளைந்தன; ஆடு மாடு கள் பெருகின. ஆடு மாடுகளும் உணவுப் பொருள்களுமே மனிதனின் செல்வமாகக் கருதப்பட்டன. கைத்தொழில்கள் வளர்ச்சி யடைந்தன. மக்கள் கூட்டம் கூட்டமாகப் பிரிந்து தொழில் புரியும் நிலைமை ஏற்பட்டது. இதனல் சாதிகள் ஏற்பட்டன. மருத நிலத்தில் அரசனுடைய இராசதானியிருந்தது. மக்களின் பொழுது போக்குக் குரிய பல வசதிகளும் அங்கு இருந்தன. அங்கு பரத் தையர் சேரிகளும் இருந்தன. ஒவ்வொரு தேசத்தும் நகரங்களில் இன்றும் பரத்தையர் காணப்படுகின்றனர். இல்வாழ்கையில் ஒழுகும் ஆடவர் சில சமயங்களில் பரத்தையர் உறவு கொண்டு அவர் இல்லங்களில் தங்கி யும், அவர்களுடன் நீர்த்துறைகளுக்குச் சென்று நீராடி யும், அவர்களின் ஆடல் பாடல்களைக் கண்டு கேட்டுக் களித்தும இருப்பர். இக்காரணங்களால் தலைவன் தலைவி யருக்கிடையில் சிறு சண்டைகள் நேரும். இவ்வாறு நேரும் சிறு பிணக்குகள் ஊடல் எனப்படும். இவ்வூடல் நீடித்து நிற்குமாறில்லை. தளர் நடைப் புதல்வன் ஏது வாகவும் பிற காரணங்களாலும் இவ்வூடல் தீரும். ஊட லும் ஊடல் நிமித்தமுமாகிய பொருள்களமைத்துப்பாடப் பட்டனவே மருதத்திணையிற் காணப்படும் பாடல்களாகும்.*

**1**

தலைவன் பரத்தையரிடத்துச் சென்றிருந்தபின் வீடு திரும்பினன். அப்போது தலைவி அவன் பரத்தையை மணந்

ததும் புனலாடினதும், துணங்கையாடினது மாகியவற்றைக் கூறிப் புலந்தாள். அவள் ஊடலைக் கண்டு சார்ந்த தலைவனுடன் ஊடல் தீர்ந்து கூறுகின்றாள் தலைவி :

*பெருகுகின்ற நீரிடத்தே குவளை பூக்கும். குவளை மலர்களை விற்பார் வயலிடத்தே சென்று அவற்றைப் பறிப்பர்; அவற்றைத் தலையில் வைத்துச் சுமந்து ஊரின்கட் செல்வர். அம்மலரைச் சூழ்ந்து வண்டுகள் செல்லும்' உயரமும் அழகுமுடைய யானையின் நாறுகின்ற மதத்தை வண்டுகள் படிந்திருந்து உண்ணும். இவ்வண்டுகள் குவளை மலர்களுடன் புதிதாகவந்த வண்டுகளுக்கு யானையின் மதத்தை விருந்தளிக்கும். விருந்துண்ட புதிய வண்டுகள் பகற் காலத்து அவ்விடத்திற்றங்கும். பெரிய இறையிடத்திற் கிடந்தவளை யழுத்துதலால் தழும்பு உண்டாகும்படி பெண்கள் தம் கணவரைச் சேர்வர். அவர்களின் தேன் நாறும் மயிரினுள்ளே கிடந்து முல்லை அரும்புகள் முற்றி மலர்ந்து வாசங்கமழும். அப்புதிய வண்டுகள் அம்மலர்களைப் பாய்ந்து ஊதி இராக்காலத்தில் தம் துயரைப் போக்கும். துயரைப்போக்கியபின் தாம் விரும்பியிருந்த பூக்களையுடைய தடாகத்தை மறந்து அதனைப்பின்பு ஒருபோதும் நினையாதனவாகும். இவ்வாறு நல்ல நீர்வளம் பொருந்திய ஊரனே!*

*ஆரவாரமுடைய சிறப்பில்லாத பொதுமகளிரை பூவணிந்து கலியாணங் கொண்டாய். அக்கலியாணத்தில் உண்டான உனது அழகிய நாற்றத்தை விடியற்காலத்து நாங்கள் பெற்றேம். எங்கள் மெத்தை போன்ற மிருதுவான தோள்கள் மெலியும்படி, நீ, விரும்பிய பரத்தயரைக் கூடி மண வீட்டிடத்தே யிருந்தாய் என்று பிறர் சொல்ல நினக்குண்டாகிய அழகிலும் அது (நாற்றம்) சிறப்புடையதல்லவோ ?*

*உன்னுடைய மார்பிடத்துள்ள மாலையை வாங்கிக் கொண்டவளது, நெற்றிக் கட்டாகிய பூமாலையைத் தடு*

மாறி அணிந்து, (ஆண் அணியும் பெண்ணணியும்) கெடாமல் இவ்விடத்தே வந்து நின்றாய். அது நீ பொன் மகரக் குழையை யுடைய பரத்தை யுடனே புனல் விளையாடுகின்றா யென்று பிறர் சொல்ல நினக்குண்டானஆரவாரத்திற் பெரிதாகவும், எம மேனிகனலுதற்குக் காரணமான காம நோய்க்கு மேலாகவும் இருந்ததன்றோ ?

பரத்தையர் ஒளிபொருந்திய நெற்றியுடையர். அவர்களைக் கூடுதலால் அவர்கள் அணிநின் மார்பிடத்தழுந்தும். அவ்வடுக்கள், நீயும் பரத்தையருக்குரிய அணிகளை அணிந்தாய் போன்று அழகுசெய்யும். ஓர் அணியே அவர்க்கும் உனக்கும் அணியாகப் பொலிவு பெற்ற அழகையாம் காணும்படி வந்தாய். அவ்வழகு நின்னைப் பிரிந்த விடத்து வாடியிருக்கும் இயல்புடைய பரத்தையரோடு நீ துணங்கையாடினை யென்று பிறர் கூறும் ஆரவாரத்திலும் பெரிதாயிருந்தது.

இவ்வாறு யாம் கூறுதற்கேதுவாக நீ வருதலின் யாம் நின்னருளைப் பெற்றேம். நீயும் எம்மை அருள் செய்தாய். நீ விரும்பிய பரத்தை யரிடத்துத் தேரைச் செலுத்தும் விருப்புடைய பாகன், தேரை வேகமாகச் செலுத்தி அவர்கள் சேரிக்குச் செல்வான். அதற்குமுன் அப்பரத்தையர் அன்புகெடாதபடி நீ அவ்விடஞ் சென்று அவ்வன்பை நிலைக்கச் செய்வாயாக.

## 2

தலைவிவாயில் மறுத்தாள். தலைவன் ஆற்றாமை வாயிலாகச் சென்று அவளைக்கூடினான். அவன் நீங்கியபின் வந்த தோழிக்குத் தலைவி சொல்லுகின்றாள் :

முதிர்ந்த கார்காலத்தே, வையையாறு அலர்ந்து கமழ்கின்ற இதழ்களுடைய பூக்களைச்சூடி மேன்மை பெற்றுப் புலவர்கள் பாடும் கவிகளைப்பெறும். அது மதுரை ஊரைச் சூழ்ந்து வருதலின் நிலமடந்தை அணிந்துள்ள

*பூமாலை போல அழகு பெறும். வையை நீர் சூழ்ந்து மதிலைப் பொரும் பகையன்றிப் பகைவர் போரால் வளைத்தலைச் சிறிதும் அறியாத, நீர்சூழ்ந்த மதிலை உடையன் பாண்டியன்.*

*ஏடீ ! அழகிய கரிய கண்ணுடைய பரத்தையர் தமது மாலைகளால் அவனை அடிப்பர். அதனால் நேர்ந்த புண்களாகிய தழும்புகளைக் காட்டி அவன் என்னிடம் அன்பின்றி வருவானாயின் யான் புலப்பேன் என்று சொல்லியிருப்பேன். அதனாற் பெற்ற பயன் யாது ? அவனைக் காணில் இச்செயலற்ற நெஞ்சு யான் அவனைக் கூடுவேனென்று கூறாநிற்கும்.*

*வளைந்த அழகிய பிறைபோல் நெற்றியுடையோரும் கொடி போன்றோருமாகிய பரத்தையரின் முலைகளிடத்தே முழுகி (அவர்கள் அழுத்திப் பூசின) அழகழிந்த சந்தன முடையனாய் வருவானாயின் யான் புலப்பேன் என்று கூறியிருப்பேன். காணில் அவனைக் கூடுவேன் என்னும், யான் கூறியதைக் கேளாத எனது நெஞ்சு.*

*ஏடீ ! தான் புணர்ந்த அழகிய பரத்தையரின் விளங்குகின்ற பற்கள் அழுத்துகையினால் மிகச் சிவந்த தழும்புகளைக் காட்டி வருவானாயின் புலந்திருப்பேனென்று கூறியிருப்பேன். அவனைக் காணில் தனிமையான நெஞ்சு அவனிடத்தே பணியும்.*

*பிறை ஒத்த நெற்றியை யுடையவளே ! தம்மிடத்தில் வலியில்லாது அவனிடத்தே கீழ் உற்றுச் செல்லும் நெஞ்சுடைய மகளிர்க்குத் தாம் நினைத்தனவெல்லாம் முடித்தல் ஆகுமோ ?*

## 3

பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனோடு காமக்கிழத்தி ஊடினாள். அது கண்டு சென்று சார்ந்த தலைவனுடன் ஊடல் தீர்ப்பாள் அவள் கூறுகின்றாள் :

இவ்வுலகம் பிறக்கும் பொது என்னும் மொழி யின்றி உலகம் முழுவதையும் ஆளும் அரசருக்கு அமைச்சர் அறிவாகிய சொல்லைச் சொல்வர். அவ்வமைச்சர் போன்ற சான்றோரின் தீமையில்லாத சொற்களைக் கேட்கும் செவி வயலாகவும், சான்றோரின் பாடல்கள் தம் சொல்லை வளர்க்கும் நீராகவும் கொண்டு, அறிவுடைய நாவாகிய ஏராலே புலவர் உழுது உண்பர். அப்புலவரின் புதிய கவிகளைக் கொள்ளை கொண்டுண்ணும் மதில் சூழ்ந்த புனலுடைய நாட்டையுடையவனே!

நின் பரத்தையர், "இவ்வூரன் நமக்கு உறுதியான வனல்லன்" எனக் கூறிப் பின் ஒருவர் கூறியவாறு ஒருவர் கூறுது ஒரு ஊரிற் சென்று குடியேறும் தொகையினராய் (பலராய்) திரண்டிருப்பர்.

"நமக்கு இவன் உறவலலன்; அவனை முயங்காதேயுங்கள" எனத் தோள்கள் சொல்லவும முயங்கக் கருதி அத்தோள்களோடு மாறு கொண்டு நின்பரத்தையரை ஒத்த நெஞ்சினையுடைய யாங்கள் ஆயினேம்.

நீ சொன்ன குறியிடத்தே வந்து பார்த்து நின்னைக் காணுமையின் எம்மிடத்தே வந்தாயென்று கருதி எமது கதவை அடைந்து தட்டிக்கையின் வளைகளால் தம் வரவினை அறிவிக்கும் இயல்புடைய பரத்தையரை யாம் நோவேமோ?

முகை போன்ற தனங்கள் அணைகையினுலே அழகிழந்த நின்மாலைகள் எம்மை இகழும். வடியுடைய செப்பினுள் வைத்த மாலையை யாம் ஒத்தேம். ஊடியவர்களது அழகு கெடும்படி அவரை இடையன் கொன்ற மரமாக் கிப்பரத்தையரின் மயக்கத்தைத் தீர்க்கும் அவனது மார்பு என்று எழும் சொல்லை நாம் நோவேமோ?

உனது மிகுந்த ஆரவாரத்தைக் கேட்டு இது மணமனை எனக் கருதிப் பொலிக, பொலிக, என்று கூறிப் (பரததை

இல்லிற்) புகுந்த பாணனையாம் கண்டேம். கண்டயாம், சேரியிடத்தே சென்று நீ தங்கிய வீட்டை வினவினவனைத் தேரோடு திரியும் பாகனைக்குறை கூறுவேமோ ?

எம்மனைக் கண்ணே நீ ஒரு காலத்து வந்தாயாயின் நின்னைப் பெற்று மகிழ்ந்து நீ நீங்கிய பின் என் தோள்கள் மெலியும். அதனை அறிந்தார் இவளும் இவரும் இத்தன்மையர் என்று புறங்கூறுவர். அதனை ஏற்றுக்கொண்டு பழைய நிலைமையைப் பெறுதற்கு முயங்குவேம். நீ விரும்பாத நின்மார்பின் முயக்கம் கனவிற் கிடைத்த செல்வத்தை ஒக்கும்.

## 4

இதுவும் அது :

மெல்லிய சூட்டு மயிரினையுடைய அன்னம் தனது அழகிய நடையுடைய பேட்டோடு அலர்ந்த பூக்களுடைய குளிர்ந்த தடாகத்தே நின்ற தாமரையின் புதிதாக முறுக் கவிழ்ந்த தாது சூழ்ந்த தனி மலர்ப் புறத்தே சுற்றித் திரியும். அத்தோற்றம், காதலைத் தருகின்ற கலியாண நாளில் ஆடையுள் ஒடுங்கியிருக்கும் அழகிய மாணின் நோக்கம்போன்ற பார்வையுடைய மணப்பெண்ணுக்குத் துணையாக, வேதமுணர்ந்த பார்ப்பான் எரியை வலஞ் செய்வதுபோல் இருக்கும்.

தெளிந்த ஓசை செய்யும் உள்ளிடு மணியுடைய சிலம்பு ஒலிக்கத் தெருவின் கண் வந்து தாக்கி ஒருத்தி உனது மனத்தைக் கவர்ந்து பின்பு கை விட்டாள். நீ அதனால் உண்டான வருத்தத்தைக் கூறி அவளை அழைத்துக் கொள்ள நின்றாய். அவ்வகையான நீ கருதி வந்த காரியம் வேறொன்றாக இவள் அறுதியுடைய எண்ணம் (உறுதியான எண்ணம்) உடையள் அல்லள் என்று கருதி இவ்விடத்தே வந்து பயனில்லாத சொற்களைச் சொல்வாயோ ?

நீ சென்ற விடம் அறியாது, பாகனைத் தேரோடு விட்ட பரத்தையின் வரவை ஏற்றுக் கொள்ள நின்றாய். இவ்வியல்புடைய நீ நெஞ்சிடத்து எண்ணி வந்தது இன்னொன்றாக இவள் நிறையிலள் என்று கருதி நின் பொய்யாகிய வலிமையால் என்னை அலைப்பாயோ ?

பூங்கொத்து நெருங்கின குளிர்ந்த சோலையிலே நீ செய்த குறியிடத்து வந்த வளைப்புணர்ச்சியிடத்தே கொண்டாடிக் கூடப் புனலாடும்படி செய்தாய். நின் நெஞ்சிடத்தே வேறொன்று கிடக்க இவள் தனக்கென ஒரு நெஞ்சிலள் என்று, செருக்கினால் இங்கு வந்து வார்த்தைகளைக் கூறுவையோ ?

பெரும! நின் அருளால் நாம் மனஞ் செருக்க மாட்டேம். எம்மை விரும்பிப் பணிந்தாய்போல வந்து தகுதியில்லாதவற்றைச் செய்யாது, நீ விரும்பியவற்றைச் செய்து முடித்து அவ்விருப்பம் ஒழிந்த பின் எம்மை நினைப்பாய் (என்று கூறி ஊடல் தீர்ந்தாள்.)

## 5

**பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தோழியை வாயில் வேண்டினான். அவள் வாயில் விடும் நிமித்தமாக நெருங்கிக் கூறுகின்றாள் :**

பலமணிகள்போன்ற நிறப்பூக்களுடைய தடாகத்தே அன்னம் மகிழ்ச்சியோடு நீந்தும். அதன் சேவலை, அகன்ற தாமரை இலை மறைத்தலும் அதனைச் சடுதியிற் காணப் பெறாத அன்னப் பேடு கலக்க மடையும். அது நிலா வெளிச்சத்தில் தனது நிழலை நீரிடத்தே கண்டு, அதனைத் தனது சேவல் என்று எண்ணிச் சேர ஓடும். அப்போது எதிரே வரும் சேவலைக் கண்டு நாணிப் பலமலர்களிடையே புகுந்து மறையும். இவ்வகையான வயல் சூழ்ந்த ஊரனே !

யாம் துயரினுல் அழகு கெடும்படி எம்மை அருளாது நீங்கினுய். அதனுற் பல நாட்கள் கண்கள் உறங்காவாயின. ஒரு நாட் படுத்த விடத்து அக்கண்கள் உறங்கவும் பெறும். இரட்டையாக மலர்களை வைத்து முடிந்த மாலையணிந்த பரத்தையர் தினமும் நின்னைப் பாராட்டும் (உன்) மணவினையிடத்து ஒலிக்கின்ற மணமுழவின் ஓசை வந்து அத் துயிலை எழுப்பும்.

நீ எம்மைத்துறந்து அகலச் செல்லுதலால் இடையருது அழுது ஆருத மையுண்ட எமது கண்கள், எமது உடம்பு புதல்வனைத்தீண்டுதலால் உறங்குதலும் கூடும். பரத்தையர்க்கென்று கட்டிய உனக்கேற்ற உயர்ந்த மனையிடத்தே கொண்டு வரப்பட்ட நின் சுற்றமாகிய அப்பரத்தையர் பாடும் துணங்கைக் கூத்தின் ஆரவாரம் அவ்வுறக்கத்தை எழுப்பும்.

நீ வராது எம்மைத் துறத்தலினுலே கண்ணீர் மாருத கண்கள் உறங்கவும் பெறும். அழகிய ஆபரண மணிந்த பரத்தையரை அவருக்கமைத்த வீட்டிற் கொண்டு வரும் நின் தேரிற் பூட்டிய உயர்ந்த நல்ல குதிரைகளிற் கட்டிய தெளிந்த ஓசையுடைய மணி ஓசை வந்து அத்துயிலை எழுப்பும்.

படை எடுத்து வரப்பட்ட மெலியவன் செவியிடத்துப் படையெடுத்து வந்த வலியவனது பள்ளி எழுச்சி முரசு கேட்டதுபோல், மேற் கூறியவை எல்லாவற்ருலும் அரிதிற்றுயில் பெற்ற நின் பெண்டிரின்துயிலைப் பரத்தையர் இல்லில் வாசித்தயாழைப்பிடித்துப் பாணன் நம்மில்லிற் புகாத விடத்து நீயே எழுப்புக.

## 6

**பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனது வரவுகண்டு காமக்கிழத்தி ஊடினுள். அதனைக்கண்டு அவளைச் சென்று சார்ந்த கணவனுடன் அவள் ஊடல் தீர்க்கின்ருள் கூறுகின்ருள் :**

மேலே விரியும் கதிருடைய ஞாயிறு அகன்ற ஆகாயத்தில் எழும். அப்போது பூக்கள் முறுக்கவிழ்ந்து விரியும். வரியுடைய வண்டுகள் சூழ்ந்திருந்து மலர்களின் அழகிய தேனை நுகரும். பின்னும் தேன் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரியும். இவ்வாறு தடாகங்கள் வளம் மிகுந்திருக்கும். மனைவியின் ஊடல் மிகுதியாற் பெருகி வீழ்கின்ற கண்ணீரைக் காமத்தீசுவறச் செய்யும். அவ்வருத்தத்தைக் கண்டு இனிதாக அமர்ந்த கணவன் அவள் அடியைச் சேர்ந்து இறைஞ்சி மிக விரைந்து அருள்செய்வான். அதனால் அவள் சிறிது மகிழ்வாள். பசிய தாமரைக்குள்ளே நின்ற (தாமரையின்) தனிமலர் தனக்கு வருத்தஞ் செய்யும் பனி ஒரு பக்கத்தில் வடிய, அவளது முகம்போலச் சிறிது மலரும். இவ்வாறு குளிர்மையுடைய நல்ல துறையுடைய உரனே!

"அவனுக்குப் பிற பெண்டிர் இல்லை. அதனை ஆராய்ந்து பார்" என்று கூறித் தனக்குத் தெய்வமாகிய தேரைத் தொட்டுச் சத்தியஞ் செய்த பாகன் வரானோ? அவன்ஏற்றிக்கொண்டுவரும் பரத்தையர் எல்லாம் தங்குவதற்குக் கட்டிய வீட்டிலே விடப்பட்ட பரத்தையர் புலவியாற் செய்த புண் மறைக்கப்படாமற் கிடக்கும் வடுவால் நின் பரத்தைமை ஒழுக்கத்தைக் காண்பதற்கு.

"அவன் தானே (பரத்தையரிடம்) சென்றால் யான் உனக்கு மறையேன் என்று யாழைத் தொட்டும் வேறு பலவற்றின் மீதும் சத்தியங்களைச் செய்த பாணன் வரமாட்டானோ? அவன் மறைத்துப் பொய் கூறிய பரத்தையர்களை அடைந்து கூடின நின் கழுத்தில் எடுக்கலாம்போலும் காணப்படும் வளைகள் அழுத்திய தழும்பைக் காண்பதற்கு.

பிரிந்தாய் என்று பிறர் சொல்லக் கேட்டு உன் தவறான குணங்களை நாம் அறியாதபடி எமக்கு உன் நற்குணங்களைப் பாராட்டிக் கூறிய தோழன் வரமாட்டானோ? திரண்ட காதணி யணிந்த பரத்தையரின் கருமணல்போன்ற

கூந்தலாகிய அணையிடத்தே துயின்றதனால் தெய்வமணம் போற் கமழும் நின் பரந்த மார்பைக் காண்பதற்கு.

இங்ஙனம் நின அன்பு நீங்காத முயக்கத்தை என்றும் பெறுகின்ற பரத்தையரை வெறுப்பார் யார்? வருடத்தில் ஒரு முறை வரும் உமது வரவு எமக்கு மழைக்கு அவாவுற்று நிற்கும், கதிர் உலரும் நெல்லிற்கு அப்பருவத்து நிறையப் பெய்யாது சிறிது துவலையாகப் பெய்த மழைபோல வருத்தத்தைத் தரும். ஆதலால் நீ வருநாட்போல யாம் ஆற்றியிருப்பேம். அவர்கள் வருந்தாமல் நீ அவர்கள் மனைக்கட் செல்வாயாக.

7

இதுவும் அது.

ஒன்றோடு ஒன்று இணையும்படி (ஐவகைப் பஞ்சு அணையும்) ஒரு சேர உயர்ந்த மிருதுவான படுக்கையிடத்து, துணையோடு கூடிய அன்னத்தின் மெல்லிய தூவி பரப்பப்பட்டிருக்கும். அம்மெத்தையிற் சாய்ந்திருப்பவள் வெள்ளிக்கிண்ணத்தில் வார்த்த பாலைச் சிறிது காட்டி உண்ணாது வெறுத்திருந்த கிளியை உண்ணப்பண்ணி அதனை முத்தங் கொள்வள். புது நீரிடத்தே நின்ற புதர்கள்மீது இடைவிடாது வருகின்ற திரைகள் மோதுகையால் துவலைமிகா நிற்க, இடைநின்ற கமழ்கின்ற தாமரை (தனக்குரிய வண்டு நுகரமலராமல்) நின்று, கரையிடத்து நின்ற மாவின் பிஞ்சு, மதியை நோக்கி மலர்ந்த ஆம்பலின் வெள்ளிய மலரை முதற்றீண்டிப் பின்னர்த் தன்னைத் தீண்டமலரும். இத்தோற்றம் அப் பெண், பாலை உண்ணாது வெறுத்திருந்த கிளியை உண்ணச் செய்து அதனை முத்தங் கொள்வதை ஒக்கும். இவ்வகையான வயல்களால் அழகு பெற்ற ஊரனே!

“நம்மைப் பேணுகின்றிலன்” என்று கோபித்துப் பரத்தையர் தம்மைப் பேணுதற்காக நகத்தால் வடுச் செய்தார்.

அவர் இவ்வாறு செய்தபின் நின் தோளைச் சேர்ந்த பரத்தையரின் எயிறு நின் இதழ்களில் அழுந்தின. அக்கூட்டத்திற் பிறந்த இன்பத்தைக் கருதி நீ அப்பரத்தையரை நெருங்குந்தோறும் யாழ் ஒலித்துப் பண்ணிஞல் களிப்பிக்கும் பாணன் (அவ்வடுக்களை) எங்களுக்குக் காட்டு என்ருனே ?

உன்னைக் கூடின பரத்தையர் புனல் ஆடுதற்குத் தெப்பமாகிய நின் மார்பிடத்தே, பரத்தையர், ஊடுகையிஞல் சாதிலிங்கத்தால் எறிந்தனர். நினக்குக் கூடுதற்கேற்ற பரத்தையைத் தேடித் திரிந்து துறையிற் செல்லாளாய் ஊரிலுள்ள ஆடைகளை இடுவித்துக்கொண்டு ஒலியாமல் (வெளாமல்) திரியும் உன்னுடைய புலத்தி (வண்ணத்தி) அச்சாதிலிங்கச்சிவப்பினை எனக்குக் காட்டென்ருளோ ?

புலத்தி = புலைத்தி = ஆடை ஒலிப்பவள்.

உன் கூட்டத்திஞற் களித்தவர்களது மாலையிடத்து முயக்கத்திஞல் நின் அழகு மேம்பட்டது. அதன் மேல் குறியிடத்தே இடம் பெற்றவர்களுடைய கற்றையாகிய கூந்தலை வகிர்ந்து வகை செய்து முடித்தலிஞல் பூந்துகள்களை நின்னிடத்திற் பெற்ருய். யாது பிரயோசனமுமின்றி நின் புகழைக் கேட்கவேண்டாத எங்கள் இல்லிலே ஒரு பயனுமின்றி நின் புகழைக் கூறிவரும் அந்தணன் அவளை எங்கட்குக் காட்டு என்று சொன்ஞனே ?

முன்பு எம்மை நீ நெருங்கியிருத்தலிஞலே யாமும் நின்னேடு செறிதல் உற்றேம் ; இக்காலத்து நீ செய்யும் குறைகளை அறிந்து அதஞல் அழிந்து கெடுகின்ற நெஞ்சையுடையேம். நீ செய்து கழித்த இக்குறைகளைக் குறையென்று கருதாது நின்னைக் கண்டவிடத்து நெஞ்சழிந்து நின்னைப் பேணிக் கொள்ளுதலின் இக்காம நோயிற்றங்குதல் எமக்குத் தாழ்ந்த தொழிலோ ? தாழ்ந்ததன்று.

# 8

**பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனைப் பார்த்து எமது பெண்களுக் குரையெனக் கூறுகின்றாள் :**

*சிறுபற்றையோடு வந்து பதிந்து கிடந்த பகன்றையின் பூவைச் சேர்ந்து, அகன்ற துறை, அழகு பெறும்படி தாமரை முகை வளர்ந்திருக்கும். வெள்ளிய வள்ளத்தாலே குளிர்ந்த நறியகள்ளை உண்பவர் முகம்போல அம்முகை கள் வளம்பொருந்திய வயலை அழகு செய்யும். இவ்வாறு அழகிய ஊரையுடையவனே!*

*நீ நீங்குதலால் நின்பரத்தையரின் கை வளைகள் கழலும். முலைகளின் இடையே கிடந்த பூந் தாது உதிரும். அவர்கள் அப்பூவின் அழகை இழந்த கண்ணு டையராவர். அவர்கள் வந்து என்னிடம் நின்பரத்தை மையை உரையாத விடத்து, நீ, நாம் வெறுக்கத் தக்க பரத்தையரிடத்திற் செல்பவன் என்று உன்னை ஒரு காலத் தும் வெறுக்கமாட்டேம். அக்காலத்து, "யான் தீதிலேன் என்று" தேற்றுதற்கு வருவாய்.*

*சுழலுகின்ற (மை) உண்ட கண்ணுடையாரின் அழ கிய மாலைகள் முயக்கத்தால் குழைந்தன. அவ்வாறுதலின் நின்மார்பிடத்துச் சந்தனம் அழிந்து மறுப்பட்டிருக்கும். அச்சந்தனம் வந்து உன் பரத்தைமையை எனக்கு உரை யாத விடத்தும், நெஞ்சைச் சுடப்பண்ணி நீ செய்யும் பரத்தைமையை யாம் வெருதவிடத்தும், 'யான் தீதுடையே னல்லேன்' என்று எங்கள் மனத்தே ஊடல் உணர்த்த வருவாய்.*

*நிரைத்த வளையணிந்த பரத்தையருடன் நீயாடும் துணங்கைக் கூத்தில் நீ சென்று முன்கை கோத்தாடுதலின், அவர்களின் காற்சிலம்பு கொளுவிக்கரையிடத் தேகிழிந்த நின் நீல ஆடை வந்து நின் பரத்தைமையை எனக்குக் கூருதவிடத் தும், நீ என்ன குறைகளைச் செய்யினும் 'இக்குறைகளைச்*

*செய்தாய்' என்று கூறுவார் இல்லாத விடத்தும் பாதங்களின் முன் வணங்கி எம் ஊடல் தீர்க்க வருவாய்.*

*ஆற்றினின்று சென்று மிக வீழ்கின்ற நீரால் நிறையாத பெரிய கடல்போல உனது அடங்காத பரத்தைமை மேலிடும். தினமும் உன்னேடு புலக்கும் தகுதியுடைய பெண்டிரைத் தெளிவிப்பாய். நாம் உன் பொய்யை மெய்யாக நினைந்து நினக்குத் தோலாதிருப்பேமோ? தோற்போமோ? என்று எமது பெண்களுக்குக் கூறு என்முள்.*

## 9

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனேடு ஊடிய காமக் கிழத்தியை அவன், இவ்வகையனகூற நீ பித்தேறிஞயோ **என்ற விடத்து அவள் கூறுகின்றுள்:**

*பொய்கையிடத்துப் பூவின் தேனையுண்ட வரியினையுடைய வண்டு கழியிடத்தே பூத்த நெய்தற் பூவின் தாதை விரும்பி நுகரும். நுகர்ந்து, வயலிடத்துப் பூத்த தாமரையில், கரிய இலையாகிய செப்பினுள் செய்துவைத்தது போன்ற விளங்குகின்ற (தாமரைக்) காயில் மீண்டு வரும். இவ்வகை அழகினையும் மகளிர் கொய்யும் தளிர்க்கின்ற காஞ்சி மரத்தினையுமுடைய துறையுடைய நல்ல ஊரனே!*

*அன்புடையனல்லனென்றும் அறனுடையனல்லனென்றும் சொல்லப்படானென்று நின் புகழ் பலவற்றைப் புகழ்ந்து காட்டும் பாணனும் பித்தேறினன்.*

*நஞ்சு, உண்டவரின் உயிரைப் போக்குதலை அறிந்திருந்தும் அதனை உண்டாற்போல, நின் மனக்கருத்து அருளின்றி வருந்துதலைக் கண்டு பின்னும் நின் பொய்மொழியை மெய்மொழியாகத் தெளியும் பரத்தையரும் பித்தேறினர்.*

விடியற் காலமெல்லாம் ஒருத்தியைக் கூடியிருந்து, உச்சிக் காலமெல்லாம் அவளைக் கைவிட்டுப் பலவிடத்தே சென்று அந்திக் காலத்திற் கூடுதற்கு வேறு சிலரை ஆராயும் நின் நெஞ்சும் பித்தேறிற்று.

சதங்கைகளும் தண்டைகளும் சிறு மணிகள் கோத்த மாலையோடு ஆரவாரிக்கும்படி, விளங்கும் வளையும் பெருத்து அமர்ந்த கண்ணும் உடைய பரத்தையர்க்கு, அவர்கள் அகப்படுதற்குக் காரணமான வலை இது வென்று சொல்லி ஊரிலுள்ளார் சேர்ந்து நின்று சிரிக்கும்படி திரியும் தேர் நின்னிலும் பெரிதாகப் பித்தேறிற்று; யான் பித்தேறிலேன். (என்று கூறி ஊடினாள்.)

## 10

**தலைவன் நாள்தோறும் வதுவை அயர்ந்து வருதலால் யான் அதற்குப் போறேன். அவ்வாறாக நீ அவன் வரும் பொழுதே எதிர் கொள்கின்றாய் என்ற தோழிக்குத் தலைவி காரணங் கூறுகின்றாள்:**

நீர் நிறைந்த வயலிடத்தே ஒத்த இதழுடைய நெய்தற் பூவோடு நீர் நிறைந்த இதழுடைய ஆம்பல் வளர்ந்திருக்கும் அப்பூக்களைப் பறிக்கச் சிவந்த சிலம்பு ஒலிக்க விளையாட்டு மகளிர் ஓடுவர். அவ்வாரவாரத்துக்கு வெருண்டெழுந்த, ஆரல் மீன்களை உண்ணும அழகிய சிறகுடைய பறவைக் கூட்டம் உயர்ந்த மரக்கொம்பிலே தங்கியிருக்கும். இருந்து போர் செய்யும் கண்ணுடைய மகளிரை வருத்தும் (காதல்) நோயை அம்மகளிரின் சுற்றத்தார்க்குக் கூறுவனபோலப் பல முறை சத்தமிடும். இவற்றோடு உயர்ந்த நெற் போர்களிடத்து உண்டாகும் ஆரவாரமுமுடைய நல்ல ஊரை உடையவன், புதிய பரத்தையரை மணஞ் செய்ய எக்காலமும் விரும்புவன்.

அவ்வாறு விரும்புகின்றவனுக்கு அதற்கேற்ப நாள்களும் வதுவைக் கேற்றனவாயிருக்கும். தோழி! அவ்வொழுக்கத்துக்கு யான் வருந்துவேன். நீ "வருந்தா திரு" எனச் சொல்லி என்னைப் பார்த்து வருந்துகின்ற வளே! இனி அவன் சொன்னவைகளை நீ அறியும்படி கேட் பாயாக.

"வதுவையயர்ந்த பின் விளக்கத்தினையுடையையாய் வந்தாய். என்னை எத்தன்மையாகக் கருதினுய்" என்று யான் கூறுவேனுயின், பரந்த கழுத்தின் மயிரையும் மனச் செருக்கினையுமுடைய குதிரை பூண்ட தேரிலே ஆரவாரிப் பக் கொண்டு வந்த விருந்தினரை எதிர் கொள்ளுகையி னுலே எந்நாளும் புலவியை மறப்பேன்.

முயக்கத்தால் வாடிய பூவோடு என் மனைக்கு வாராதே யென்று யான் ஊடியிருப்பேனுயின், அவ்வூடல் நீடியாத படி, அவன், செய்யும் பொய்ச் சத்தியத்துக்கு நாம் அஞ்சும் அச்சமே, தன் ஊடல் தீர்க்கும் வழியாக வருபவனின் பொய்ச் சத்தியத்துக் கஞ்சிப் புலவேனுவேன்.

பரத்தைமையுடையவனே! பகற் பொழுதெல்லாம் பரத்தையர் மனையிலே தங்கினுயென்று கூறி யான் அவனு டன் மாறுபட்டிருப்பேனுயின்; அவன் தன் தந்தையின் பெயரைப் பெற்ற புதல்வனைத் தழுவிப் பொய்யாகிய துயி லைக் கொள்வான்.

தோழி! பூப்போலும் கண்ணுடைய மகளிர் செய்யும், எனது அழகைக் கெடுக்கும் மாயத்தைச் செய்யும் மகிழ் நரது பரத்தைமையால் நோகுங்கடன் என்று நினைந்து வருந்தியிருப்பேன். ஆனுல் விருந்தினரை எதிர் கொள்ளுத லாலும் பொய்ச் சத்தியத்தால் நமக்கு வருத்தம் வருமென அஞ்சுதலாலும், புதல்வனைத் தழுவிக் கொள்ளும் வருத்தத் தைக் காண்கையாலும் நெஞ்சு புலவியை முழுதும் தாங்க

மாட்டாது. அதனுல் புலவி கெட்டுப்போகா நிற்கும். இதுவே யான் கூறுகின்ற துன்பமாகும்.

## 11

**இது, கூட்ட முண்மை உணர்ந்த தோழிக்கு உண்மை கூறுதற் கஞ்சிய அச்சம் நீடித்த தலைவி கூறியது. (திணை மயங்குறலும் கடிநிலையிலவே) என்னும் சூத்திர விதியால் மருதத்துக்குறிஞ்சி வந்தது.**

*அணிந்திருக்கும் ஆபரணங்கள் ஒழுங்காகக் கிடக்கும் படி திருத்தியும், நாம் புனலாட நமக்கு ஒரு தீங்கும் வராது நமது பக்கத்தே சூழ்ந்து திரிந்தும், அழகிய தொய்யில் எழுதியும், நம்முடைய சிற்றில்லிலே வந்து ஏவற்றொழிலைச் செய்தும் இத்தகுதிப்பாட்டை யுடையவன் கூட்டத்தை நினைந்து வருந்துவான். அவனிடத்துக் கூட்டம் உடையை என்று இவ்வூரிலுள்ளார் பலகாலுங் கூறுவர். அங்ஙனம் அவர்கள் கூறுதற்கு நீ கூட்டம் உடையையோ என்று கேட்கின்ருய். அவ்வாருயின் விளங்குகின்ற ஆபரண மணிந்தவளே! இப்பொழுது யான் கூறுகின்றதைக் கேள்.*

*அலர் தூற்றும் பெண்டிர் அலர் தூற்ருத விடத்து வருத்தமுற்றிருப்பர். அவர்கள் இது தகாது என்று ஆராயாது ஐயுற்றுக் கூறிய சொல் இவளுக்குப் பொருந்தாதென்று அறியமாட்டாதவளாய் நீயும் அவர்கள் சொன்ன நிலையிலேயே சொன்னுய். யான் கடல் நீர் வந்தேறின கழியிடத்துத் தண்டாங் கோரையை இழுத்துப் பிடுங்க முயன்றேன். அப்போது அவன் வந்து, "சிவந்த விரல்கள் இன்னும் சிவக்குபடி நெடு நேரம் நின்று பிடுங்கினுய் என்று சொல்லித் தண்டாங்கோரையைப் பறித்துக் கிழித்துப் பாவையாக்கித் தந்தான். அவன் செய்த சிறிய உபகாரத்துக்காகவோ நீ அவ்வாறு சொன்னுய்.*

தீயவரென்று எல்லாராலும் கைவிடப்பட்ட (அலர் தூற்றும்) பெண்டிர் அங்ஙனம் கூறுதல் தீதென்று உணரவல்ல புத்தியில்லாதவளாய், அவர்கள் பல முறையும் கூறிய சொற்கள் பொய்யெனத் தள்ளினதும் இல்லையாணுய்.

யான் தாமரை மலரைப் பறிக்கத் தடாகத்துள் செல்லக் கூசினேனுய் மீண்டேன். அவன் அதனைக்கண்டு மலரைப் பறித்துப் புறவிதழை ஒடித்துத் தந்த சிறிய உபகாரத்துக்காகவோ நீ என்னைக் கோபிக்க வந்தாய்.

காவல் புரிந்து காக்கின்ற நம் ஆயத்தார் காவல் பொய்யாகும்படி இவ்வூரார் பலகாற் கூறிய கூற்றை நீ பொய்யென்றுணராயாய், அது இவளுக்கரியதென்று மயங்கிஞய். யான் ஒரு நாள் தோளிடத்தே தொய்யில் எழுதினேனுக அவன் வந்து நீ தொய்யில் எழுத அறியாய் என்று கூறி வளைந்த முன் கையைப் பிடித்து மூங்கில்போலும் தோளிலே கரும் பெழுதித் தொய்யிற்குழம் பால் மற்றும் எழுதுதற்குரியன வற்றை எழுதினுன். நீ இவ்வாறு மயங்கிக் கூறியது அச்சிறு உபாகாரத்துக்கோ ?

ஆயிழாய் ! இவ்வாறு யான் கூறி நின் நெஞ்சிடத்து நிகழ்ந்த இக்காரியத்தை இனித் தெளிவித்தலரிது. இனி நம்முடைய கலியாணத்து நஞ்சுற்றத்தார் ஒருமித்து விரும்பி அன்று செய்யும் காரியத்தை, இன்று இவ்விடத்து இவ்வூர் விரும்பியிருந்ததாயின், அதற்கு யாம் செய்யத் தகுதியுடைய காரியம் எக்காரியம் ?

## 12

பரத்தையர் சேரியிற் சென்று திரும்பிய தலைவனேடு ஊடிய தலைவி ஊடல் தீர்க்குமிடத்துக் கூறுகின்றுள் :

வயலிடத்தே, எல்லா வகையாலும் ஒத்த இரண்டு தாமரை மொட்டுகள் தமக்கிடையே வேறு பூக்கள் சேர்

தல் இன்றி நின்று முறுக் கவிழ்ந்திருக்கும். தன்னால் விரும்பப் பட்டவனுக்கு அழகிய முகங்கவிழ்ந்து அழுகின்றவளுடைய செவ்வரியினையுஞ் செருக்கினையும் குளிர்ச்சியினையுமுடைய கண்ணின் நீர் அடிக்கொண்ட முலையின் மேல் விழும். அதுபோல அழகிய மலர்களுடைய வயலிடத்துள்ள பறவைகள் வந்து தாக்க மிகவுஞ் சாய்ந்து அணைந்த அம்முகைகளின் மேலே தம்முடைய உள்ளிதழில் நின்ற நீரைத் துளிக்கும். இவ்வகையான ஊரனே! கேள்.

உண்டென்று கூறுதல் இல்லாத என்னுயிர் (அந் நிலையினும் நில்லாமற்) சாதலை அறிந்தும் பிறர் கூறும் பழி நீங்க உனது பெண்டு என்னும் பெயர் பெறுவேனாயினேன். அதனால், குளிர்ந்த தளிரிடத்தே வீழ்ந்து அழகு பொலிவு பெற்ற தாதுபோலும் அழகிய மாமை நிறத்தையும் சுணங்கையும் எம்மிடத்தினின்றும் வாங்கிக் கொண்டு நீ பின்பு ஒரு காலும் தாராதுவிட்ட அழகை யான் பெறுதலை விரும்பேன்.

பூவின் அழகு கெடும்படி கண்கள் பொன் போலப் பசந்தன; நின்னால் வருத்தமுற்ற பரத்தையர் நீ செய்யும் கொடுமைகளை என்னிடத்தில் வந்து சொல்லாமையை யான் பெறின் இயற்கை அழகிழந்த கண் துயில் பெறுதலை விரும்பேன்.

உனது பாணன் வருத்தம் தரும் பண் பாடி நீ சென்று சேர்ந்த பரத்தையர் மனையைக் கேட்டு என் மனையிடத்தே வருதலைப் பெறுவேனாயின், மாசறக் கழுவிய நீலமணியைப் பழிக்கும் கரிய கூந்தல் பூ வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப் பெறுதலை யான் விரும்பேன்.

எனது நெஞ்சு, உன்னைக் காணின் என்னை உன்னிடத்தே செலுத்தித் தானும் உன்னிடத்தே தங்கியிருக்கும். இந்நெஞ்சோடு வாழ்கின்ற உட்பகையுடையார்க்கு, முன்னர் எம்மை நின்மேல் வீழ்வித்த மார்பைக் கூடக்கடவே

மல்லே மென்று கருதும் நிறையென்னும் குணத்தைப் பெறுதல் எளிதோ? அஃது அரிதன்றோ? எனக் கூறி ஊடல் தீர்ந்தாள்.

## 13

பரத்தையர் சேரியிற் சென்று வந்த தலைவனோடு ஊடிய காமக்கிழத்தி ஊடல் தீர்கின்றாள் கூறுகின்றாள் :

தன் துணையைச் சேர்ந்த கரியதும்பி மருதநிலத்தே கிடந்த பசிய இலையுடைய தாமரை மலரை ஊதும். நீர் உண்ணும் துறையிடத்து மலர்ந்த பூவைப் பெருகி வந்த நீர் சாய்க்கையினால் தும்பி அப்பூவில் இருத்தலை வெறுத்து அப்புனலுடனே ஊடும். ஊடி தாம் வாழும் நல்ல நாட்டின் மீது வந்தபகை தம்மிடத்து வந்த விடத்து அந் நாட்டை விட்டு நீங்கிப் போய்த், தன் நாட்டைக்காக்கின்ற வனுடைய குடைநிழலின் கீழுள்ள ஊர்களில் தங்கும் குடிமக்களைப்போல வேறு மொரு பொய்கையைத் தமக்கிருப் பாக ஆராய்ந்திருக்கும். இருந்து சூழல்கின்ற காலத்து, அரசன் வந்தபகையின் வலியைக் கெடுத்துப் போக்க அக் குடி மக்கள் தம்பதியிடத்தே மீண்டுஞ் சென்றாற்போல, அப்பெரும்புனல் நீங்குகையினாலே அத்தும்பி மீண்டும் வந்து அத்தாமரைப் பூவிலே இருந்து பறவாது இளைப்பாறும். இவ்வாறு நல்லபுனலையுடைய நல்ல ஊரனே!

நெருப்புப்போன்ற பூ இதழ்கள் சோர்ந்துஉதிரும்படி பரத்தையரைப் புல்லினமைக்குச் சாட்சி பகரும் கண்ணியை அணிந்தவனாய் இவ்விடத்தே எமது இல்லில் வந்தாய். இவ்வாறு நீ வருதல், "யான் நீங்குமிடத்து இவள் அழகின்றிறங் கெட்டும் சேருமிடத்துப் பிறர் புகழுமாறு பொலிவு பெற்றும் யான் மணஞ் செய்யுங்காலை இவள் அழகு இருக்கும்" என நீ கொண்ட எண்ணத்தினாலோ?

நாம் பிறர் கூறுகின்ற அலருக்கு நாணி மறைத்த காம நோய் எல்லை கடந்தது. நீ பரத்தையர் கூந்தலின் மணம் நாறுகின்ற மார்புடையவனாய் இவ்விடத்தே எமது இல்லில் வருகின்றாய். நீ வந்தது, 'இவள் அழகு, சூரியனைக் கண்டு மலர்ந்த தாமரைப்பூ அச்சூரியன் அடங்குமளவிற் குவிந்தாற்போல நின்று தொடர்ச்சி நீங்கி வறிது பட்டிருக்கும்' என்னும் தன்மையுடையதோ ?

முடியில் அணிந்த மாலை போல யாம் வாட நின் பரத்தையரது வளையினால் உண்டான வடுவைக் காட்டி எம் இல்லில் வந்தாய். நீ வந்தது மழை பெய்யில் செருக்கியும் வறப்பில் காய்ந்தும் இருக்கும் நிலம்போல, யான் செல்லின் இவள் தழைத்தும் செல்லாவிடில் வருந்தியும் கெடுமென்னும் தன்மை நோக்கியோ ?

உமது பரத்தையால் பலரும் வியக்கத் தக்கனவெல்லாம் உமக்குப் பொருந்திற்று. உம்மை விரும்புவாரும், உம்மால் விரும்பப்படுவாருமாகிய பரத்தையரும் உமக்கு வேறுபடும்படியாக ஈண்டு நில்லாது அவர் மனைக்கண்ணே செல்வீராக. பருவத்தால் மலராது கையினாலே அலர்த்துதலின் முகை மலர்ந்தாற் போல இனிதல்லாத முயக்கத்தில் எமக்குக் குளிர்ந்த பனிக்காலம் அப்படிக் கொடிதாயிருக்க உம்மையின்றித் தங்குதல் தகைமையில்லையோ? உண்டோ? (இவ்வாறு கூறி ஊடல் தீர்த்தாள்.)

## 14

தலைவன் பரத்தையரிடத்தினின்றும் வந்த விடத்து தலைவி அவனை ஊடல் உள்ளத்தாற் கூடப்பெறாது, 'சேல்' எனக் கூறி விடுத்து ஆற்றுகின்றாள் :

ஒலிக்கின்ற செந்நெல்லுடைய வயலிடத்தே புட்கள் ஒலிக்கும். நெல்லினிடையே பூத்த அரையிலே முள்ளு

டைய தாமரை ஒன்றின் பெரிய இதழை அப்பூவிலே கிடந்து நெற்கதிர் காய்க்கும். தாமரை மலரோடு சேர்ந்த அந் நெற்கதிர், அவையோராற் புகழப்படும் அரங்கின் மேல் ஆடும் மகளின் தலைக்கோலத்தினின்று நெற்றியிலே தூங்கும்படி ஒரு மாலைபோற் செருகி வைக்கபபட்டிருக்கும் **வயந்தகம்** என்னும் அணிபோலத் தோன்றும். இவ்வாறு அழகு பெறும் குளிர்ந்த துறையுடைய ஊரனே!

பரத்தையர் அணிந்த அணியுடனே இவ்விடத்து வந்து எம் புதல்வனை எடாதிருப்பாயாக; அவனுடைய சிவந்த வாயின் படிகம்போன்ற நீர் நின்மார்பின் இடமெல்லாம் நனைக்கும்படியாக நின்றது. அஃது அங்ஙனம் நனைத்தால் யான் நின்மார்பின் முயங்கினுரை அறியும்படி சந்தனங் கமழும். பிறரின் முயக்கத்தைச் சந்தனத்தால் அறியும் பரத்தை அதனுல் வருந்துவளல்லவோ? (சந்தனங்கமழின் நீ பிறரோடு முயங்கினுய் என்று நினைந்து வருந்துவள் என்றவாறு.)

புதல்வனை நீ தழுவாதொழி; அவன் உன் மார்பிற் கிடக்கும் பல முத்து மாலைகளையும் பிடித்திழுத்து அறுப்பான்; அவன் அறுத்தால் மாட்சிமைப்பட்ட ஆபரணமும் மடப்பமுமுடைய மகளிர் நின் மார்பிடத்து முயங்கினுர்களெனன்று கருதி நீ விரும்பிய பரத்தை புலப்பாளல்லளோ?

என் புதல்வனைத் நீ தேடி எடுத்துக்கொள்ளாமல் நிற்கவும் அவன் தானே வருகின்றுன். அவனை எடாதிருப்பாயாக; எடுத்தால அவன் உனது தலையில் வண்டுகள ஒலிக்கின்ற கூறுபாடுடைய பூங்கொத்திற் பூக்களை வாங்கி அம் மாலையை அறுப்பான். அதனுல் நின்னை முயங்கினவர்களை இக்கண்ணி அறிவிக்குமென்று கூறி, மணக்கின்ற நின் கண்ணியாலே பிறரை நீ முயங்கினுயென்று உன் பரத்தை கருதிக் கோபிப்பாளல்லளோ?

பூப்போலும் கண்ணினையுடைய புதல்வனைப் பல பொய்களைச் சொல்லிப் பாராட்டி அவனை விட்டுப்போகாதவனையும் பரத்தையரைக் கைவிடாதவனையும் பெரிய வாயிலிடத்தே நில்லாது செல்வாயாக. அவன் உனது அலங்காரங்களைச் சிதைப்பான். புதலவனை இங்கே தந்து பரத்தையரிடத்திற் செல்வாயாக.

## 15

**பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வேலிப்புறத்தே வருமிடத்துத் தலைவி மகனுக்குச் சொல்லுகின்றாள் ;**

நின்னிடத்து அன்பு ஒழிந்த அவர் ஒழிந்துபோகட்டும். உன்னைப் பெற்ற எம்முடைய கண்நிறையும்படி யான் அன்புமாறேனாயினேன். மேன்மையுடைய தலையிடத்தே கிடந்து மின்னும் மூன்று மாலையை உடைய மகனே !

பவளத்தாற் செய்த வட்டப் பலகையின் விளிம்பில் ஒளியுடைய முத்து அழுத்தப்பட்டிருக்கும். அப்பலகையில் நிற்கும் கவழம் கொள்ளும் (விளையாட்டு) யானை நிற்கும். நீ அவ்வியானையின் பாகனாக உனது கையினாலே முப்புரியாக முறுக்கின கயிற்றாற் கட்டி அதனை ஈர்ப்பாய். ஈர்த்து யான் காணும்படி காலிற் கட்டிய கெச்சை ஒலிக்கும்படி வருவாயாக.

விளங்குகின்ற மணிகள் ஆரவாரிப்ப அசைந் தசைந்து நடக்கும் உன் தளர்ந்த நடையைக் கண்டு மகிழ்ந்திருத்தல் எமக்கு இனிது; அஃதொழிந்து உனது தந்தை யிடத்து எங்கள் விருப்பம் என்று கூறி வளை நெகிழ்ந்து வருந்தியிருக்கும் பரத்தையரை யாம் காணும் காட்சி எமக்குத் துன்பத்தைத் தரும்.

ஐயனே ! விரும்பத்தக்க அழகினையுடையையாய், அத்தா அத்தா என்று கூறும் நின் இனிய மொழியைக்

கேட்டு மகிழ்தல் இனிது. ஆனால் உன் தந்தை, மகளிர் அழகு கெடுதற்கு அயர் நலத்தை உன் கையினாலே உய்வின்றிச் சாய்ந்து உற்ற வருத்தத்தைத்தரும் நோயைக் காணுமிடத்து அக்காட்சி இன்னாது.

## 16

தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்தான். தலைவி தன் மகனைத் தழுவி விளையாடி நின்றாள். அப்பொழுது தனது வரவை அவள் அறியாதபடி தலைவன் சென்று நின்றான். அப்பொழுது அவள் ஊடல் தீர்க்கும் தலைவனது சொற்களோடு மாறுபடக்கூறி மகன் வாயிலாக ஊடல் தீர்க்கின்றாள்.

*சிறுவனது வாய் மாசற விளங்கும் மணிபோல் அழகுடையது. நிரம்பாத மழலைச் சொற்களைக் கூறுதலின் வாயிடத்து நீர் ஊறும். மார்பிடத்துப் பிரகாசிக்கின்ற ஆபரணங்களை அந்நீர் நனைக்கும். அவனது தலையிடத்தே பொன்னாற் செய்யப்பட்ட பிறை வைக்கப்பட்டிருக்கும். பிறையினுள் சேர்க்கப்பட்ட முத்து வடமும், நெற்றியிடத்துள்ள நீண்டதும் வேலைப்பாடுடையதுமாகிய (நெற்றிச்) சுட்டி விளக்கத்தோடு அசையும். நிறத்தை உடைய உடுத்துக் கழன்ற அழகியதுகில் உள்ளிடுமணி உடைய சதங்கை ஒலியாமல் அடியைத் தடுக்கும். இவ்வாறாகப், பாலாலே விம்மின முலையை மறந்து முற்றத்தே உருட்டி விளையாடுந் தேரைக் கையினால் இழுத்து நடத்தலைக் கற்று ஆலின் கீழமர்ந்த இறைவனுடைய அழகமைந்த முருகனைப்போல் வரும் என் உயிரே!*

*பெருந்தகாய்! பெருமானே! உன் மழலைச்சொல்லைக் கேட்டு அவ்வினிமை மாறாத மனமுடையேனாயினேன். விருந்தினர் வருதலின்கை ஒழிவில்லாத என்னையும் நினையாயாய் நீ பெரிய தெருவிடத்தே சென்றாய்.*

அப்பொழுது தாய்மார் (பரததைமார்) நின்னைக் கொண்டாடிக் கற்பிக்கக் கற்பிக்க நீ அவர்பாற் கற்ற திருந்திய சொற்களை யான் அமிழ்தத்தை உண்டாற்போல இன்னும் இனிதாகக் கேட்கச் சிலவற்றைக் கூறுக.

[புதல்வனை நோக்கிக் கூறியபின் தோழியை நோக்கிக் கூறுகின்ருள்.]

விளங்குகின்ற ஆபரணமணிந்தவளே! நாம் பழகியுள்ள பாணன் வந்தானாக நீ இப்பொழுது எவ்விடத்தாய் என்று வினவினேன். அவன் நமக்குச் சேயனாய் நின்று *ஏனாதிப்பாடியிடத்தேம் என்று கூறினான். நம் புதல்வன் நம்முடைய நோயைத் தணித்தற்குக் காரணமாகிய மருந்தென்று கருதி நாம் பாராட்டா நின்றேம். அப்பொழுது அவன் அத்தா அத்தா என்று அடுத்தடுத்துக் கூறினான். அவ்வாறு அவன் கூறும் தவறுதலைப் பாராது, நமது மூங்கில் போன்ற தோள் மீது அவனைத் தூக்கி வைத்திருந்தேன். பின்னையும் அவன் அத்தா அத்தா என்று கூப்பிட்டான் இதற்குக் காரணமென்ன?

அங்ஙனம் வினவின தலைவி தோழி குறிப்பினாலும் புதல்வன் அத்தா அத்தா என்றதனாலும் தலைவன் வந்திருப்பதைக் கண்டாள். கண்டு பகைவரை நினைந்து அவரிடத்தே படைக் கலங்களை விடுத்தற்குக் கள்வர் வருவது போல இவ்விடத்தே தாம் எம்மை இகழ்வதற்கே வந்தார். நம் மேல் அன்பால் வந்தாரல்லரெனத் தலைவன் கேட்ப அவள் (தோழியை நோக்கிக்) கூறினாள்.

அதுகேட்ட தலைவன் மதிலையுடைய ஊரில், காவலாளர் கள்வரைக் கண்ணுற் காணாதிருக்கவும் அவரால் வருங் குற்றததைக் கருதி இங்கே கள்வரைக் கண்டேமென்று கூறுவர். அதுபோல முன்னில்லாது ஒரு பக்கத்திற்போய்

*[ஏனாதிப் பட்டங் கட்டினனொருவன் ஏற்றிய பரத்தைச் சேரி.]

நின்று யான் செய்யாத குறைகளைக் கூறிச் சினவாதொழி. உன் ஆணை வழி ஒழுகுவதன்றி ஈண்டு நின் ஆணையைத் தப்புவார் யார்.

அதுகேட்ட தலைவி, நடுக்கமில்லாத வஞ்சனையினால், என்னை வருத்தி என் புதல்வன் மீது ஆசையில்லையாயினாய். இவ்வாறு வந்த நீ, பரத்தையருடைய முதிர்ந்த முலைகள் நின மார்பிலஅழுந்துதலால் அவள் முடியினின்றும் வீழ்ந்த பூந்தாதுகள் பறக்கும்படி காற்றின் எதிரே நின்றாய். இங்ஙனம் நில்லாது போ.

அதுகேட்ட தலைவன், ஏடீ! யாம் தீங்குடையேமல்லேமென்று சத்தியஞ் செய்தேம். அச்சத்தியத்தையும் கடந்து எம்மிடத்து ஊடலை ஒழிக்கின்றாயில்லை. அப்படியானால், யான், கன்றைக் கட்டின இடத்தே அதனைத் தேடி விரும்பிச்செல்லும் பசுப் போல நம்மிடத்தே செல்லும்படி என் தந்தையின் பெயருடையவனை (புதல்வனை) எடுத்துக்கொள்வேன்.

## 17

தேவாலயத்தை வலஞ்செய்து கோண்டு வருதற்குச் சேடியருடன் மகனைப் போகவிட்ட தலைவி, அவன் வரக் காலம் நீடித்ததாக, மறைவில் நிற்கும் தலைவன் கேட்கும்படி கூறுகின்றாள் :

உலகம் வறட்சி நீங்கும்படி பெய்தற்குக், கூதிர் காலத்தே மேகம் கிழக்கே எழுந்து தோன்றும். அம்மேகம் போல எம்முடைய முலைகள் பாலால் விம்மும்படி நீ போன காலம் மிகவும் நீடித்தது. இவ்வாறு யான் கூறி வருந்தும்படி தேவர் கோயிலை வலம் வந்து, பின்னர் இவனோடே நீ (தோழி) சென்ற இடங்களெல்லாம் எமக்குச் சொல் என்றாள்.

அதுகேட்ட தோழி, யான் கூறுகின்றேன்; யான்

கூறுவது பொருத்தமுடையதாதலைக் கேட்டு நீ என்னைக் கோபியாதிருக்கும்படி வேண்டுகின்றேன்.

அதுகேட்ட தலைவி, யான் நின்னைக் கோபியேன், நீ கூறுகின்றவற்றை யெல்லாங் கூறு என்றாள். அதுகேட்ட சேடி, மடப்பத்தையுடைய அறிவில்லாத மகளிர் பஞ்சாங் கோரைப் பாவையைக் கொண்டு விளையாடுவர். அக்காலததில் இவன் தந்தை அப்பரத்தையருள் ஒருத்தியுடன் பரத்தைமையுடையன். அத்தாயிடத்தே இவன் சென்றான். அவள் இடபம் பொறித்த ஆபரணத்தை இவன் கைக்கு அணியாக இட்டாள். பெரியோனே! நினது நகை தவழும் முகத்தை யான் முத்தங் கொடுத்தற்குக் காட்டென்று கூறினாள். இவ்வாறு கூறுகின்றவளுடைய சொரிகின்ற கண்ணீர் கனமுத்து வடங்களின் முத்துகள் கழன்று விழுவது போலிருந்தது. அதன்மேல் அவட்குப் பின் வந்தாளாகிய இன்னொருத்தியிடத்திற் சென்றான். அவளும் மனம் மயங்குதற்குக் காரணமான காமநோயைப் பொறுத்துத் தன் மகனை எதிர் சென்று தழுவினாள். தழுவிக்கொண்டு முத்தங் கொடுத்தாள். இவனைப் பார்த்துத் தலைவன் தன்னைக் கைவிட்ட தன்மையை நினைந்து, நினக்கு யாங்கள் தாயாகின்றமுறைமை எம்மிடத்தில் நீங்கினது. ஆனமையில் இனி யாம் உனக்கு எம்முறையாவேம் என்று கூறினாள்; இவன் அழகு பெறும்படியான பிள்ளைப் பணிகளை ஆராய்ந்து அணிந்தாள். அப்பொழுது, "மகளிரின், செவ்வரி பரந்த செருக்கினையுடைய கரிய கண்கள் பசக்கும்படி அவர்க்கு நோயைக் கொடுக்கும் நின் தந்தையுடைய பரத்தைமைக் குணமொன்றையும் கொள்ளாதே" என்றாள். அங்ஙனம் கூறியவளுக்கு இனிதாயிருக்கும் சில மறுமொழிகளைக் கூறிப்போனான். பின்பு நம்மை ஒப்பாளாய்ச் சிறப்புப் பெற்று நம்மைக் கோபித்திருக்கும் புலக்கும் தலைமையுடையவள் இல்லிற் சென்றான் என்றாள்.

அது கேட்ட தலைவி, ஏடா!

யான் வருந்தி நோய் மிகும்படி உன் தந்தையை, அவன் நினைத்த தொன்றைப் பருந்தெடுத்துச் சென்றதுபோல, நினைவு நீங்கும்படி பரத்தை கைக்கொள்வள். கொண்ட அப்பொழுதே வளையும் நகமும் அவைபோல்வன பிறவும் படைக்கலமாகக் கொண்டு நகத்தாலே உன் தந்தையின் புதுமையுடைய மார்பிடத்தும் ஒழிந்த சிறிய இடங்களி லும் தான நினைந்தபடி அஞ்சாது வடுக்களைச் செய்வாள். ஆதலால அவள் உனக்கு என்ன உறவுடையள் ? இவனை அடித்தற்கு ஒரு கோல் தருவாயாக என்றாள். அதற்கு அஞ்சிப் புதல்வன் அழுதான். அது கண்டு இனி அழுகையை விடுவாயாக என்று கூறினாள். கூறி உன் தந்தையின் காதற்பரத்தையிடத்து நீ சேராதே. இனி அவர்களின் வீட்டை நீங்கி, அவன் நீங்குவனோ நீங்கானோ எனஆராய்ந்து அவன் நீங்கான் என உறுதி கொண்டிருக்கும் வீட்டிற் செல்லாது எம்போலக் கையாறுடையவர் வீட்டில் செல். நீ இனி வெளியே செல்லும் தொழில்தான் முடிந்தது என்றாள்.

## 18

விளையாட்டிக் கொண்டு வரும்படிசேடியரோடு மகனைப் போக்கிய தலைவி, அவன் நீடித்து வந்த விடத்துப், பரத்தை யிற் பிரிந்த தலைவன் மறைவிடத்தே வந்தானாக அவன் கேட் கும்படி கூறுகின்றாள் :

பெரிய செல்வம் நிலை பெற்றதும் மிகுந்த சோற்றை யுடையதுமாகிய அகன்ற மனையிடத்து, இரண்டு சிறகா கப் பொருந்துகின்ற கதவைப் பிடித்துப் பிள்ளையைக் கை விட்டுத்தனியே நின்று வருந்துகின்றேம். பிள்ளைகள் கூடி விளையாடும் மணலிடப்பட்ட அகன்ற தெருவில் பிள்ளைக ளோடு விளையாடுவித்துக் கொண்டு வருவதற்கென்று நீ போனாய். இனிய பாலை யான் பிள்ளைக்கு ஊட்டாது, அது பெருகும்படி சுரக்கும் அவ்வளவு நேரம் பிள்ளை உண்ணு.

திருத்தற்கு, நின் மனத்தில் வருத்தமில்லாது தாமதித்த காரணம் யாது? அதனைக் கூறு.

தோழி: அதனைக் கேட்பாயாக: பெரிய கங்குடைய பனையின், குடம் போற்றிரண்டதும் அழுத்தமில்லாத முகிழையுடையதுமாகிய பசிய குரும்பையைக் கொடியிற் கட்டிப் பின்னிய பின்னலைச் சிறிய பிள்ளைகள் இழுப்பார்கள். அப்பிள்ளைகளுக்கு நடுவே பெரிய மணி பதித்த தேரிலிருந்து இவன் எமது பெரிய மனைக்கு மீண்டு கொண்டிருந்தான். அப்போது முறுக்கவிழ்ந்த நீல மலர்கள் காற்றுக்கு அசைவனபோன்ற கண்களையுடைய பரத்தையர் சாளரங்களில் ஒதுங்கி நின்று பார்த்தனர். அவர்கள் ஆலில் கீழ் இருக்கும் இறைவனுடைய மகனாகிய முருகக் கடவுளின் திருநாளுக்கு ஆரம்பமாகும் நாளென்று கருதி வாயிலிலே வந்து நின்று பார்த்தனர். இவனுதலை அறிந்து அவளுள் ஒருத்தி அழகிய பாதத்தில் சிலம்பு ஒலிக்கும்படி அணுகினாள். அவள், "கண்ணாலும் நெற்றியாலும் கூந்தலாலும் உன்னைத் தழுவிய தாயர்க்குக் கையினால் மகிழ்ச்சியைக் கொடுப்பாய்! நின் தந்தைக்கு நீ தண்ணெனச்செய்யும் சிறப்புப்போல எமக்குஞ் சிறப்புக்கள் செய்து இவ் விராக் காலத்தே எம்மோடு தங்கிப் போகவேண்டும். அவ்வாறு தங்குதலால், எங்கள் அழகின் புதுமையை நுகர்ந்து பின்னர் எம்மை நினையாத நாணில்லாதவன் தந்த தனிமையெல்லாம் மிகவும் போக்குவேம்" என்று கூறினாள். இவனிடத்தில் விருப்பத்தால் அளவிட முடியாத வேற்றுத் தாயர் எதிர் கொள்ள, அதனை மாற்றாத இக்கள்வனாலே அவ்விடத்திற் றாமதித்ததல்லாமல் யான் வேறோர் தீமையும் உடையேனல்லேன். ஒள்ளிய ஆபரண மணிந்தவளே! என்னைக் கோபியாதே.

அதுகேட்ட தாய் புதல்வனை நோக்கி ஏடா! மெத்தென்ற தோளுடைய உன் தாய் மார் சூடின கண்ணியோடே எம்முடைய இல்லிலே வருவையோ வாராயோ?

என வெறுத்துக் கூறினுள். அப்பொழுது தலைவன் வந்தான். அதுகண்டு, "முன்னேயிருந்து மகன் நமக்குச் செய்த நோய்க்கு மேலே, எம்மை மனத்தால் இகழ்ந்திருத் தலால், தமது மெய்யிடத்துக் கிடந்த, அழகிய இனிய சொல்லையுடைய நல்ல மகளிர் அணிந்த ஆபரணங்களின் வடுவைக் காட்டி, ஏனைவடுக்களோடு தந்தையும் வந்து நிற்றல், வெந்ததொரு புண்ணிலே வேலால் எறிந்த தன்மைத்தா யிருந்தது.

## 19

தலைவி கடவுள் ஆலயம்தோறும் வலஞ்செய்வித்துவரற் குச் சேடியரோடு மகனைப் போக்கினுள். அவன் நீடித்து வந்தவிடத்துத் தந்தையின் தோடியை மகன் கைக் கண்டு அவள் புலந்து கூறுகின்ருள் :

ஏடி! நீ எமது வீட்டின் நல்ல வாயிலினின்றும் சென்ருய். பல தேவாலயங்களை வலஞ்செய்வித்து வாவென்று யான் கூறினேன். நீ சென்று அக்கூற்றினைத் தப்பினுய். மாவின் உயர்ந்த கொம்புகளினின்ற, மிக்க காற்று அசைக்கும் நறிய பிஞ்சுகள் காம்பு முறிந்து பால் ஒழுகும். அத்தன்மைபோல எனது முலைகளினின்று பால மிகக் குதிக்கையினுலே அதனை மறைத்து யான் உள்ளங்கையால் அமுக்கித் தேய்த்தேன். முலைகள் அக் கையின் அளவில் நில்லாதனவாய் விம்மிப் பால் சுரந்தன. பிள்ளை உண்ணுது பால் அவமே போம்படி, அருளில்லாத இவன் தந்தையுடைய பரத்தையருள் யாருடைய இல்லிற் றங்கினுய் சொல்.

நீரிடத்தே இலையின் கீழே மறைந்து நின்ற அழகிய இதழையுடைய தாமரைப்பூப்போல எடுத்த பச்சைக் குடையின் நிழலிலே நின்பிள்ளை நின்ருன். அவனைத் தாய் மார் கண்டனர். கண்டு, "யாம் நோம்படி மனத்தைக் கைக்கொண்டு பின்னர் எம்மை நினையாதவன் பெற்ற மகன்

இவனை மனமறு கருதி அகன்ற மனையின் வாயிலின் எல்லையைக் கைவிட்டுப் புறப்பட்டுத் தெருவிலே வந்து தடுத்தனர் ; தடுப்ப அவரிடத்தே தங்கினேன்.

பின்னை அவர்கள் தம்முடைய, தம்முடைய அணிகளில் இவன் வடிவுக்கு ஒத்தவற்றை ஆராய்ந்து கைக்கணி என்று அணிந்தனர். (என்றாள் சேடி.)

அதுகேட்ட தலைவி, தனக்கு அயலாயிருக்கின்ற தந்தையுடைய பரத்தையர் கொடுத்தவற்றை இவன் வாங்குவானும். இவன் இனிக் கைவிடப்படுவன். இவன் மிகவும் நம்மாற் கோபிக்கத் தக்கான் என நெஞ்சொடு கூறினாள்.

காவலின்றி வேண்டியபடி நடப்பவனே ! நீ எம்மை இகழ்ந்து இட்ட பரத்தையர் கையின் மோதிரங்களெவை ? யான் அவற்றைக் காண்பேன். அம்மோதிரங்களுள், நறவம் பூவைக் கண்டாற்போற் சிவந்த விரலுக்கு ஏற்ப, ஆண் சுறுவைப் பொறித்த மோதிரத்தை இட்டவளுடைய மனக்கருத்தை அறிந்தேன் ; காமன் கொடியாகிய மகரத்தை மோதிரத்தே குழித்தாற்போல வேறொன்றிலே அழுத்தி அதனை எந்நாளும் அடங்காத பரத்தைமைக் குணமுடைய இவன் தந்தை மார்பிலே பொறியாக ஒற்றி அடிமைகொண்டாளு வேன் என்று சொல்லுகின்ற வார்த்தையை எனக்கு அறிவித்தற்குச் செய்த தொருதொழிலாகும்.

புதல்வனாகிய நீயும் என்னை இகழுந் தன்மையையோ ? இவ்விகழ்ச்சியும் நாமே செய்துகொண்டதொன்று. முன் நடந்தனவற்றைக்கண்டு தலை எடுக்கமாட்டாது என் முன்னே, வெந்த புண்ணிலே வேலெறிந்தாற்போல் இன்னென்றிருக்கின்றது. இவன் தந்தையின் முன்கை வளையை இவன் கையிடத்தே இட்டவர் யார் கூறு.

அவன் கூறாமையின், அவள் " ஏடா என்னை அல்லாத பிறரும் இத்தலைவன் அழகைக் காண்பார்களாக என்று

கூறும் தனது அழகை மிகவும் புகழ்கின்ற அவள் உன்னை இதை அணிந்துகொள் என்று சொன்னவளாவள். அவள் யார்?

அஞ்சாதே, நீயும் தவறுடையையல்லை. இதனை உனக்குத் தந்தபூவின் அழகும் மையுண்ட கண்ணுமுடையவளும் தவறில்லாதவளாவள்.

வேனிற்காலத்துப் பலரும் ஆடும்புனல்போன்ற உன் தந்தையை ஈண்டு நோவாரில்லை. தனது அழகைப் புகழ்ந்து எனது அழகை இகழ்ந்து இதனை உன்கையில் தந்தவள் யாரோ என்று வினவிய வருத்தமுடைய யானே தவறுடையேன்.

## 20

தலைவி, மகனைப்பாராட்டி பால் ஊட்டுகின்றபோது அதனை மறைவிடத்தினின்றும் கண்டு புகுந்த தலைவனை அவள் தன்னுள்ளே புலந்து பின்னும் பாராட்டுகின்றாள்.

செல்வமே! உன்காலிற் கிடப்பவை, இரண்டாக அமைந்தனவும் பொன்னாற் செய்யப்பட்டனவும் பொன் பொடி மூடுதலால் நிறம் பெற்றனவுமாகிய சதங்கைகள் அரையில் அணியப்பட்டன, கைத்தொழிலால் அழகு பெற்ற மணிகளை இடையிடையே அமைத்த பொன் மணிகளையுடைய வடம்; அதன் மேலே அழுக்கில்லாத சிவந்த பவளவடம். அவற்றின்மேலே உடுத்தப்பட்டது ஐதாய்க் கழல்கின்ற திரைத்த ஒரு பூத்தொழிலுடைய பட்டாடை.

கையிடத்தே அணியப்பட்டன நண்டின் கண்போன்ற நெருங்கிய அரும்புத் தொழிலாற் சூழப்பட்டனவும்,வேலைப்பாடு விளங்குகின்றனவுமாகிய இரண்டாகச் சேரும் காப்புகள்.

மார்பிடத்தே பூணப்பட்டவை வெட்டாத வாளும் வெட்டாத மழுவும் நெருங்கக்கட்டி இரண்டு புறத்தும்,

மழை பெய்தபுலத்துத் தம்பலப்பூச்சியினது நிறமுடைய பவ ளத்திறற் செய்த அழுக்கற்று விளங்கும் இடபம் உடைய விளங்குகின்ற பூண்கள்.

முடியிலே சூடப்பட்டன, கரியகடலிற் குளிக்கபபடும் முத்தோடு பல மணிகளைச் சேர்த்துக்கோத்த திரண்ட மூன்று மாலைகள். அவை மீது அணியப்பட்டது நூலாற் கட்டியதும் வண்டுகள் ஒலிக்கும் கண்ணிக்குப் பொருத்த மாகுமபடி நடுவே கிடக்க, அரும்புகள் அலர்ந்த நீல மலர் களின் இதழ் நாணும்படி நீலமணியாற் பண்ணினதும் வண்டுகள் ஒலியாததுமாகிய மாலை. (நீல மணிமாலை)

இவையும் பிறவும் நின் அழகுக்குமேல் அழகாகக் கிடக்கும். நீ உருட்டுகின்ற வலிய தேரின் வளைந்த தாமரை முகையினைக் கையாலே பிடித்து மெல்லிய விரலுடைய நின் அடிகள் நோவ மெத்தென மெத்தென அசைந்து இவ் விடத்து நினக்கு வைத்த பாலையுண்டற்கு என் கையிடத்தே வருவாய்,

பொய்யை மறைத்துப், பாண்தொழில் வல்லபாண னைத் தூண்டிலாக விட்டுப் பரத்தையருடைய நெஞ்சைத் தன் வயமாக்குதலைத் தொழிலாகக்கொண்டு திரியும் உன் தந்தைக்கு வைத்த பாலின் பகுதியை உண்பாய்.

உன் தந்தையின் வாயிடத்தினின்றும் வந்த பொய்ச் சத்தியத்தை மெய்யாகத் தெளிந்து, பூவின் அழகுடைய கண்களில் நீர் பரக்கும்படி மயங்குகின்ற நோய் கை கடத் தலால் கண்கள் துயிலாத உன் தாய் வைத்த பாலை உண் பாய்.

வாராத தலைவன் வந்தானென்று யாம் பாராட்டும்படி யாம் எமது மகனைப் பாராட்டா நிற்கப், பாணன் முதலி யோருடன் விரைவில் வந்தார். அம்மையோ! அவரை இவ்விடத்து வருக என்று கூறினர் யார் தான். (அன் னையோ-வியப்பு.)

எம் குடியிடத்தல்லாத பாராட்டைக் கேட்டு மகிழ்ந்தோனே இதனைப் பருகுவாயாக.

கோபித்தாரை மகிழ்ச்சியாகிய கூத்தாட்டுவிக்கும் உன்னை, யான் பாராட்டும் பெரிய பாட்டுக்களோடே நின் தாய்மார் தரும் பாலைப் பருகுவாய். இப்பாலை யான் ஊட்டுவேன்.

## 21

தலைவி, மகனைத் தந்தையின் குணம் ஒத்தவனாகவும் ஒவ்வாதவனாகவும் கூறினாள். அப்பொழுது மறைந்து வந்த தலைவன் ஊடல் தீர்வன சொல்லி மகன் வாயிலாக ஊடல் தீர்த்தலும் அவள் தன்னுள்ளே கூறுகின்றாள் :

கரிய தலையுடைய யானைக் கன்றின் நெற்றிப் பட்டம் போலக் கையினாற் புனையப்பட்ட மூன்று முத்து வடம் மென்மையுடைய தலையிடத்தே தூங்கும். பொன்னாற் செய்த மழுவோடு வாளையும், அணியப்பட்ட விளங்குகின்ற ஆபரணங்களையும் வாயின் நீர் நனைக்கும். யான் அதன் அழகைப் பார்த்து அனுபவிப்பேன்.

அழகிய பவளப் பலகை மேல் சிவந்த பாதி வடிவு வேறோர் யானையை மடியும்படி குத்துகின்ற கோலமாகச் செய்யப்பட்ட (காவலையுடைய மதிலைப் பாயாத) உனது யானையோடு, நின் பாதத்திலணிந்த தேரையின் வாயுடைய சதங்கை ஒலிக்க, வளையணிந்த மகளிர் செய்த மணலில் உழக்கி நடக்கும் போர்த் தொழிலுடைய யானை இவ்விடத்தே வருக.

பெருமா ! நீ உன் தந்தையின் அழகெல்லாம் ஒத்திருக்கின்றாய். உன் தந்தை நிற்கின்ற நிலைகளின் உனக்கொத்த குறிக்கப்படுகின்ற குணங்களை யான் கூறக் கேட்பாய்.

"யாம் அவனோடு ஒரு மனமாயினேம். என்றுணர்ந்திருந்த மகளிரை உன் தந்தை, மெல்லிய தோள் மெலிய விடு

மாறு போல நீயும் அவர் மெல்லிய தோள்கள் மெலியும்படி விடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே.

பெரும! நுகத்திற் பகலாணிபோல முறைமை செய்தற்குச் சாயாத கோல் போலிருத்தலின் நீ அவனை ஒப்பாய் அவன் நம்மைத் தப்பானென்று ஆராய்ந்து மகளிரைக் காற்று மோதுகின்ற பூப்போல அழகு கெடும்படி உன் தந்தை சாய விடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே.

பெரும! கெடுதலறியாத நல்ல பொருளை விரும்பினவர்களுக்குக் கொடுக்குந் தன்மையில் அவனை ஒப்பாய். காதலையும் மெல்லிய நோக்கினையுமுடைய மகளிரை உன் தந்தை மிக நொந்திருக்க விடுமாறுபோல நீயும் அவர்களை நோய் மிக நிற்கப் பாராது விடுதலாகிய பரத்தைமையை ஒவ்வாதே.

(தலைவி பின்னால் வந்து நின்ற தலைவனைக் கண்டு) "இந்த மகனல்லாதவன் பெற்ற மகன் நற்குணங்களல்லாதவற்றை நீ ஒவ்வாதே" என்று யான் கோபிக்க நீ யாரை நோக்கிச் சிரிக்கின்றனை.

(அவள் பின்னே நின்ற தலைவனைக் கண்டு) வராதவர் நம்பின்னே மறைய நின்று பின்னர் நாங்தெளியும்படி முன்னே வந்தார். அதுகேட்ட தலைவன், இங்ஙனங் கொடுமை கூறுகின்றாயாயின், அழகிய ஆபரணங்களையுடையாய்!

உனக்கு வருத்தஞ் செய்யாத எனக்கும் ஒரு தப்புண்டோ? இவனை யாம் எடுத்தற்கு உன்னிடத்தே வைத்துக் கொள்ளாது என்னிடத்தே தருவாய். அது கேட்ட புதல்வன் அவன் மேலே வீழ்ந்தான். அவனைத் தலைவி நோக்கிக் கைவிடப்பட்டவனாகிய அன்பில்லாதவன் பெற்றபிள்ளை அவன் மேலே விழுதலை யாம் மனம் வருந்தி விலக்கவும் கை கடந்து மலையடிவாரத்தில் செல்கின்ற

சிங்கம் பாய்ந்தாற்போல அறனில்லாத தந்தையுடைய அகன்ற மார்பிலே பாய்ந்தான்.

## 22

பரத்தையர் சேரியை அறியேன் என்று தலைவன் தலைவியிடம் சென்றான். அவனோடு இவள் ஊடி ஊடல் தீர்க்கின்றாள்.

தலைவி :—உன்னைக் காணும்போது அஞ்சுவேமாதலின் எம் கூந்தலைத் தீண்டாதொழி.

தலைவன் :—தெரிந்த ஆபரணத்தையுடையாய். யான் பரத்தையரிடத்துப் பிரிந்து தவறு செய்திலேன். அவ்வாறாக நீ எங்ஙனம் சினப்பாய்.

தலைவி :—ஏடா (இமை) கொட்டில் இதழ் மறைக்கின்ற கண்போலத் தெரியாமற் போவாய். ஆதலால் நீ எம்மைக் கைவிட்டாய். அத்தன்மையை அறிந்திருந்தும் அறியாதார் போல நின்னை நொந்து புலக்கின்றவர் தவறுடையர். உனக்கு ஒரு தவறுண்டோ ?

தலைவன் :—அணை போன்ற தோளினையுடையாய் ! தீயவர்களை வருத்துமாறு வருத்தினாய். யான் அவ்வாறு வருத்துதற்கேற்ற தவறுடையேனல்லேன்.

தோழி :—மான்போலும் நோக்கினையுடையாய் ! நீ அழும்படி நின்னைக் கைவிட்டவன் மிகவும் நாணமிலனாயின் அவனிடத்தில் ஊடியிருத்தல் என்ன பயனைத் தருமோ ?

தலைவி :—நெஞ்சே ! கண்ணீர் மிகுந்து உறக்கமில்லாத கண்கள் உறங்கும்படி இனி யாம் மேலாகக் கூறும் கூற்றை உடையேமல்லேம் ; என இவள் கூறும் தகுதிப்பாடுடைய வார்த்தையைச் சீர்தூக்கிப் பார்ப்பாய். இவ்வாறு கூறி ஊடல் தீர்ந்தாள்.)

## 23

பரத்தையர் இல்லினின்று வந்த தலைவனுடன் தலைவி ஊடியும் மாறுபட்டும் சொல்லிப் (பொய்ச்) சத்தியத்திற்கு அஞ்சி ஊடல் தீர்க்கின்றாள்.

*பரத்தையர் கொடியின் இயல்புடையர். அப் பரத்தையரின் புழுகு முதலியன பூசிய மயிர் முடியினின்றும் உதிர்ந்த பூந்தாதுகள் நின்தோட் கட்டிலே கிடக்கின்றன. இந் நிலைமையில் நீ என்னைத் தீண்டுதற்கு யார் ஆகுவை? என்னை விட்டு நீ நீங்குவாயாக. பிரிவாற்றாதவர், பிரிய வல்ல பெரியோர்க்கு அடியரோ?*

**தலைவன் :** *கடுமையுடையவராயிருக்கும் உமக்கு யார் மறுமொழி அளிக்கத்தக்கவர்?*

**தலைவி :**—*நீ போகின்ற தொழிலை விட்டு வினைக்கெட்டு நின்று உண்மையல்லாத வெள்ளை வார்த்தைகளைக் கூறாது நின் பொய்யை மெய்யென்று மயங்குவாரிடத்திற் செல்.*

**தலைவன் :**—*ஆராய்ந்தெடுத்த ஆபரண முடையாய்! நின்னுடைய அருள் நோக்கினைப் பெறிலன்றி இனிய உயிர் வாழமாட்டாத என்னிடத்துத் தப்பு யாது.*

**தலைவி :**—*நீ என்ன ஆச்சரியமுற்றுக் கூறினாய். புள்ளியுடைய நண்டுகளின் நடையாலுண்டான வடு நீரருகிற் கிடக்குமாறுபோல, பெரிய நகங்களாற் பிளந்த வடுக்களும் ஒளியுடைய பற்களால் அழுத்தின வடுக்களும், பிரகாசிக்கின்ற இதழ்கள் வாடின உன் மாலையும் பரத்தையர் நின்னோடு ஊடி அடிக்கச் சிவந்த நின்னுடைய மார்பும் தப்பாதலுக்குப் போதாதோ? பொருந்தாதாயிற் கூறு.*

**தலைவன் :**—*நீ கூறுகின்ற மெய் வேறுபாடு என்னிடத்திருப்பதைக் கவனியா தொழி. அவ்வாறிருத்தல் நினக்குத் தக்கது. அதற்குக் காரணம் என்ன எனில், அக்குற்றங்கள் என்னிடத்தில் இல்லாமையை யான் உனக்குத் தெளிவிக்க நீகாணாயாயின், இனித் தெளிவிப்பேன்.*

*தலைவி :—இக் கற்புக் காலத்து நீ சத்தியஞ் செய்வதைக் கொண்டு யாம் எம் நெஞ்சைத் தெளிவியேம். அதற்குக் காரணங் கேள்.*

*நீ தேரேறி வருகின்ற சிறப்பில் மயங்கி நின் தீங்கைக் கருதாது பரத்தையர் வருவர். அவர்களின் பூமாலையை நின் மாலை யென்று அணிந்து வந்தாய். அத்தப்பிற்கு அஞ்சி யாம் ஊடிய விடத்து நீ செய்யும் பொய்ச் சத்தியம் எம்மை வருத்துமாயின் அவ்வருத்தம் எங்கள் மேலன்றி வேறு யார் மீது செல்லற்பாலது.*

*[இவ்வாறு கூறி ஊடல் தீர்ந்தாள்.]*

## 24

**தலைவன் வந்தவிடத்து அவனுடன் ஊடிச் சில சொல்லி, அவன் ஆற்ருமை கூறுவது கேட்டு ஊடல் தீர்க்கின்ருள் :**

*தலைவி :—எமது கூந்தலைத் தொடுவதற்கு இவன் யார்? உனது செயல், நீ எம்மைப் பாதுகாவாது விட்டுப் பாதுகாப்பவனைப் போல ஊரை ஆளுந் தன்மைக்குப் பொருந்தின கொடுமையுடையதாகும். வந்தவாறு மீண்டு செல்லுதி.*

*தலைவன் :—உடலும் உயிரும் ஒன்ருய்த் தலையிரண்டாகிய புள்ளின் தலையில் ஒன்று மற்றத் தலையோடு போர் செய்த தன்மைபோல நீ இக் கொடுமைகளைக் கூறிப் புலந்தாற் பயனென்ன? இனி எனது அரிய உயிர் நிற்கும் வகையை அறிந்து கூறு. ஏடா! பெரிய காட்டிடத்தில் எல்லாம் அறிந்திருக்கும் கொற்றவைக்கு, அவள் அறியாதன, உண்டென்று கருதிப் பேய் நொடி சொன்னாற்போல நின் பொய்களை எனக்குச் சொல்லி வருந்தாதே. யாம் முன்பே நின் வஞ்சனைகளைத் தெளிந்து விட்டேம்.*

**தலைவன் :—**இனிய நகையினையுடையாய்! நீ கூறிய குற்றங்களோ யான் உடையேனல்லேன். அரசனாற் கோபிக்கப்படுவானிடத்தில் தவறுண்டோ. (தவறில்லையாயினும் கோபிப்பன் என்றவாறு) அங்ஙனம் நீ கூறுமிடத்து அதற்கொரு பரிகாரம் இல்லையாகும்.

**தலைவி :—**நெஞ்சே! இவனைப் பொய் சொல்லவிடேன் மாறுபட்டுக் கோபிக்கிற் பிழை செய்தேன் என்று பாதங்களை வணங்குதலாகிய பரிகாரத்தையுஞ் செய்வான். நம்மை மறந்து யான் ஒரு போதும் மாட்சிமைப்பட்டிருக்க நினையாத நாணமில்லாதவனுக்கு இவ்வூடற் போரிற்றோர்த்து அவனாலுள்ள பயன் கொள்வாய் (என்று கூறி ஊடல் தீர்ந்தாள்.)

## 25

தலைவன் பரத்தையடரித்து ஒழுகி வந்து நின்ற விடத்துக் காமக் கிழத்தி ஊடிச் சொல்லி அவன் ஆற்றுமை கண்டு தன் ஆற்றுமையுஞ் சொல்லி ஊடல் தீர்க்கின்றாள் :

**தலைவி :—**பரத்தையரிடத்து உன் களவொழுக்கத்தை யான் கண்டேன். ஆதலின் பொய்யாகச் சிரித்து யான் விரும்பாதவற்றைக் கூறி என்னைத் தீண்டாதே. நீ தீண்டுதற்கு இவ்விடத்து நினக்குப் பெண்டிராயிருப்பாருளரோ?

**தலைவன் :—**ஒள்ளிய வளையினையுடையாய் நீ என்னுடைய குற்றமாகக் கண்டது எது?

**தலைவி :—**யான் கண்டது ஒருத்தி தானுற்ற காமநோயையும அதனாற் பிறந்த அலரையும் பிறர் அறியாமல் மறைத்து மகிழ்ச்சியின்றியிருந்தாள். அப்பொழுது மழை பெய்தது. இவ்வாறு மழை பெய்து நின்ற ஒரு நாள் பாதி இரவில் இராப்பொழுதிலே, கூந்தலால் அழகு பெற்ற தோளும், முலையும், மகரக் குழையும் ஏனைய ஆபரணங்களும் தனக்குச் சுமையாக முறிவதொரு வஞ்சிக்கொடி

போன்றவள் இடையைத் தாங்கிக் கொண்டு, அடங்காத மூயக்கத்தாலே அடி தளர்ந்து அழகிய சிலம்பு ஒலிப்பக் கோபித்து வந்து கதவைப் பாய்ந்தாள். அது தவருகுமோ? அந்த ஆராய்ந்த இழையினையுடையவளின் ஆரவாரத்தைக் கேட்டுக் காலம் நீடியாது எழுந்து சென்ருய். அது தவருமோ? அவள் கோபம் மாருளாய்ச் சினந்து நின் மார்பிற் கிடந்த நாறுகின்ற இதழுடைய அழகிய மாலையை அறுத்தாள். அது தவருகுமோ? அவளுடைய சிறிய அடியை அடைந்து யான் தீமையுடையேன், அதனை நீ தெளியென்று கூறி அவளிடத்தே தங்கினுய். அது தவருகுமோ? யாம் நின்னைக் கோபியேமோ? இனிச் சொல்வாயாக.

தலைவன் :—யான் சொல்லத் தெளியாயாயின் நீ கூறும் தவறை யான் உடையேனல்லேன். நீ கண்டது இராக்காலத்துக் கனவு போலிருக்கின்றது.

தலைவி :—இராக்காலத்தே மழை மிகவும் பெய்தது. அப்போது குறியிடத்தே வந்தவளை நீ கண்டதனுல் நீ கண்ட கனவு இது என்று சொல்லி நீ செய்ததை நினையாது அச் செய்தியை மாற்றிக் கூறி நின்ருய். நீ செய்யும் சத்தியங்கள் முன்போல் உண்மையானவையல்ல. அதனுல் ஏடா! நினக்குப் புகும் இல்லும் பல விருத்தலின் நீ அங்குச் செல்.

தலைவன் :—மெல்லிய தோளினையுடையாய்! இனி யான் செய்த குறையைக் கைவிட்டு நினக்கு நன்ருகிய அழகை எனக்கு அருள். அதனையான் நுகர்வேன்.

தலைவி :—ஏடா! குறை அடைந்து நீ எம்முன் இவற்றை உரையாதே. உரைப்பின் அதனைக் கேட்டு உன் குறையை பொறுப்போமோ? ஆதலால் இக்காரியத்தில் தலையிட்டு நீ குறையடையாதே (என்று கூறி ஊடல் தீர்ந்தாள்.)

**26**

**இதுவும் அது.**

தலைவி :—நறவம் பூ நீரில் அலர்ந்த நீலப்பூ அனிச்சம் பூ, முறுக்கவிழ்ந்த முல்லைப்பூ முதலிய வற்றுற் ருெடுக்கப் பட்ட உன் கண்ணியையும் மார்பிடத்து அணியும் மாலை யையும் பரத்தையர் விரும்புவர். அவர் கோபித்து ஊடின மையால் நிறம் கெட்ட உன்னுடைய ஒப்பனை நேற்றையில் நன்ருயிருந்தது

*தலைவன் :—அணைபோலும் மெத்தென்ற தோளுடையாய்! இவன் செல்லிற் பரத்தையரிடத்திற் செல்வன், அன்றேல் நீங்கமாட்டான், என்று கருதி அந்த ஐயத்தாலே யான் செய்யாத காரியங்களைச் சொல்லி என்னைக் கோபிப்பது யாது காரணத்தினுலோ ? என்னிடத்தில் தீமையில்லாமை யைத் தெய்வத்தின் மீது சூள் செய்து உன்னைத் தெளிவிப் பேன். அதனைக் கண்டு இனிக் கோபியதாதிருப்பாயாக.*

*தலைவி :—என்னை நீங்கிய பின்னர் நீ செய்த காரியம் அறிவேன். உன் சத்தியம் பொய்யாவதையும் அறிவேன். உன்பரத்தையின் நெருங்கிய வளைகள் அழுத்திய வடுக்களை யும் அவர் முயக்கத்தால் கசங்கிய உன் பூ மாலையையும் கண்டேன். குறியிடத்தே நின்னைப் பெருத அவர் கோபித் துக் கூரிய நகங்களால் தாம் விரும்பியவாறு செய்த வடு வினையுங்கண்டேன். சேரியிலுள்ள, செவ்வரி பரந்த மதர்த்த கரிய கண்ணையுடைய பரத்தையர் அடங்காத முயக்கத்தினுலே அழிந்து சிதறுண்ட சந்தனமுடைய நின் வடிவைக் கண்டு யானும் நின்னேடு ஊடுதலைத் தவிர்த் தேன் ; இனி அப்பரத்தையரிடத்தே செல்வாய்.*

*தலைவன் :—தெரிந்த ஆபரணங்களையுடையாய் ! யான் தெளிவித்தவைகளைக் கொண்டு நின் நெஞ்சைத் தெளியா யாய்க் கோபித்தாய். யான் தீமையுடையேன் அல்லன் ஆத லைப்பணிந்து உன் நெஞ்சிடத்தே நிறுத்துவேன். அதனைக் காண்பாயாக.*

*தலைவி :—இவன் தீமையில்லாதவன் என்று யான்நினைக்கும்படி செய்தல் இவன்கருத்தாகும். நெஞ்சே இவன்வலிமையைக்காண். யான்வேறுபடின் நீ நெஞ்சு கலங்குவாயென்று நின்னை வேறுபடாமல் உன்னோடு இணங்குவேனாயின், அப்பொழுதே மாறுபட்டு என்னை இகழ்ந்து பரத்தையர்பாற் செல்லுதற்கு மனம் மயங்குவாய். ஆதலால் நீ எதையாவது கூறி எனது ஊடலைத் தீர்ப்பது உனக்கு வேண்டப்படாத காரியமாகும். பரத்தையரிடத்துச் செல்லும குறையல்லாத வேறெக்குறையைச் செய்யினும் அவற்றைக் கருதாது என் நெஞ்சு நெகிழ்ந்து நின்னிடத்தே வரும். என் நெஞ்சின் தன்மையை அறியாது நீ யான் விரும்பும்படி என் நெஞ்சைத் தெளிவிக்குஞ் செயல்களை என்ன காரியத்திற்குச் செய்தாய் (எனக்கூறி ஊடல் தீர்ந்தாள்.)*

## 27

**பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தலைவியை மகிழ்விப்பது காரணமாகத் தெய்வமகளிர் விளையாடுவதோர் கனவு கண்டேன். அது மெய்யாகச் சம்பவித்தது காண்பாய், என ஊடல் தீர்க்கும்பொருட்டுத் தலைவிக்குக் கூறுகின்றான்.**

*புனத்தே வளர்ந்த பூங்கொடிபோன்றவளே, பொருள் தேடுதற்குப் பிரிந்து செல்லாது வருந்தியிருப்போருக்கு அவர்கள் இருக்கும் இடங்களிலே பொருள்தானே செல்லுதல் அரிதாகும். ஆகவே உலகம் தமக்கு உரிமையாகும்படி இருக்கும் தருமததைச் செய்தல் கனவிடத்து இல்லையாகும். ஆயினும் இன்பத்தை விரும்புகின்ற கணவரை மகளிர் ஊடலாற் பிரிதலும் ஊடல் தீர்ந்து புணர்தலுமாகிய மாறுபட்ட இன்பத்தை அக்கனவு தராமற் போகவில்லை. யான் கண்ட காதலையுடைய கனவு காரிகைபோல் இன்பந் தருவது ஒன்றாயிருந்தது.*

தலைவன் :—நறிய நெற்றியையுடையாய்! ஆரவாரம் பொருந்திய மதுரையை மலைபோன்ற மதில் சூழ்ந்திருக்கும் அம்மதிலைச் சூழ்ந்த வையையாற்றங்கரையை அழகு படுத்துகின்ற சோலையிடத்தே சென்றதுபோலக் கனவிடத்தே சென்றேன்.

தலைவி :—பெரிய இனிய மென்மையினையுடைய நெடுந்தகாய்! பின்னை நீ அவ்விடத்துக் கண்டது எத்தன்மைத்து அதனை இனிச்சொல் என்றாள்.

தலைவன் :—யான் கண்டது கேள். அன்னங்கள் விட்டு நீங்காத இமயமலையின் ஒருபக்கத்தே அன்னக் கூட்டங்கள் ஆகாயத்தில் இரையைக்கவர்ந்த இளைப்பால ஓய்ந்து தங்கியிருக்கும். அதுபோல வையைத்துறையிடத்தே உயர்ந்த மணற்குன்றிடத்தே பெண்கள் ஆயத்தாரோடு சேர்ந்து நிறைந்திருப்பதைக் கண்டேன்.

தலைவி :—பறைகொட்டுகின்றவன் நினைகின்ற ஓசையைப் பறையும் ஒலிக்கும். அதுபோல நின் நெஞ்சிடத்து விரும்பின இன்பத்தையே கனவாகக் கண்டாய்.

தலைவன் :—நீ அவசரப்படாதே; பின்பு கோபிப்பாய். இனிய நகையினையுடையாய்! அவ்விடத்து நிகழ்ந்தது இதுவாகும். அதனைக் கேள். அழகிய அப்பெண்கள் எல்லோரும் அச்சோலையிடத்து உயர்ந்து நின்ற ஒரு பூங்கொடியை வளைத்து அதிற் பூங்கொத்துகளைப் பறித்தனர். அலர்ந்த வேப்பந்தாரினையும். பொதிய மாலையையுமுடைய பாண்டியன் பொருதபகைவரின் காவற்கூட்டம் போல வரியினையுடைய வண்டின்கூட்டம் சிதைந்தது.

பூங்கொத்துகளிலிருந்து கலைந்த வண்டுகளெல்லாம் அவ்விடத்தில் நின்ற அழகிய பெண்களில் அழகைப்பற்றி நுகர்வனபோல அவர்களிடத்தே மொய்த்தன. அம்மகளிர் வண்டுகளை ஓட்டிச் செய்த போரிடத்தே ஒருத்தியின் பூமாலையும் அழகிய முத்து மாலையும் வேறொருத்தி

யின் அசைகின்றவளையிற் கொளுவிக் கொண்டன. ஒருத்தியின் பொட்டிட்ட நெற்றியோடு பொருந்திய தலையிற் கிடந்த முத்து வடத்தை இன்னொருத்தியின் அழகிய காதிற் கிடந்த அழகாற் சிறந்து விளங்கும் மகரக்குழை கொளுவிக்கொண்டது. ஒருத்தியின் திதலை நிறைந்த அரையிற் கட்டிய பட்டாடையை வேறொருத்தியின் உள்ளிடுமணியுடைய சிலம்பிற் கிடந்த சுரூவடிவாகிய மூட்டுவாயிரும்புகள் பிடித்துக் கொண்டன. புலவியாலே கணவனைத் தழுவாமல் இருநத ஒருத்தி வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கையாலே புலவியை நடுவே கைவிட்டுக் கணவன் வணங்கு கையால் அவனுடைய குளிர்ந்த மாலையுடைய மார்பிடத்தே முயங்குவாள்.

ஒருத்தி பாதத்தில் தாழ்ந்த ஆடையை ஒரு கையால் எடுத்துக்கொணடும் மற்றக் கையால் முடித்த முடி குலைந்த கரிய கூந்தலைப் பிடித்துக்கொண்டும் மிகுந்த பூக்களால் மூடியிருக்கும் குளத்திலே பாய்வள்.

ஒருத்தி கூட்டமாகிய வண்டுகள் மொய்க்கையினாலே கையால் அவற்றை ஓட்டமாட்டாளாய் மணம் நாறும் மாலையை அறுத்துக்கொண்டு ஓட்டி அதற்கு அவை போகாமை கண்டு, வளைந்த தண்டுகளுடைய ஓடத்தே பாய்வாள்.

ஒருத்தி அறிவு மயங்கற்குக் காரணமான கள்ளின் களிப்பால் இமைகள் கூடுகையினாலே பார்வை மறைந்த கண்ணுடையளாயிருப்பள். மொய்க்கும் வண்டுகளை ஓட்டுகின்ற அவள் தன் களிப்பாலே அவற்றை ஓட்டும் இடம் அறியாளாய்க் கைசோர்வாள்.

பல மகளிர் விளையாடும் சோலையிலே காற்றடிக்க ஒதுங்கி வளைந்த கொடிகள் தம்மிற் பின்னியிருப்பது போலத், தெரிந்த ஆபரணங்கள் ஆரவாரிப்ப ஒருவரோடு ஒருவர் கலந்து பெண்கள் வண்டுகளை ஓட்டினர். அவ் வகையினரை யான் கண்டேன்.

தலைவி :—நின்னுடைய பெண்டிர் புலந்தனவற்றை யும், நீ அவருடைய அடி முன்னே வணங்கிப் புலவி தீர்த்த வற்றையும் பலவாருகக் கனவின் மேல் வைதது‌க் கூறுதல் யான் கோபித்துச் செய்யும் குறறம் இன்று என்பதை உட்கொண்டோ ? சொல்.

தலைவன் :—நறிய நுதலினையுடையாய் ! யான் பொய் சொல்லேன். இளவேனிற்காலத்துக் கரிய குயில்கள் அரும்பவிழ்ந்த பூக்களுடைய கொம்புகடோறும் இருந்து ஓயாது பெடையை அழைக்கும். அது பலமாட்சிமைப் படப் புணர்ந்தீர் பிரியாதிருமின் ; புணர்ச்சி நீடி இடையே பிரிந்தீர் கூடுமின் என்று கூறுதல் போல் இருக்கும். இவ்வகையான இளவேனிற் காலத்துக் காமனுக்கு விருந்திடும் பொருட்டு, எதிர்கொண்ட மதுரை யின் மகளிரும் அவர் கணவரும் தேனினம் ஒலிக்கும் காவிலே கூடியிருந்து அடங்காத விருப்பத்தோடே அணிகளைக் களைவர். ஆதலால் பிரிதலும் புணர்தலும் ஆகிய கூற்ருலே யான் கண்ட கனவு நல்ல உண்மையாகும் படி நினைவாயாக.

## 28

யான் அவ்விடத்துக் கடவுளரைக் கண்டு தங்கினேன் எனக்கூறிய தலைவற்கு நீ கண்ட கடவுளர் எனத் தலைவி கூறிப் புலக்கின்ருள்.

தலைவி :—மிகுந்த இனிய மென்மையினையும் பரத்தை மைக் குணத்தினையுமுடைய அகன்ற மார்பிடத்தே வண்டு கள் ஊதும் சந்தனத்தைக் கைவடுக்கொள்ளப் பூசியவனே? முன்பு இத்தன்மையுடையை யல்லை. அத்தன்மை போயிற்று ; இவ்விடத்து இராக்காலத்தே வரும்படியாக நீ வெளியே சென்று கண்ட விநோதம் யாது ? அதனைக் கூறுவாய்.

தலைவன் :—பெரிதும் பொருத்த மெல்லிய தோளினை யுடையாய்! யான் கூறுகின்றவற்றைக் கேட்பாயாறற் கேள். யாம் இருவேமும் உடனே மோட்சத்திருக்கும் வாழ்க்கைக்கு உதவியாயிருக்கும் கடவுளரைக் கண்டு அவ்விடத்தே தங்கினேம.

தலைவி :—கடவுட்டன்மை உண்மையாகக் கொண்டு நடத்துவாள், சோலையின் மலரைச் சூடின மான் பிணை போலும் நோக்கினையுடைய பலருளர். அப்பரத்தையருள் நீ கூறிவந்த கடவுள் எந்தக் கடவுள்.

தலைவன் :—முத்தை ஒக்கும் முறுவலுடையாய்! நாம் மணஞ் செய்ய வாய்ப்பச் சொல்லிய அந்தக் கடவுளே யான் கூறிய கடவுளாகும்.

தலைவி :—நீ கூறியது எனக்கும் ஒக்கும். (என ஒவ்வாமை கூறினாள்.) நாக்கை உள்ளே இழுததுத் தலையைச் சாய்த்து நீ கூறியது பொய்; ஆகையினாலே நீ எம்மிடத்து அகப்பட்டுக்கொண்டாய். நீ கண்ட கடவுளரை உண்மையாக யாங்கள் சொல்லக் கேட்க விரும்பியவனே! இனி யாங்கள் கூறக் கேள்.

உன்னைப் பெற விருமபிய விருப்பால் நீ செய்த குறியிடத்தே தவறாமல் வந்து கடவுள் கண்டவளுக்குச், சாகிற வன்போல விழுந்தெழுந்து காட்டும் பலவினையுடையாய், உன் மனையிடததே சேரும் முறைமையோடு வந்த கடவுளரை நீ கண்டாயோ ?

பார்வையாலே பிணிக்கும் கண்வருத்துதலால், நறிய தேனும் குளிர்ந்த மயிர்ச்சாந்தும், புழுகும் நாறும் இருண்டு கிளைத்த மயிர்க்குக் காலையில் அணியும் அணிக்கு ஏற்ப நீ முதல் நாள் பூவைப் பலியாகப் போட்ட கடவுளரைக் காண்பாயோ ?

அழியாத விரதத்தாலே முகம் குதிரை முகமும் உடலம் மக்களுடலுமாகிய இரண்டு அழகுக்குப் பொருந்திய

சூரபன்மாவைக் கொன்ற சிவந்த வேலேயுடைய முருகனைப் புகழ்ந்து, அடங்காத மிகுந்த காமவேட்கையாலே திருப் பரங்குன்றில் நின்னோடே மாரிகாலத்தே பலநாளுந் தங்கின கடவுளரைக் கண்டாயோ.

உனது மணமிக்க மார்பைப் பிறர் தழுவாதபடி அடை யாளமாக வடுப்படுத்தினர் நீ கண்ட கடவுளரில் யார் சொல்லு. எம்மாற் கோபிக்கத்தக்கவனே! நீ சிறு பொழுது இவ்விடத்திற் தங்கினும் பரத்தையர் கோபிப்பர்.. உனது பொய்மை எல்லாம் யான் அறிந்துகொண்டேன். இனி அவரிடத்திற் செல்லாதொழியின் உனது பூமாலே யணிந்த மார்புக்கோர் முட்டுப்பாடுண்டாம். அதனல் நின்னைத் தழுவிய, நீண்ட கரிய கூந்தலேயுடையார் எல்லார்க்கும் முட்டுப்பாடு உண்டாகும். ஆதலின் அவ்விடத்தே செல் (எனப்புலந்து கூறினள்.)

## 29

**அடியோராகிய கூனுங் குறளும் மாறுபட்டுக் கூடிக் கூறுகின்றனர்கள்.**

**குறளன் :**—நீருள் தெரிகின்ற நிழல்போல் கூனிய மெல்லிய சாயலோடு இவ்விடத்தே நடக்கின்றவளே! உன்னோடு ஒரு காரியத்தை வினவுவேன். அவ்வாறு யான் உசாவுவதற்கு நீ என்ன நல்வினையைப் பெற்றாய். சற்றே நில்.

**கூனி :**—அம்மையோ! ஆண்தலைப் புள்ளின் குஞ்சு போலக் கண்ணினற் பார்க்கத் தெரியாத குறளாய்ப் பிறந்தவனே! என்னை விரும்புகின்றேன் என்று சொல்லி என்னைப் போகாமற்றடுத்தாய். உன்னைப்போற் குறளா யிருப்பவர் என்னைத் தீண்டப் பெறுவார்களோ?

**குறளன் :**—கலப்பையின் படைவாள்போல ஓரிடங் கூனாய்ப் புறப்பட்டு ஓரிடம் முன்னே வளைந்து நிற்க முறித்துவிட்டாற்போன்ற நிறைந்த அழகாலே பொறுக்க

மாட்டாத நோய் செய்தாய். யான் அதனைத் தாங்கி நிற்கமாட்டேன். நீ அருள்வாயாயின் என் உயிர் உண்டு. இனி நினைவைக் கூறு.

கூனி :—இவன் மனக் குறிப்பைப் பாராய். மகளிரைக் கூடும் முறையைக் கல்லாத, சூதாடும் பலகையை எடுத்து நிறுத்தினாற்போன்ற குறளனே! மக்கள் திரியாத உச்சிப் பொழுதிலே வந்து என்னைக் கையைப் பிடித்து நின் இல்லத்தே வாவென்று சொல்லுதற்கு ஏடா! மிகவும் நின்னுடைய பெண்டிராயிருப்பார் சிலருளரோ? சொல் வாய்.

குறளன் :—நல்லவளே! தலைக்குமேலும் நடு இல்லை யாய், வாள்போன்ற வாயையுடைய **கொக்கை உரித்தாற்போன்ற வளைந்த மடக்கையுடையாய்!** யான் கூறுகின்றதைக் கேள்; உன்னை மார்பிடத்தே அணைத்துத் தழுவுவேனாயின் என்னு டைய நெஞ்சிலே அக்கூன் ஊன்றும்; முதுகைத் தழுவுவே னாயின் முதுகிடத்துள்ள கூன் அக்குளுக் (கூச்சம்) காட்டும். ஆதலால் உன்னைக் கூடுதலன்றித் தழுவிக் கொள்ளமாட்டேன். இனிப் பக்கத்தே சிறிது முயங்கும் படி வருவாய்.

கூனி :—சீ, கெட்ட தன்மையுடையவனே! மக்களிற் பாதியானவனே! நீ என்னிடத்தினின்றும் போ. இனி இந்நிலையைக் கைவிடு. மரத்தின் வளைவான இடத்தைப் பிடித்துப் படர்ந்த பூங்கொடிபோல (எமது கூனால்) வடிவு நிரம்பாத மேனியைத் தழுவிப் பாதுகாப்பாரென்பார் பலர் இருக்கின்றனர். இப்பரத்தைமையுடையவன், புல்லுதற் குப் பக்கத்தைத் தாராய் என்று கூறுகின்றான். இங்ஙனம் இவன் கூற நமக்குற்ற குறைதான் யாது. (இவ்வாறு அவன் கேட்ப நெஞ்சொடு கூறினாள்) குறிய வட்டா! பலவுங் கூடின **உழுத்தம் பணியாரத்தினுங்** காட்டில் அனுபவிக் கப்படுகின்ற கூன் சாதியினுடைய பிறப்பு, உன்னிலும் இழிந்ததோ?

குறளன் :—யான் உன்னை விரும்புகின்றேன் என்று கூறி இவள் பின்னே சென்ற விடத்தும் இக் கூனி மனம் இயையாது நம் அருகினின்றும் விலகிப்போய் ஒடுங்கும் ஒடுக்கத்தை நெஞ்சே பாராய்.

கூனி :—ஊருகின்ற ஆமையை எடுத்து நேரே நிறுத்தினாற்போல நெடியனுய்த் தோளிரண்டையும் விலாவுக்குள் வீசி, 'யாம் நின்னை விரும்பேம்' என்று கூறி விலக்கா நிற்கவும் எம்மை விரும்பி நடந்து வருகின்ற காமனார் நடையை நெஞ்சே காணாய்.

குறளன் :—ஒருவரை ஒருவர் முயங்குதற்குக்காரணமான கணையினையுடைய சாமனார் தமையனாகிய காமனார் நடையை நீ காணாய் (என்று கூறி நடந்து காட்டினான்.)

கூனி :—ஓ ஓ ! இவன் நடையைப் பாராய்.

குறளன் :—நம்முள்ளே நாம் கூடி மகிழ்தற்கும் யான் நின் மெய்யைத் தீண்டுதற்கும் குறியிடம் யாது என்று நாம் ஆராய்வோம். இனி உன்னை இகழ்ந்துரையேன். (இவ்வாறு கூறி அரசன் அடியைத் தொட்டுச் சத்தியஞ் செய்தான்.)

கூனி :—அப்படியே யாகுக. மென்மையால் இனிய மார்பனே ! யானும் இகழ்ந்து கூறுதலைத் தவிர்த்தேன். இக்கூனுங் குறளுங் களித்து மகிழ்தல் பேயும் பேயும் துள்ளி விளையாடுவதை ஒக்கும் என இக் கோயிலிலுள்ளார் கூறிச் சிரியாதிருப்பதை யான் விரும்புகின்றேன். பொன் தகடுபோலும் உருவமுடையவனே ! கோயிலை விட்டுச் சோலையின் கீழ்ச் செல்வாயாக. குற்றமில்லாத அறிவினையுடைய சபையார் ஓலையின் தலைகளைப் பிடியாகக் கட்டி அப்பிடியின் தலையில் அரக்கு இலச்சினையை இட்டுவிட்டாற்போல நிரம்பாத உடலினுள்ள முயக்கம் நிறையும்படி இறுகத் தழுவிக் கூடக் கடவேம்.

## 30

### தலைவி பரத்தையரைக் காடையாகக் கூறுகின்றாள் :

ஏடா! வாசம் கமழ்கின்ற கூந்தலுடைய பரத்தையர் வீட்டே செல்கின்ற வழி தப்பி வந்தவன்போல இங்கு வந்தாய். இவ்விடத்துப் பரந்து பாராதொழி. அவ்விடத்தே நில். உனது சிவந்த அடிகள் சிவக்கும்படி வந்ததுபோல நின்பரத்தையர் மனைக்கண் செல்.

**தலைவன் :**—நெருங்கி விளங்குகின்ற பல்லினையுடையாய்! யான் புதிதாக வந்து ஒதுங்கிய காடையின் போரைச் கண்டேன். இதல்லாமல் நீ எனக்குத் தீங்காகக் கருதும் ஒழுக்கத்தை யான் சிறிதும் அறியேன்.

**தலைவி :**—நீ எப்பொழுதும் காடைப்போரைக் கண்டதைப்பற்றி யான் கேள்விப்பட்டேன். அதனை யான் கூறக் கேள். எப்போதும் போலல்லாத உனது புதிய கொடையைப் பாடிக் கவிந்த கையுடைய பாணன் வந்தான் அவன் யாழோசையைக் கேட்டுச் செவி சாய்த்துப் புதிதாக அகப்பட்ட காடைகளின் போரைக்கண்டாய்போல இருந்தாய். பரத்தையர் செய்த வடுக்களாகிய புலராத புண்கள் பல உன் மேனியிற் கிடக்கின்றன. ஊரிலுள்ளார் கூறும் அலருக்கு வருந்தாது பரத்தையர் இல்லில் தங்குவாய். அவ்வியல்புள்ள உன் மார்பிற் கிடக்கும் மாலையைக் கையாற்றழுவிக் கொண்டு அவர்கள் உன்னை அகப்படுத்துவர். பின்னும் வேறு சிலரை அகப்படுத்துவதற்குப் பார்வையாக மகளிரைப்போக விடுவர். இவ்வியல்புள்ள பரத்தையரின் ஊடறபோரால் ஊடிப்போகாத உன்னைக் கைக்கொண்டு அவர் நுகரும் கலவிப்போரைக் கண்டாயும் போல இருந்தாய். உன் தோளிடத்து அவர் செய்த வடுக்களாகிய புண்கள் ஈரமாயிருக்கின்றன.

‘ இவளுக்கு (பரத்தைக்கு) வருத்தமாகவும் கூடும் ’ என்று கருதிப் புணர்ச்சிக் காலத்தில் கன்னத்தில் (சொக்கை

யில் செய்யும் வடுக்களையும் செய்யாது மெய்ம் முழுவதை யும் எப்பொழுதுந் தடவி விரும்பியிருப்பாய். நீ தன்னை வெல்லாமற் கொண்டு புணரும் பந்தயம் போடுபவளது கலவிப் போரைக்கண்டாய்போலே இருந்தாய் உன் மனக் குறிப்பை நின் முகந்தானே காட்டா நிற்கும்.

தலைவன் :—ஆயிழாய் ! நீ கூறுகின்ற அத்தன்மையான குறிகளை யான் அவ்விடங்களிற் செய்ய வில்லை யென்று உனது திருமேனியைத் தொட்டுச் சத்தியஞ் செய்கின்றேன்

தலைவி :—அம்மையோ ! (அம்மாவடி)

தலைவன் :—யான் கூறுகின்ற மெய்யைப் பொய்யென்று மயங்கி நீ உலக ஒழுக்கம் ஒன்றும் அறியாய்போல இருந் தாய். நல்லவளே ! யான் செய்த தவறுகளை என் தலையி லேயே சுமத்தி, என் பொய்களை எனக்குத் தெளிவித்து என் களவைக் கையோடே பிடித்துக்கொண்டாய். யானும் நின்னைப் பிழைத்தேன் இனி எனக்கு அருள் செய்வாய்.

தலைவி :—ஏடா ! யான் நீ கூறியவாறே அருளுவேன். அவ்வாறு செய்தற்கு யாம் நினக்கு யார் ஆவேம் ? விடலாய் ! உன் காடைகள் எல்லாவற்றையும் முன்னே நீ அருள் செய்து பின்னே கை விடுதலின் உன் நடிப்பிலே அகப்பட்டு அவை வருந்தும். அவை வருந்தாதபடி நீ வய மாக்கிய காடைகளை எல்லாம், இன்னும் நின்பாணனாலே அழைத்து அவற்றின் மனந்தெளியும்படி அருள் செய்வாய்.

## 31

தலைவி பரத்தையரைக் குதிரையாக்கிக் கூறுகின்றாள் :

உயர்ந்த அழகினையுடைய மார்பனே ! நின் வாயிற் சொல் நினக்கு மாறன்று ; உன் தன்மையைக் கண்டு வினவுகின்றேன் ; நீ மடிப்புக் குலைந்து கரைகிழிந்து கசங்கிய ஆடையையும், மிகுந்த வலியமார்பிற் சந்தனம் அழிதற்குக் காரணமான வியர்வையையுமுடையை !

தோட் கட்டிலே கிடந்து நிறங்குறைந்த சால்வையையுடை யை;அவ்விடத்தே சென்று இவ்விடத்தே வந்தாய்.

தலைவன்:—யான் கூறுகின்றதைக்கேள், இரண்டு நீலப் பூவைக்கட்டினாற்போன்ற கண்ணியினையுடையாய்! குதிரை ஏறி வருகின்றேன்.

தலைவி :—நீ ஏறிய குதிரையை யான் அறிவேன். அக் குதிரை ஐந்து வகையாக வகிர்ந்து முடிந்த கூந்தலையுடை யது. அக் கூந்தல் கத்தரிக்கப்படும் கேதாரி மயிரினைவைத்து முடியப்பட்டது. அது குஞ்சியாகிய சிவந்த தலையாட்டத் தையுடையது ; நீலமணியைத் தோலில்வைத்துச் செய்த கட்டுவடமாகிய கழுத்திற்கட்டும் வல்லிகையையுடையது; புல்லிகை என்னும் பூணாகிய கீழே தூங்கும் கன்ன சாமரையி னையுடையது ; தெய்வவுத்தி என்னும் பூணினருகே துவக்கி ஒரு வடமாக நாலும் சுட்டியாகிய (குதிரை) கண்ணாற் கண்டு அஞ்சும்படி விட்டுவைத்த அழகிய சம்மட்டியினையுடையது. நூலினாற் செய்த உத்தரியமாகிய வலிய குசையினையுடை யது. இனமொத்தமணிகளாற்செய்ததம்மிலொத்தமுக்கண்டன் கட்டுவடமாகிய பலபல நிறமுடைய கண்டிகையினையுடைய பொன்னாற் செய்த மேகலையாகிய, கழுத்திலே கட்டின சதங் கைத் தண்டையினையுடையது. அடியிடத்தே, கட்டினபொன்சதங் கையுடையது. அடியிலே கட்டின சிலம்பாகிய கெச்சையினை யுடையது. இவ்வகையான குதிரையே நீ காதலித்து ஏறினை யாகும். அக்குதிரையைச் செண்டுவெளியில் அல்லாது வெண்சாந்தடித்த நிலாமுற்றத்தே கலைத்து வேகமாகச் செலுத்தாதே. நீநல்ல குதிரைச் சாரதியாகுவை.

ஞாயிறு தோன்றும் காலத்து, கூட்டுமாறு பிடித்து அலகிடப்பட்ட மதுரை வீதியைப்போல, உனது மேனியிற் கீறியது குதிரையோ?

அக்குதிரை கூரிய நகமுடையதாய் மிகவும் கொடியதோ ? அதனை ஏறுகின்ற நீதப்பின்றி வாழ்வா

யாக. மூங்கிற்றடிகளால் நிறந்தோய்த்துக் குதிரையின் உடலிற் குத்தின பக்கரை போலே உனது உடம்பிற் கவ்வியது குதிரையோ ?

சீ! கெட்டது தனக்கொரு பயனின்ருக இக்குதிரை இவ்விடத்தே வடுப்படுத்திற்று. இக்குதிரை பெரிதும் வியமம் உடையது. இக்குதிரையை ஏறிய நீ தீங்கின்றி வாழ்வாயாக.

இன்று நீ ஏறிய குதிரை மிகவும் நன்ருயிருந்தது. அதை இப்பொழுது அறிந்தேன். அதுதான் நூல் கூறிய முறைப்படி மணஞ் செய்து கொண்ட மேகலையுடைய காமக் கிழத்தியாகிய குதிரையோ, அல்லது பெருமா! பாணன் தூதாகச் சென்றவிடத்து அவ்விடத்துப் பரத்தையருடன் உண்டான மாறுபாட்டால் காற்றுப் போற் கடிய குதிரை வந்தது. உன் பழைய உருவை அது இனிக் கெடுக்குமாதலால் அதனை இனி ஏருதொழி. அல்லாவிடின் பரத்தை குதிரையாகவும் நீ சவாரி செய்பவனுகவும் இவ்விடத்தே வராது திரி. இனி இவ்விடத்து நில்லாது அக்குதிரையை ஏறுதற்குச் செல்.

## 32

தலைவி பரத்தையரை யானையாகக் கூறிப் புலக்கின்ருள்:

நீ சிறப்பாகக்கொண்டு ஒழுகுகின்ற பரத்தை, "யான் புணர்தற்கு நீ குறித்த இடத்தில் எந்நாளும் காணேனுய்த் திரியும்படி நீ எவ்விடத்தே போனுய்" என்று விடியற்காலத்தே எம்முடைய மனையின் வாசலிலே வந்து கடுஞ் சொற் சொல்லி உன்னைப் புலப்பாள். அதனை நீ யறியாய்போல இப்பொழுதே நீ எம்மை இவ்வாறு வந்து எள்ளுகின்ருய்.

தலைவன் :—முத்தை ஒத்த முறுவலுடையாய்! நாம் விரும்பிய ஒரு புது யானை வந்தது. அதனை ஏறிப் பார்ப்பதற்கு யான் தங்கினேன்.

தலைவி :—நீ கூறினது ஒக்கும். அந்தப் புதிய யானை விளங்குகின்ற நெற்றியில் இட்ட பொட்டாகிய விளங்கும் பட்டமுடையது. தொய்யில் எழுதிய அழகிய முலையாகிய வெள்ளிய கொம்புடையது. தொய்யகம் என்னும் தலைக் கோலமாகிய தோட்டியினையுடையது. தூங்கும் மகரக் குழையாகிய தெளிந்த ஓசையுடைய மணியுடையது; இலக்குமியைப் பொறித்து வைத்த தலையணியாகிய கழுத்து மெத்தையினையுமுடையது என்று பிறர் கூறக் கேட்டேன். அந்த யானை சுண்ணமாகிய நீற்றையணிந்து, கள்ளாகிய நீரையுண்டு, வாயிற் கதவாகிய கம்பத்தைச் சேர்ந்து, அதனோடு நிற்கும நிலையையே தனக்குச் சங்கிலி யாகக் கொண்டு, தன்னழகைக் காட்டி, அவ்வழகாலே ஒரு வரும் போகாதபடி காலைத் தடக்கி வீழ்த்தும். தன்னைக் கண்டாரைத் தனது மெலலிய தோள்களால் அணைத்துக் கொண்டு அவர்களின் அழகாகிய கவளத்தை, விளங்கும் முத்துப்போன்ற பல்லைத் திறந்து சிரித்துக்கொள்ளும். அவ்வியானையை இன்று நீ கண்டாய். எம்மை நீ பொய் யாக்குதல் என்ன பயனைத் தரும்?

ஏடா! தொடி அணிந்த தோளையுடைய மார்பைத் தழுவிக்கொண்டு பின்னர்த்தத்தி ஏறினவனும் நீ; நின்மேல் ஆசையால் எதிர்கொண்டு வந்து கூடிப் பின்னர் வருந்து கின்ற பரத்தையர் மனையின் வழியாக வேழத்தைக் கொண்டு சென்று ஏறினவனும் நீ யாவாய்.

நின்னை மிஞ்சாது அழகாக அனுபவித்த சிறிய களிப்புடைய அழகிய கரிய கண்கள் அழும்படி சில நாள் விட்டுப் பின்னர்க் கூடினையும் நீ.

நீ சென்ற சென்ற இடங்களிலுள்ள கருமணல்போன்ற கூந்தலுடைய நின்பரத்தையரெல்லாரும் உன்னைக் கோபி யாதபடி என்னுடைய இல்லில் வந்தாய் அதனால் அப்புதிய யானை நீ ஏறமாட்டாத பாகனாகும்படி நின்னை மிஞ்சி மதம் படும்; அதனை விடாதே பாதுகாப்பாய்.

## 33

பரத்தையிற் பிரிந்த தலைவன் சென்று வரத் தாழ்ந்த விடத்துத் தலைவி காரணம் வினவினளாக, 'யான் புதுப் புனலாடத் தாழ்ந்தேன்' என்றான். அவள் இவ்வகை யான புதுப்புனலே நீ யாடினாய் என நெருங்கிக் கூறுகின்றாள்:

*புதிய மலர்களை ஆராய்ந்து உருசி பார்க்கும் வண்டு போல நீ புதிய பரத்தையரை அனுபவித்தற்கு விரும்புகின் றாய். அதனால் அவரைக் கொண்டு வருதற்கு அவர் இருக் கின்ற இடந்தோறும் ஓடிச் சென்று அவரைக் கொண்டு வருவாய். அதனால் எப்பொழுதும் உனது தேர் குதிரை பூட்டப்பட்டிருக்கும். தேர் சென்ற தெருவெல்லாம் நின் பரத்தைமை யாவருக்குந் தெரியும்படி யிருக்கும் நின் பரத்தைமைக் குணத்தை யான் முன்பு கேட்டறிந்துள் ளேன். நீ தினமும் கொள்ளும் கலியாணமாகிய விழா விற்குச் செய்த அலங்காரத்தை, என்னை அல்லாதவர்களுக் குக் காட்டுதற்கு நீ இப்படி வருவாயென நெஞ்சிலே தெளிந்து விட்டேன். எனது வீட்டிற் புகுதற்கு நீ யார்?*

*தலைவன்:—தெரிந்த மாலையும் அழகுமுடைய நல்லாய்! யான் செய்யாதவற்றைச் செய்தனவாகச் சொல்வது என்ன பயனைத்தரும்? பூக்கள் சூழ்ந்ததும் மிக்க நீர் பெருகும் கரையுடையதுமாகிய வையையாற்றில் வருகின்ற நீரை யாடுதற்குத் தங்கினேன்; அதனை நின் நெஞ்சால் துணிதல் வேண்டும்.*

*தலைவி:—ஓ ஓ! நீ அவ்விடத்தே புனலாடினாய் என்றும் கேட்டேன். நீ ஆடிய புனல் கருமணல்போல் நீண்ட நெளிந்த மயிருடையது. கயல் மீனாகிய கண்ணை யுடையது. கமழ்கின்ற பூக்களுடைய இருண்ட சோலை யிடத்தே நாணாகிய வரம்பையுடைத்து. இவ்வாறு பலருங்*

காணும்படி வந்த புதுப்புனலைப் பாணன் வாயிலாக ஊடல் தீர்த்து மாலைக் காலத்துக்கு முன்னே சென்று ஆடினாய்.

மென்மேலும் அருள்செய்து அமர்ந்த காதலோடே அப்புனலை ஆடினாய். அதனால் வெளிப்படும் அலரை யான் அறிதலை அஞ்சி மறைந்து வந்தாய். அதனைப் பிறர் சொல்லக் கேட்டேன். நீ செய்ததைப் பொறாத புதுப் புனல் உடம்பு முழுதும் கோபித்தது. புருவமாகிய திரையை இட்டது. சிலம்பொலிக்கும் அப்புதுப்புனல் நீ குளித்த விடத்தே உன்னைப் பற்றி இழுத்துக்கொண்டு சென்றதை யும் கண்டார் உளர்.

இங்ஙனம் இழுத்த நீர் உனது நல்ல தன்மையுடைய நெஞ்சை வாங்கிக்கொண்டது. அதனால் நீ அப்புதுப் புனலினின்றும் கரையேறுதற்கு இன்னும் கரையைக் காணாயாயினாய்.

தலைவன் :—நிரைத்த வளையணிந்தவளே ! தப்பாத வாட்படையினையும் அழகிய வீரக் கழலணிந்த காலினையு முடைய பாண்டியனது வையையாற்றில் வந்த புதிய புனலை ஆடுதற்குத் தங்கியதை வார்த்தையால் தெளிவித் தேன். இனித் தெய்வத்தாலுந் தெளிவிப்பேன். உனக்கு யான் செய்யாதவற்றைப் பெரிதாகச் சொல்லுகின்றது என்ன பயனைத் தரும் ?

பெரிய மலரைச் சூடின பொய்யுடைய புதுப்புனலை ஆடுமிடத்துத் தேருடன் சென்றாய். அப்போது முள் ளொத்த முறுவலுடைய பரத்தையர்க்கு மகிழ்ச்சியை உண்டாக்கி அகப்பட்டிருப்பாய். உன்னைப் பிடித்துக் கரையேற விடுவாரில் வழிமணலுள்ள நீர் நிலையுள் அகப் படாதபடி உன்னைப் பாதுகாப்பாய்.

## 34

அரசன் தலைவியை நீங்கி இருந்தவிடத்துத் தலைவிபுலவி நீடித்து ஆற்றாளானாள் அவ்விடத்து அவட்கு நிகழ்ந்த

காமமிகுதியை அவ்வரசனை நோக்கிச் சான்றோர் கூறு கின்றனர்.

*கள்ளை உண்டல் ஆகாதென நீக்கிய அசுரர்க்கும், அதனை உண்டலை நீக்காத சுரர்க்கும் விதித்தனவும் விதியா தனவுமாகிய இரண்டையுங் கொண்டு வியாழம் வெள்ளி என்னும் குரு இருவரும் நீதி வகுத்தனர். அவ்விதிகளை யுடைய அரசியலைக் கூறும் நூல்வழி பிழையாது அரசர் ஆட்சிபுரிவர். அதனால் குழவியைப் பார்த்து இன்புறும் தாய் அதற்கு முலை சுரந்து பால் கொடுக்குமாறுபோல, மழை தன்னை வேண்டின காலத்தே பெய்து உலகைக் காக் கும். இவ்வாறு எல்லாரையும் நடுவு நிலை திறம்பாது ஆளும் ஆட்சியையும், கொடி கட்டியதும் மணியணிந்ததுமாகிய தேரினையுமுடையாய்!*

*நின் அழகிய குடையின் நிழல் அறம் செய்யுமென்று அதனை எடுத்தாய். அக் குடைநிழலின் புறத்தே இவள் அகப்பட்டாளோ? இங்ஙனம் பிறைபோலும் நெற்றி பசப்புப் பரப்பப் பெரிய நடுக்க முற்ற இவளை இவ் விடத்தே அருளிப்பார்ப்பாயாக.*

*உன் செங்கோலையுடைய உயர்ந்த நடுவு நிலைமையை உலகம் புகழ்ந்து கூறும். அச்செங்கோலின் இனிய செய்தொழிலுக்குக் கீழாகிய கொடுந்தொழிலின் கண் இவள் அகப்பட்டாளோ?*

*இங்ஙனங் காமநோய் இறந்துபாட்டைச் செய்கையி னால் உயிர் வாழ்தலை வெறுத்த இவளை இவ்விடத்தே அருளிப் பாராய்.*

*உனது கொட்டப்படுகின்ற முரசம் இவ்வுலகத்திற்குக் காவலென்று கூறும்படி ஒலிக்கும். அம்முரசினது காவலி னின்றும் இவள் நீங்கினாளோ? மூங்கில் போன்று அழகிய தோள்கள் அழகு கெடும்படி வருந்துகின்ற இவளை அருளிப் பார்ப்பாயாக.*

தூரத்தே இருக்கும் பொருள்களைக் காணும் கண்கள் தம்மிடத்துள்ள வடுவைக் காணமாட்டா. எனது தோழியின் கை வளைகள் கழலும்படி நீ துறந்த கொடுமையானது சான்றோரால் கடியப்பட்டவற்றுள் ஒன்றோ?

## 35

இதுவு மது.

நீ குற்றந் தீர்ந்த மாட்சிமைப்பட்ட ஒழுக்கமுடையை, ஞாயிறு கடலிடத்தே தோன்றி இருளைக் கெடுக்கும். அஞ்ஞாயிறுபோலப்பகைவர் அஞ்சும்படி அச்சத்தைக் கொடுக்கும் நெஞ்சுடையை. உனது உயர்ந்த குடையைத் தமக்கு நிழல் எனக் கருதிச் சேர்ந்தவர்களுக்கு குளிர்ந்த கதிர்களை வீசும் சந்திரனை ஒப்பை. அகன்ற உலகில் உள்ளார் வணங்கிப் புகழும் ஒலிக்கின்ற முரசினையுடையாய்!

அன்புற்று நீ உன்னைப் பிரியேன் என்று கூறினாய். அதனை, விரும்பப்படும் வார்த்தையென உன் தலைவி தெளிந்தாள். அவள் நின் பிரிவினால் பல இதழ்களுடைய மலர் போன்ற கண்களில் நீர் நிரம்பும் நிலையளானாள். அரிய தவம் செய்வாரைப்போல யாவரிடமும் பொய்கூறாயென்று ஐயமற்று உலகம் உன்னைப் புகழ்கின்ற தன்மை உனக்குக் கெடாதோ?

உன்னுடைய வாசமுள்ள மார்பை விரும்பினவள் மன வருத்தமுற்றாள். அதனால் அவளுடைய அழகிய வளைகள் இறையினின்றும், கழல்கின்றன. மேகம் நீர் சொரிந்தது போல நின்னை இரந்தவர்க்கு அவரிரந்த பொருளை மறாது அளிப்பாய் என்று உலகங் கூறும் வார்த்தை நினக்குக் கெடாதோ?

நெஞ்சை வருத்தும் நினைவு வாட்டுகையால் நின் கருணையை விரும்பிக் கலங்கினாள். அவளது ஒளியுடைய முகம் பசப்பூரப் பெற்றது. அதைக் காணுமிடத்து, கூற்றுவனைப்போல எவரையும் உலகமுறையில் நிறுத்தின

கோலாலே முறை செய்வையென்று உலகம் நின்னைக் கூறும் வார்த்தை நினக்குக் கெடாதோ ?

எவர்களுடைய வருத்தமும் களைகின்றமையால் இனிய முயக்கத்தை யுடைய பெரிய மார்பனே ! நீ புணரும் துணை என்று கருதிச் சேர்ந்தவள் தனது இயற்கை அழகையும் இழந்தாள் ; நீ இத்தன்மையாய் இரா நின்றாய் ; இது நினக்குக் கொடியது என்று யான் நின்னைக் கோபித்தல் வேண்டுமோ ? நீயே அளிப்பாயாக என்றாள்.

மருதக்கலி முற்றும்.

# நான்காவது

## முல்லைக்கலி : முல்லைத்திணை.

காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை. இந்நிலத்தவர் களின் குலதெய்வம் திருமால். முல்லைத்திணைக்கு உரிப் பொருள் (இருத்தல்.) கலித்தொகையில் ஆயர் மைந்தர் ஏறு தழுவி இடைச் சிறுமியரை வரிக்கும் முறைமை கூறப் படுகின்றது. மற்றை அகப்பொருள் நூல்களில் இவ் வழக்குக் கூறப்படவில்லை.

மனிதன் வேடனாயும் கானவனாயும் (குறவன்) வாழ்ந்த பின் காட்டிடத்தே குடியேறி மந்தைகளை மேய்த்துச் சிவ னம் நடத்தும் வாழ்க்கையை ஆரம்பிக்கலாயினான். இடை யர் உலகத்திலே இடம் விட்டு இடம் அலைந்து திரியும் கூடாரவாசிகளாயிருந்தனர். தென்னிந்தியாவில் ஆடுமாடு கள் மேய்வதற்கேற்ற புற்றரைகள் பெரிதும் இருந்தமை யின் முல்லை நில மக்கள் வீடு வாயில்களமைத்து நிலையான வாழ்க்கை நடத்தினர். மனிதன் வேடனாயலைந்து திரிந்த காலத்தில் நிலையான மணங்கள் ஏற்படவில்லை. அக்காலத் தில் ஒரு பெண் பல புருடரை மணக்கும் ஒழுக்கம் உலகில் நிலவியது. இவ்வகையான ஒழுக்கம் திபெத் மலையாளம் இலங்கை முதலிய தேசங்களில் இன்றும் அருகி வழங்கு கின்றது. மனிதன் குன்றுகளில் வாழ ஆரம்பித்த காலத் தில் காதலர் மறைவிற் கூடிப்பின் மணந்து கொள்வதாகிய களவொழுக்கம் ஏற்பட்டது. காதல் மணங்கள், பிற்காலத் திற் பொய்யும் புரளியுமாக மாறின.' ஆடவர் தாம் காத லித்துக் கூடிய மகளிரை வரைந்து ஓம்பாது கை விட்டனர். இத்தீமையை ஒழிக்கப் பெரியோர், காதலித்துக் கூடுவதன் முன்பே மணவினை ஆற்றிக் கொள்வதாகிய விவாகத்தை ஏற்படுத்தினர்.

தலைவனும் தலைவியும் விவாகம் ஆற்றி வீட்டின் கண்ணிருந்து இல்லறம் நடத்துதலாகிய ஒழுக்கம் முல்லை எனப்படும்.

முல்லை நிலத்தில், பெண்களுக்குச் சொத்து உரிமையாகும் வழக்குமாறி ஆண்களுக்காகும் வழக்கு ஏற்பட்டது. முல்லை நிலத்தில் மக்கள் குடும்பங்களாக வாழ்ந்தனர். நிலங்களைச் சிறு சிறு கூறுகளாகப் பிரிப்பதால் ஆடுமாடுகளை மேய்த்தல் வில்லங்கமாயிருந்தது. ஆகவே அவர்கள் குடும்பங்களாக வாழலாயினர். பல குடும்பங்கள் சேர்ந்து ஒரு கிராமமாகும். செல்வமும் அதிகாரமுமுள்ள ஒரு குடும்பத்தின் முதியவன் அக்கிராமத்துக்குத் தலைவனானான். ஒவ்வொரு குடும்பத்துக்குரிய தலைவர்களும் இக்குடும்பங்களுக்கெல்லாம் மேலான ஒரு தலைவனும் சேர்ந்து கிராமத்தின் ஒழுங்கைப் பாதுகாத்தனர்.

இடையன் எப்பொழுதும் கையில் தடியை வைத்திருந்தான். அத்தடியே அதிகாரத்தைக் குறிக்கும் செங்கோலாகவும், இடையவனைக் குறிக்கும் கோன் என்னும் பெயரே அரசனைக் குறிக்கும பெயராகவும் மாறின.

அரசரைச் சந்து செய்வித்தற்கோ, பிறதேயத்திற்றன் கல்வியை மேம்படுத்தற்கோ, வேறெக் காரணமாகவோ பிரிந்து சென்ற தலைவன், தான் வருவேனென்று தலைவிக்குச் சொல்லிச்சென்றபருவகாலத்தே திரும்பிவருவதாகவும், தலைவன் கூறிச் சென்ற பருவ காலங் கண்டு இன்னும் தலைவன் வரவில்லையே எனத் தலைவி ஆற்றுமை மிகுவதாகவும், அவர் இப்பொழுதே வருவார் என்று தோழி கூறித் தலைவியை ஆற்றுவிப்பதாகவும் வரும் பாடல்கள் முல்லைத் திணையின் பாற்படும். வருவதாகப் புனையப்படும் பாடல்கள் எல்லாம் முல்லையும் செல்வதாகப் புனையப்படுவன பாலையுமாகும். தலைவன் பாசறையிடத்திருந்து, தலைவி தனது வரவைக் காணது எவ்வாறு வருந்துவளோ என்று நினைந்து புலம்பு

வதாக வரும் 'பாசறைப்புலம்பலும்' முல்லைத் திணைக் குரியது.

முல்லைத்திணைக்குரிய பாடல்களில் இடையர் இடைச்சியரின் பழக்கவழக்கங்கள் நடைஉடை பாவனைகள் தெள்ளிதிற் கூறப்படுகின்றன.

தமிழரின் சரித்திரத்தை அறிய வேண்டுமாயின் நாம் பழந்தமிழ் நூல்களைக் கற்கவேண்டும்.

## 1

ஆயர் ஏறு தழுவினர் அதனைத் தோழி தலைவிக்குக் காட்டினாள். தலைவி அதுகண்டு வருந்தாதிருக்கும்படி அங்கு நேர்ந்த நன்னிமித்தத்தை அவளுக்குக் கூறித் தெளிவித்தாள். இந்நிமித்தத்தின் பயனைத் தலைவனுக்குந் தெரிவித்த தோழி பின்பு தலைவிக்குத், தஞ்சுற்றத்தினர் கூறியிருக்குங் கூற்றினைக் கூறி, அவன் ஏறு தழுவி ஒருநாள உன்னை வரைந்து கொள்வானெனக் கூறுகின்றாள் :

மழையைப் பெற்ற குளிர்ந்த நிலத்தே முதல் மழை பெய்தது. முன் காய்ந்திருந்த பிடலம் அரும்பீன்றது. செங்காந்தள் ஈன்ற அகப்பைபோன்று வளைந்த முகை நெருப்பை நிரையாக வைத்ததுபோல மலர்ந்தன. காயா நீலமணி போன்ற மலரை அலர்த்தி நின்றது. இப்பூக்களையும் பிற பூக்களையும் விரவத் தொடுத்த மாலைகளை முல்லை நிலக் காளையர் கழுத்திடத்தே அணிந்தனர். வலிய இடபங்களைப் பிடித்தடக்கினவருக்குத் தமது மகளிரைக் கொடுத்தற்கு ஆயர் எருதுகளின் கொம்பைச் சிவபெருமானுடைய சூந்தாலிப்படை போலக் கூராகச்சீவி வட்டமாக அடைக்கப் பட்ட தொழுவிடத்தே விட்டார்கள்.

அவ்விடத்தே, ஏறுகளைத் தழுவினோர்க்குக் கொடுத்தற்கு நல்ல மகளிர் திரண்டு நின்றனர். ஏறு தழுவுதற்குத் துணிந்த ஆடவர், நீர்த்துறையிலும் ஆலமரத்தின்

கீழும் மராமரத்தின் கீழும் உறையும் தெய்வங்களைத் தொழு தனர்; தொழுது முழக்கம் போலவும் இடியைப்போலவும் ஆரவார முண்டாகவும், புகையோடு புழுதி எழவும் தழுவு தற்கு, எருதுகள் விடப்பட்டுள்ள தொழுவிற் பாய்ந்தனர்.

இவ்வாறு அவர்கள் தொழுவிற் பாய்தலும் தோழி தலைவியை அழைத்துக் காட்டிக் கூறுகின்றாள் :

உயர்ந்த கரிய கொமலை ஒத்த வண்டின் நிறமுடைய கரிய எருதின் பார்வையை அஞ்சாளுய் ஆயன் அதன் மேற்பாய்ந்தான். அவனை எருது கொம்பாற் குத்தி எடுத்து உடலைக் குலைத்தலைப் பாராய். அத்தோற்றம் துரோபதை யின் கூந்தலைக் கை நீட்டிப் பிடித்த துச்சாதனனது நெஞ் சைப் பிளந்து, சபையின் நடுவே தான் சொன்ன சபதத்தை வீமசேனன் முடித்தது போன்றிருக்கின்றது.

சந்திரனைப்போன்ற சுட்டியை நெற்றியிலுடைய காரி மலையிடத்துள்ள பூவாற் கட்டிய மாலையை யணிந்த இடை யனை எதிர்த்துக் குடர் விழும்படி குத்தி அலைக்கும் தோற் றம், உலக முடிவில், பசிய கண்ணையுடைய உருத்திரன், வருத்தத்தைச் செய்யும் எருமைக் கடாவை ஏறும் யம னின் நெஞ்சைப் பிளந்து குடரைக் காளிக்கு உணவளித் தல்போன்றது.

ஆயர் நேர்ந்துவிட்ட, செவி மறுவாயிருக்கின்ற விளங் கும் நுண்ணிய சிவந்த பொறிகளையுடைய வெள்ளை எருத் தினது கோபத்தை அஞ்சாளுய் அதன்மேல் பொதுவன் பாய்ந்தான். அவனை அவ்வெருது நெருக்கி முள்ளினது நுனிபோலும் முனையினையுடைய கொம்பாலெடுத்துக் குலைப்பதன் தோற்றத்தைக் காணாய். அத்தோற்றம் செல லுதற்கரிய இருட்டில் அரிய இருள் என்று கருதாளுய் வந்து துரோணசாரியனைக் கொன்ற சிகண்டியைத் தன் முயற்சியாலே வென்று கொன்று தன் தோளால் அவன் தலையைத்திருகும் அச்சுவத்தாமாவைப் போலும்.

[இங்ஙனம் தோழிகாட்டக்கண்டு நம் கணவறாகும் இங்ஙனமாகுமோ வென்று அஞ்சின தலைவியது அச்சத்தை, அவ்விடத்து நேர்ந்த நன்னிமித்தங்கண்டு போக்குவாளாகத் தோழி மேலும் கூறுகின்றாள்.]

ஆயர் இவ்விடத்து ஊதுகின்ற குழல் நீலமணி போலும் காயாம்பூவாற் செய்த மாலையினை அணியும் இயல்பினையுடைய கணவரை நமக்குத் தருதற்கு நல்ல நிமித்தமாக இசைத்தது ; நீ அஞ்சாதிருப்பாயாக.

[தோழி தலைவனிடத்தே சென்று] "இவ்விடத்துக் கண்ட நிமித்தத்தை ஆராய்ந்து பார்க்கில் மதயானையினும் பார்க்கப் பொல்லாத இடபத்தை நீ கை நெகிழ விடாது தழுவுவாய் ; இப்பொழுது இவ்விடைமகளின் தோள் வீரமகளின் தோளிலும் பார்க்க வெற்றிக் கொடியை உண்டாக்கினவாம்" என்றாள்.]

[பின்னர் அவள் தலைவியிடத்துச் சென்று]

'எம்முடைய செறிந்த கரிய கூந்தலையுடையவளைக் கொலை செய்யும் ஏற்றைத் தழுவினவர்க்குக் கூடுதற்குக் கொடுப்பேம்' என்று நமர் கூடிக் கூறியிருப்பர். அப்பொழுது அலர்ந்த கண்ணியுடைய நின்காதலன் தோளிலே கோல்வைத்த கையுடையனாய் ஏறு தழுவினவர்க்குப் பக்கத்தே நிற்பான்.

யான் முற்கூறிய நிமித்தமேயன்றித் தலைவனைக்கண்டு என் கண்கள் துடிக்கையினாலே "ஏறு தழுவ வல்லார் என்னை ஒப்பார் பிறர் இல்லை யென்று நம்முடைய பசுத்திரளில்லை யென்று தலைவன் தனது வீரத்தைக் கூறுவன். பின்பு அவன் ஒரு நாளில் ஆயினும் ஏறு தழுவி நம்மைத் தனக்கு உறவாக ஆளுந்தன்மை உடையன் ஆகாமை இல்லை.

அவ்விடத்து ஏறுகளும் வருந்தின ; தழுவிய இடையரும் புண்மிகுந்தார். தம்மைக் கொள்ளுதற்கு நின்ற இடையரோடு தாம் புணர்தற்கு வேண்டும் நிமித்தங்களைப்

பெற்றுக் கரிய கூந்தலுடைய இடைமகளிர் முல்லையுடைய குளிர்ந்த பொழிலிடத்தே விளையாடுதற்குப் புக்கார். யாமும் பொழிலிடத்தே விளையாடுவேம் ; வருவாயாக.

**2**

இது, ஆயன் தலைவனாய் ஏறு தழுவினமை சுற்றத்தார் கண்டு நின்று கூறியது :

தலைவன் :—பெரிய ஆகாயத்தினின்றும் பெரிய மழை பெய்யும். அம்மழை படுதலினால் குளிர்ந்த வாசமுள்ள பிடவமும், படர்கின்ற முல்லையும், நிறமுடைய அழகிய தோன்றியும், பிரகாசிக்கும் கொத்துடைய கொன்றையும் இவைபோல்வன பலவும் பூக்கும். இப்பூக்களையும் தழை களையும் வைத்துக் கட்டின மாலைகளை அணிந்து அழகிய மொழியினையுடைய ஆயத்தார் விளையாடுவர். அவ்வாயத் தாருள் நின்று, உடம்புடன் என் உயிருக்குள்ளே புகுந்த வள் யாராய் இருத்தல் கூடும் ?

பாங்கன் :—ஓ ஓ ! இவளுடைய சுற்றத்தவர், பொரு கின்ற நல்ல ஏற்றைத் தழுவுகின்றவர்கள் அல்லார், இவள் மாந்தளிர் போலும் மேனியைச் சேரமாட்டார்கள் என்று பலரும் கேட்கும்படி பல முறையும் கூறிக்கொண்டு வரப் பட்டவளாவள்.

தலைவன் :—அவ்வாறாயின் நீ அச்சுற்றத்தவரை நோக்கி இவன் ஏறு தழுவி இவளைக் கொள்வனென்று கூறுக.

பாங்கன் :—அவள் சுற்றத்தாரிடம் சென்று ஏறு தழுவு தற்கு நாங்கள் தாமதித்திரேம் என்றான். அதுகேட்டு அவள் சுற்றத்தார் அழகிய ஆபரணங்களை உடையவள் பொருட்டு ஏறு விடுகின்ற விழாவுக்கு இவனேயன்றி மற் றும் ஏறு தழுவுவார் உளராயினும் வருகவென்று பறை யறைமின் என்றார்.

பெடையை ஒத்த பெண்கள் தங்கள் கண்கள் நிறையும்படி இவ்விழாவினழகை நின்று, பார்க்க எல்லா

இடமும் பார்க்கும் பரணைப்பெறுவார்களாகில் அது தகு திப்பாட்டையுடைய தென்றார் (கண்ட சுற்றத்தார்).

அழகிய பலவகையான அவ்வேறுகளின் மேலே பாய் தற்கு ஒருமித்து ஆரவாரஞ் செய்து ஏறுகளின் எதிரே எதிரே பலருஞ் சென்றார்.

அப்பொழுது அவ்வேறுகள், கொலைத் தொழிலுடைய வில்லுகளைப்போன்ற கொலையைச் செய்யும் சினம் மிகுந்து அவர் மேலே ஓடின. அப்போது புழுதி எழுந்தது.

அவர்களும மார்புகளை எதிரே கொடுத்தார். அவற் றின் கொம்புகளும் கவிழ்ந்து குத்தின. அதனால் தழுவி னவர் பலரும் கலங்கிப் போனார்கள்.

ஏறு தழுவ வந்தவருள் பூமாலை அணிந்தவனும் நீல மணிபோன்ற நிறத்தையுடையவனுமாகிய பெருமையுடைய ஒருவன், தோள்களாலே ஏற்றின் கழுத்தை இறுகத் தழுவி அதன் ஏரியிடத்தே தோன்றினன். அவன் அங்ஙனம் தோன்றி அவ்வேற்றினை முற்றாக வருத்தினன்.

ஏற்றையுடைய நல்லவர்கள் ஏற்றின் வருத்தத்தைக் கண்டு எழுந்திருந்தார்; அவன் தழுவினதற்கு மகிழ்வதன் றிப் பகையாதல் என்ன பயன் தருமென்றார்.

முதல்நாள், கொல்லும் ஏற்றின் கழுத்திலே தங்கின வர்களைக் கண்டும், மீண்டும் வருத்துகின்ற ஏற்றைத் தழு வும்படி விளம்பரம் செய்து (சாற்றும்) யாம் மக்களின் தன்மையை அறியாதவர்களே.

இப்பொழுது அவ்விடத்துச் சிறுகுடியின் மன்றத்தில் குரவைக் கூத்து ஆடப்பட்டது. அக்கூத்தினுள், விளங் கும் கண்ணியும், வலியதோளும், வலியும் மாயமும் உடைய போர்த்தொழிலும், கரிய மேனியும், அழகிய துவர் ஊட்டின ஆடையுமுடைய பொதுவன் தோளையும் ஆராய்ந்த முறு வலையும் கொண்டாடி ஏறுதழுவின புகழ்பரந்தது; இனிய மணஞ் செய்தற்கு மத்தளத்தில் தாளந் தளராமல் எழுப்பு வார்களாக (எனக்கண்ட சுற்றத்தார் கூறினர்.)

*ஏறு தழுவுதல், திரிபன்றி எய்தல் முதலியன அசுர விவாகத்தின் பாற்படும்.*

## 3

ஆயர் ஏறு தழுவுகின்றமையைத் தோழி தலைவிக்குத் தனித்தனி காட்டிப், பின்னர் ஏறு தழுவுகின்றமையையுங் கூறினாள்; கூறி ஆண்டு யாமுஞ் சென்று நின்னை ஏறுதழுவிக் கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு ஏறு தழுவிக் கொள்ளு மாறு, நமது சுற்றத்தார் கூறுகின்ற முறைமையைப் பாட்டிலே தோன்றப்பாடிக் குரவை யாடி வழுதி வாழ்கவென்று தெய் வம் பராவுதும்; நீயும் அங்ஙனம் பாடுதற்கு வருவாயாக எனக் கூறுகின்றாள் :

*மலையிடத்தும் காட்டிடத்தும் கொன்றை காயா சிறிய இலையுடைய வெட்சி பிடவம் முல்லை கஞ்சம் குல்லை குருந்து கோடல் பாங்கர் முதலிய மரங்களும் செடி கொடி களும் பூத்திருக்கும். இவற்றின் முகைகளாற் கட்டிய மாலைகளைக் கொண்டையிற் சூடினவர்களும், முல்லை முகை யும் மயிலிறகின் அடியும் நிரைத்தால் ஒத்த பல்லினையுடைய வர்களும் மடப்பமுடைய சொல்லினை யுடையவர்களும்* பொன்னாற் செய்த மகரக் குழையை யணிந்த காதினருமாகிய *ஆயர் மகளிர் வந்து பரண் (மேடை) மீது நின்றார்.*

*இவ்வாறு ஆயர் மகளிர் பரணிடத்தே நின்றனர். வெள்ளைக் கால்களையுடைய அழகிய கரிய ஏற்றையும், அந்திவானத்தில் வெள்ளி பூத்தாற்போன்று சிவந்த புள்ளி யுடைய ஏற்றையும்,* சிவபெருமான் சூடிய *பிறைபோன்று வளைந்த கொம்புடைய சிவந்த ஏற்றையும், போர் செய்யும் வலிமையினையுடையவும் புகழப்படுகின்றனவுமாகிய பிற ஏறுகளையும் ஆயர் தொழுவினுள் விட்டனர். அவ்வேறு கள் வளைத் தடைக்கப்பட்ட தொழுவிலே விடப்பட்டமை, சிங்கமும், குதிரையும் களிறும், முதலையும் மழை முகில்கள்*

திரியும் மலைச் சிகரத்திலுள்ளகுகையில் திரண்டு நின்றதை ஒத்தது.

அத்தொழுவினுள்ளே அவ்வேறுகளைத் தழுவுதற்கு விரும்பிக் குதித்த பொதுவரைத் தெரிந்து தெரிந்து அவ் வேறுகள் குத்தின.

அவை குத்தினபோது பகை எருதுகளுடன் பொரும் இரத்தந்தோய்ந்த கொம்புகளில் குடர்கள் சுற்றிப்பிணித் தன. அத்தோற்றம் நெருப்புச் சுற்றி விளங்குகின்ற குந் தாலிப்படையையுடைய சிவபெருமான் சூடிய பிறையிடத்துக் கிடந்த சிவந்த நிறமுடைய மாலைபோன்றது.

அங்ஙனம் கொம்புகளோடே சுறறிக் குடர்கள் கொளுவுண்ட ஏற்றின் முன்னே நின்று ஆடி அக்குடரை இரண்டு கையாலும் வாங்கி ஒருவன் வயிற்றிலே இடுகின் றான். அததோற்றம் சிவந்த நூற்கழியை ஒருவன் இரண்டு கையினாலுங் கோத்துப் பிடித்திருக்க அந்நூலை மூன்று நூலாகக் கொள்ளுகின்றவனை ஒக்கும். [இவனுடைய பெருமையைப் பாராயென்று தோழி தலைவிக்குக் காட்டினாள்]

போரை விரும்புகின்ற ஏற்றின் முரடான கழுத்திலே பாய்ந்து அதற்கு இட்ட மாலைபோல அதனைத் தழுவின வன் எருமைத்திரளையுடைய ஆயர்மகனல்லவோ? ஆத லான் இனி அது தன் வலியை மீளப்பெறவிடான். இளை யோளே! இஃதொருவலியைப்பாராய் (என்று காட்டினாள்.)

மறுவினையுடைய ஏற்றின்மீது இருந்து அதனை ஆட்டி விட்டுப் பின்னர், நீர்த்துறையிடத்துத் தெப்பத்தின்மேற் கிடந்து அதனைத் தள்ளுகின்றவனைப்போலே தோன்றுகின் றவன் பசுத்திரளையுடைய ஆயர் மகனல்லவோ? ஆதலால் இவன் இங்ஙனம் செலுத்தும் தொழிலை ஒழியான்; இளை யோளே! இவ்வலிமையைப் பாராய்! இவனும் ஒருத்தன் காணாய், (என்று காட்டினாள்.)

எருமை ஏற்றை ஏறுகின்ற இயமனுடைய நெஞ்சை வேலாற் பிளந்து சினத்தோடு அவன் உயிரை வாங்கின போது சிவபெருமான் இவ்வாறிருந்தார் என்று கூறும்படி காற்றுப்போல விசையாகக் கரிய ஏறு ஓடிவந்தது. அதனைப் பலரும் வந்து சேர்ந்த களத்தேவலியடங்கத் தழுவி அதன் மேலே ஏறி இருக்கும் பொதுவனுடைய அழகைப் பாராய். அதைக்கண்டு என் நெஞ்சு திடுக்கிட்டது (என்றாள்.)

மற்றைப் புள்ளிகள் நெருங்கிய வலிய வெள்ளை எருதின் அழகிய பக்கத்தே, சந்திரனிற் கிடக்கின்ற மறுப் போலக் கிடந்தவன் ஆட்டினத்தையுடைய ஆயர்மகனல்லவோ? இவ்வொப்பில்லாதவனது வலிமையைப் பாராய்.

கஞ்சன் முதலியோர் வரவிட்ட கழுத்தின் மயிரினையுடைய குதிரையை, வாயைப்பிளந்து போகவிட்டுக் கையால் அடித்தபோது கண்ணன் இத்தன்மையாக இருந்தான் என்று கூறுவதுபோல நீங்காத கோபத்தோடு சினந்து தன் மேற்சென்ற சிவந்த ஏற்றைச், செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு அதன் வலியைத்தான் பெற்றுத் தழுவும், காயாம்பூக்கண்ணியையுடைய பொதுவன் அழகைப்பாராய். அவனைக்கண்டு என் நெஞ்சு திடுக்கிட்டது.

ஆயர் சூடிய மயிலின் கழுத்துப்போன்ற காயாம்பூவாற் செய்த கண்ணிகள் பவளம்போல் நிறமுடைய செம்பாட்டு நிலத்தே விழுந்து கிடக்கும். ஆயர், பெரிய புலிக்கூட்டமும் யானைக் கூட்டமும் தம்மில் மாறுமாறாய்ப் பொருதாற் போலப் பொருது ஏற்றைத் தழுவிக் கொண்டு ஒருமித்துத் தொழுவை விட்டுப்போனார். அவர் போன போதே நெருங்கிய இதழ்களையுடைய மலர்போன்ற கண்களையுடைய காதலையுடைய மகளிரும் அவர் கணவரும் பூந்தாதாகிய எருவையுடைய மன்றத்தே குரவைக்கூத்தாடுவார்கள். அப்போது யாமும் சென்று அக்குரவைக்கூத்திற் சேர்ந்து கொள்வேம். சேர்ந்து கொல்லும் கொம்பிற்கு

அஞ்சும்பொதுவனை மறுபிறப்பிலும் ஆயர்மகள் தழுவாள். ஆயர் மகள் தோள்கள், உயிரைத்துறக்க அஞ்சாராய் ஏற்றைக் கொள்பவரைச் சேர்வனவாகும். ஏறுதழுவுதற்கு அஞ்சின வர்கள் அவற்றை அடைதல் அரிது. உயிரை ஒரு காற்று என்று உணராது அதனைக் காத்துக்கொண்டு ஏற்றின் மருப்புக்கு அஞ்சும் நெஞ்சுடையவர்கள் சேர்தற்கு ஆயர் மகளிரின் தோள்கள் எளியனவாயிருக்குமோ? கொல்லும் ஏற்றின் கொம்பினிடையே தாம் விரும்பும் மகளிருடைய மார்பின் முலையிடையிலே விழுமாறு போல, வீழில் எம் முடைய இனத்தில் ஆயர்தத்தம் மகளிர்க்கு முலை விலை வேண்டார். இவ்வாறெல்லாம் நம் சுற்றத்தார் கூறும் முறைமையைப் பாடிக் குரவைக் கூத்தாடுவேம். குற்ற மில்லாத அழகையுடைய கடலிடத்தே பரந்துகிடக்கின்ற பழைய நிலத்தையாளும் உரிமையோடு பொருந்தின எம் முடைய பாண்டியன் இந்த அகன்ற உலகின் கண்ணே வாழ்வானாக என்றுஅவ்விடத்துப் புகழுடைய தெய்வத்தை வாழ்த்துவேம். நீயும் அங்ஙனம் பாடுதற்கு வருவாயாக.

## 4

தோழி, ஏறு தழுவியதைத் தலைவிக்குக் காட்டி இக்குர வையுள் அவனைப்பாடுவோம் வாவென்றாள். அதற்கு உடன்பட்ட தலைவிக்குத் தமர் நின்னை அவற்குக் கொடுக்க எண்ணியிருக்கிறார்களேன அவள் கூறுகின்றாள்:

பாண்டியனது நாட்டைக்கடல் கொண்டது. அவன் இழந்ததனது நாட்டுக்குப்பதிலாக சேரர்மீதும் சோழர்மீ தும்படை எடுத்துச்சென்று அவர்களது விற்பொறியையும் புலிப்பொறியையும் அவர் நாட்டினின்றும் போக்கி மீன் பொறியை அவ்விடங்களிற் பொறித்தான். அப்பாண்டி யனது பழைய புகழை நிலை நிறுத்தின குடியோடு ஒக்கத் தோன்றிய பசுக்கூட்டத்தையுடைய ஆயரெல்லாம் ஒரு மிக்கத் திரண்டனர். உயர்ந்த பனைக் கொடியுடைய பல

தேவன் போல வெள்ளை நிறமுடைய ஏற்றையும், பொற்சக் கரப்படையையும், திரு ஆகிய மறுவையுமுடைய திருமாலைப் போன்ற கரிய ஏற்றையும், விளங்குகின்ற நீண்டசடை யையும், ஒரு பாகத்தே பிறைபோன்ற நெற்றியுடைய உமாதேவியாரையும் மூன்று கண்களையுமுடைய கடவுள் போன்ற கபில நிறமுள்ள ஏற்றையும், பெரிய கடல் கலங் கும்படி உள்ளேசென்று மாமரத்தை வெட்டின வேலையு முடைய முருகனது நிறம் போலச் சிவந்த ஏற்றையும், இவை போன்ற பிற ஏறுகளையும், மேகங்கள் திரண்டு முழங்குவது போல முழங்கும்படி தொழுவிலே புகுத்திவிட்டார்.

இணையில்லாத வெள்ளை ஏற்றின் கழுத்திலேகிடக்கும் அவன் கூரிய எயிற்றினையும் அழகினையுமுடைய இவளைக் கூடும்.

கூரிய கொம்புடைய கரிய ஏற்றின் கோபத்தை அஞ் சாது அதனைத் தழுவுமவன், இந்த ஒள்ளிய ஆபரணங்களை யுடையவளுடைய வாரிய கூந்தலிலே துயிலப்பெறுவன் கபில நிறக்கண்ணுடைய கொல் ஏற்றைத்தழுவுமவன் அஞ்சுகின்ற மானின் நோக்குப்போலும் நோக்கினையுடைய இந்த நல்லாளைக்கூடும்.

கொடிய வலிய சிவந்த ஏற்றின் சினத்தை அஞ்சாஞய் அதனைத் தழுவுமவன் அரும்புடைய காதணி பூண்டவளது மூங்கிலொத்த மிருதுவான தோளிலே துயிலுதலைப்பெறும்.

இவ்வாறு கூறி நல்ல ஆயர், அச்சுவினி முதலிய மீன் களாற் சூழப்பட்ட சந்திரனைப் போலத் தம்மகளிரை அவ்விடத்திலிட்ட பரண்களின்மீது திரளாக நிறுத்திஞர்.

(மீன்-சேடியருக்கும், மதி-மகளிர்க்கும் உவமை.)

(புகை) வலம் வரும்படி புகைகாட்டி விடப்பட்ட ஏறு கள் பறை மிக ஒலிக்கையிஞலும், பலர் ஆரவாரிக்கை யிஞலும் வலிகுறையாத ஆயர் தழுவுதற்கு எதிரே ஏற்று கின்றன.

ஆயன் ஒருவன் ஏறு தழுவவேண்டி மேடையினின்றும் இறங்கி அதனைவிட்டுச் சென்று வேலின் முனை போன்ற கூர் உடைய கொம்பிற்கு அஞ்சாதவனாய் பால் போன்ற வெள்ளை ஏற்றின் கழுத்துமீது பாய்ந்தான். அவனைச் சென்று குத்தும் ஏற்றின் தோற்றம் பால் போலும் மதியையும் அதனைச் சேர்ந்து மறைத்த பாம்பினை விடுவிக்கும் நீலவண்ணனையும் (திருமாலை) ஒக்கும். (அதனைப் பாராய் என்றாள்.)

ஒரு ஏறு, பலரும் எழுந்து சிதறி அவ்விடத்தை விட்டு ஒருமித்து ஓடுமபடி தழுவியவனை எலும்பு முறிந்து குடர்கள் அற்றுச் சாயும்படி குத்தும். குத்தியபின் தன் கொம்பின் வலிமை கெடும்படி அவனை ஆட்டிக்கொண்டு திரியும்; திரிந்து துகைக்கும். இவ்வாறு குறையாத கோபத்தினையுடைய ஏறு, அச்சம் உண்டாக்குதற்கு ஏதுவான மருந்தைப் புகைக்க அதற்கு வெகுண்டு திரிகின்ற களிற்றை ஒக்கும். இதனைப் பாராய்.

தோள் வலியாலே ஏற்றைத்தழுவச் சென்று அதனைத் தழுவித் தவறி அதன் முன்னே வீழ்ந்தவன் முன் செல்லாமல் திரும்புகின்ற ஏறு, போரிற்றன் கையில் வாளோடே அகப்பட்டவனைத்தனக்கு ஒவ்வானென்று வெட்டாமல் மீளும் போர் வீரனை ஒக்கும்; இதனைப் பாராய்.

கொம்பை மார்பிற்கொடுத்து ஏற்றுக்கொள்வார் சிலர். சிலர் மேலே பாய்ந்து ஏறுவர். சிலர் கொம்புகளின் இடையே புகுந்து புகுவர். ஏறுகள், தழுவுவாரை விலக்கிக் கோபித்து எதிரே நிற்கும். அதனைப் பொறாத ஆயர் விலக்கும் ஏறுகளைத் திரும்பத் திரும்பச் சென்று தழுவுவர். அதனாலே எலும்புகள் முறிந்து முறிந்து தசைகளற்றுக் கிடக்கும். இடியை ஒத்த ஏற்றின் முழக்கோடு வாச்சியங்கள் மிக்கு ஆரவாரிக்கும். இவ்வாறுள்ள அத்தொழு, போரை விரும்பி மேலே சென்ற துரியோதனாதிகள் படும்

படி, வரிந்து புனைந்த வலிய வில்லையுடைய தருமன் முதலி யோர் கொன்ற பொருகின்ற களத்தை ஒக்கும்.

அதனொழுவிடத்துத் தழுவிக்கொண்ட ஏறுகள் எல்லாம் மேயும் நிலத்தே போகும். மிக்க அழகினைக் கண்டவரின் கண்களை கவரும் அழகினையுடைய ஆய்ச்சி யரும் ஆயரும் வளப்பமுடைய ஊரிடத்தே குரவை யாடுவர்.

ஆயருடைய கொல்லேற்றின் கொம்புகள் தழும்பு படுத்திய மார்பைப்பாடுவேம், வாருங்கள் எனத் தோழி தலைவியையும் ஆயத்தையும் நோக்கிக் கூறினாள்.

தலைவி :—நெற்றியிலே சிவந்த சுட்டியுடைய ஏற்றின் வெற்றியைக் கெடுத்தவனது நீண்டமார்பிலே, பகைத்து அலர் தூற்றுகின்ற மகளிர் நம்மை இகழ்ந்து பார்க்குங் கண்கள் இகழ்ந்து பாராது இருக்கும்படியாக, யான் சாராமல் இரேன் (மார்பைச் சாராமல் இரேன் என்றவாறு இனி யான் பசுவையுடைய ஆய்ச்சியர் அலர் கூறுவதற்குப் பெரிதும் வருத்தமுறேன்.

ஆயத்தோடே நாம் ஆடும் குரவைக் கூத்திலே ஆயர் மகன் நம்மை அருமை செய்தான்போலே நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோய் செய்தல், தான் கொல் ஏற்றைத் தழுவினான் என்னும் செருக்கினால் அல்லவோ? அது வேறொன்றன்று.

தோழி :—அழகிய ஆபரணங்களையுடையவளே! தழுவு தற்கரிதாக நம் சுற்றத்தார் நிறுத்தின கரிய கொல் ஏற்றின் கோபத்தை அஞ்சாதாய்த் தழுவின பொதுவனுக்கே, எமது சுற்றத்தார் மகிழ்ந்து, மிகவும் அலர் கூறும் ஊரிலுள்ளார் வெட்கும்படி, நின்னைக் கொடுக்க இயைந்தார். இனி வருந்தாதொழி.

இடியேற்றை ஒத்த முரசுடைய பாண்டியனுக்கு இவ் வுலகு ஒருமிக்கச் சொற் கேட்பதாக என்று கூறி, அவ்

விடத்தே, ஒள்ளிய சக்கரப்படையுடை யானை வாழ்த்து வதற்கு நீயும் வருக.

## 5

தலைவன் ஏறு தழுவும் தன்மையைத் தோழி, தலைவிக்குக் காட்டி, அவள் தலைவனை விருப்பொடு நோக்கியதைத் தன்னுள்ளே கூறினாள். கூறி முன்னர்க் களவின்கண்தமர் கோபித்ததனையும் அயலார் பொருதிருந்ததையும் எடுத்துரைத்தாள். தலைவியும் அவர் அலர் கூறியது நன்றேன்று கூறி, இன்றே என் நெஞ்சு கலந்து விட்டது. இனி அவர் கொடுப்பதாகக் கூறிய நாளிற் செய்வதென்ன ? என மகிழ்ந்து கூறினாள். அது கேட்ட தோழி யாம் கூடி இனிதிருக்குமாறு காக்கின்ற பாண்டியன் நீடுவாழுமாறு தெய்வத்தை வாழ்த்துவேம் வா என்று கூறுகின்றாள் :

*அரசன் போர்க்களத்தே படும்படியாகவென்று முறைமையாற் கொண்டு வந்த செல்வத்தையுடையது பாண்டியனுடைய பழையகுடி. அக்குடிக்குரிய பாண்டி மண்டலம் பயந்த விளைவுகளும், கடலில் விளைந்த முத்தும், மற்றும் பயந்த பொருள்களும், மூன்று முரசமும் உண்டைய முதியகுடியிற் பிறந்த அச்செல்வனுக்குத் தீ தின்றி மங்களமுண்டாவதாக. இவ்வாறு நினைந்து தெய்வத்திற்குச் சிறப்புக்களைச் செய்தற்கு அவனுடைய கேடில்லாத குடிக்குப் பின் தோன்றிய பெரிய குடியிற்பிறந்த ஆயரும், உவகையுடையராய் ஒருங்கே கூடினர். கூடி ஏறு தழுவுமிடத்துப் பிறர்க்குத் துன்பம் நிகழும் என்னும் வருத்தமில்லாத உள்ளத்தராயினர். அவர்கள் ஏறுகளை ஆராய்ந்து, பெரிய சக்கரப் படையையுடையவன் ஊதிய சங்குபோலத் தெளிவாக விளங்கும் நெற்றிச் சுட்டியையுடைய கரிய ஏற்றையும், பலதேவனின் மார்பில் விளங்கும் சிவந்த மாலைபோல ஒளி விடும்படி நீண்டு பொருந்திய சிவந்த மறுவினை*

யுடைய வெள்ளிய ஏற்றையும், பெரும்புகழுடைய குந்தாலிப்படையுடையவனது நீல மணிபோலும் திருமிடற்றின் அழகு போலக் கரிய கழுத்தினையும் உயர்ந்த ஏரியையும் உடைய கபிலநிற ஏற்றையும், வச்சிரப்படையையுடைய இந்திரனின் ஆயிரங்கண்ணை ஒத்த பல புள்ளிகளையும் கடுங் கோபமுமுடைய புகர் நிற ஏற்றையும், முருகனுடைய தாழ்ந்த உடைபோல விளங்கும் வெள்ளிய கால்களுடைய சிவந்த ஏற்றையும், காலனது வலியை ஒத்த வலியுடைய பிற ஏறுகளையும் தொழுவிடத்தே விட்டனர். அவை, பல்லுயிர்களை உண்ண வேண்டி அவற்றை விடாமல் ஊழி முடிவிற்றிரியும் ஊழித்தீயும் குந்தாலியும் காலனும் கூற்றுவனும் போலச் சுழன்று திரிந்தன.

காலன்—கூற்றுவன் ஏவலாளன்.

அவர்கள் புகவிட்டபோது கார்கால இடிபோல வாச்சியங்கள் ஒலித்தன. ஏறுகள் அசைந்தெழுகின்ற மேகம் போலப் புகை மூச்செழாநின்றன. புற விதழ் ஒடிந்த மணமுடைய ஒத்த இதழாற்கட்டின மாலையணிந்த மகளிர் நிரை நிரையாக நின்றனர். கோபத்தொனி செய்யும் பொதுவர் கண்ணை மறைக்கின்ற புழுதி வானத்தே சென்று சேரும்படி தொழுவிற் பாய்ந்தனர்.

அங்ஙனம் பாய்ந்த ஆயர் கொம்பைப் பிடித்துக் கொண்டும், மார்பு பொருந்தும்படி தழுவிக்கொண்டும் கழுத்திலே அடங்கிக் கிடந்து ஏரி முறியும்படி தழுவியும், தோளுக்கு நடுவே கழுத்தைப் புகுதவிட்டுப் பிடித்தும், கொம்புகள் தம்மேலே படுதலை ஏற்றுக்கொண்டும் நிரைத்துச் சென்றனர். அவ்வேறுகள் பின்னர் ஆயரைக் கீழே வீழ்த்தி நீண்ட மருப்புத் தைக்கும்படி குத்தி அவர்கள் தழுவுகின்ற கழுத்தைத் தழுவக்கொடாதே அவற்றை நீக்கி நின்றன. அவ்வாறு நிறுத்திய பின்னுஞ், சென்று சென்று தழுவுவாரைக் கோட்டாற் சாவும்படி குத்திப் பின்பு தழுவுவாரைப் பெரு

மல் நின்ற சிவந்த ஏறு உயிர்களைப் பின் சென்று உண்ணும் கூற்றுவனைப்போலும். (அதனைப் பாராய் என்றாள்.)

சிவந்த ஏற்றினுடைய கரிய கொம்புகள் படுதலை மார்பிலே ஏற்றவர்களைக் கொம்புகளாற் குத்தி, மேலே தூக்குதலால் குருதி ஒழுகும், அதனால் நனைந்து அசையும் பல திரண்ட சிறிய மணிகள், ஒளியமைந்த நறும்பூவின் முகை விரியும் பருவம் பார்த்து அதனைச் சூழ்ந்து திரியும் தும்பி போலும். (அதனைப் பாராய் என்றாள்)

நடுவே பாய்ந்து சென்று கழுத்தைத் தழுவிக்கொண்டு கிடந்தவனோடு ஒரு வெள்ளை ஏறு பரணிற் தாவிப் பாயும், அது, பாம்பாற் சிறிது விழுங்கப்பட்ட மதி பாம்புடன் ஒளியுடைய விசும்பில் செல்கின்றது போலும். (இதனைப் பாராய்.)

இவ்வாறு ஏறுகளும் இடையரும் மாறுபட்டு எதிர்க்கையினால் அத்தொழு இரு பெருவேந்தர் பகைத்து எதிர்ப்பட்ட போர்க்களத்தை ஒக்கும்.

கழுத்தை மறைக்கும் ஏரியினையுடைய ஏற்றைத் தழுவினபொதுவன் முகத்தை நோக்கி ஆய்ச்சாதியிற் பிறந்தவளுடைய கண்கள் இமையாதிருந்தன.

நறிய நுதலினையுடையாய்! நீ ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்றினாய். அது வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப் பூவின் நாற்றம் மிக நாறிற்று. அதற்கு எம்முடைய சுற்றத்தார் விரும்பாது மனஞ்சுழன்று அவன் தழுவின கொல்லேறுபோற் கோபித்தனர். அன்று அவர் கோபித்ததால் என்ன பயன் உண்டாயிற்று ?

நெடிய கரிய கூந்தலையுடையாய்! இன்னும் யான் கூறுகின்ற ஒரு வார்த்தையை ஆராய்ந்து பார். கொம்புடைய எருமைகளை வைத்திருக்கும் ஆயர் மகனோடே யாங் கூடியதற்கு எம்முடைய சுற்றத்தார் இன்னும பொறுப்

பர். அதனைப் பொருத அயலாருடைய கண்கள் எங்கள் கண்களை நோக்கித் தீந்துபோயினது என்ன பயனுடையது?

தலைவி :—ஒள்ளிய நெற்றியுடையாய்! ஆய் தன் கண்களால் கோபித்துப் பார்த்து என்னை வருத்தினாள். அதற்கு இவ்வூர், என்னை மலர் அணிந்த கண்ணியையுடைய பொதுவனோடே கூட்டமென்றெண்ணி அலரை உண்டாக்கி விட்டது. இவ்வகையான மகிழ்ச்சி நமக்கு வேறு யாது தான் இருக்கின்றது ?

ஒள்ளிய ஆபரணமுடையாய்! தன்மேல் மிகச் சென்ற சிவந்த கரிய ஏற்றினுடைய கொம்பிடையே இன்று இவன் செல்ல என் நெஞ்சும் உடன் சென்றது. இனி நஞ் சுற்றத்தாரெல்லாரும் பொருந்திப் பசுத்திரளுடைய ஆயர் மகனுக்கு என்னைக் கொடுப்பதாக முடிவு செய்த அந்நாளிற் கொடுக்கின்றது என்ன பயனுடையது ?

தோழி :—யாம் இல்லறம் நடத்தி இனிதிருக்குமாறு பாண்டியன் காப்பான். பிறநாடுகளை வென்று வெற்றி முரசினையுடைய அவன் அருவி ஆரவாரிக்கும் இமயத்திற்கு வடக்கிலேயும் சென்று விளங்குவானாக என்று நினைந்து, கடலிடத்துப் பாம்பணைமேற் பள்ளிகொண்ட வெற்றிச் சக்கரத்தை யுடையோனை வாழ்த்துவேம்.

## 6

தத்தம் பசு நிரை இனத்தைத் தத்தம் மேய்ச்சல் நிலத்துக்குப் பிரித்துச்செல்லச் சென்றவா ஏறுகளைக்கோண்டமை கண்ட ஆய்ச்சியர், தங்காதன் மிகுதியால் தங்காதலரைக் கைபிணைத்துக் குரவையாடித் தென்னன் வாழ்க என்று பாட்டுப் பாடுகின்றனர் :

ஆயர் பால் கறத்தற்கு இடும் சீவிச் செய்த கழுவோடு கறவைக் கலங்களை உறியிடத்தே வைத்தும், தோற்பையிடத்தே சூட்டுக்கோல்களையும் இட்டுச் சுருக்கிச் செல்வர்

செல்லும்போது நீளமான கொன்றைக்காயைப் பிளந்து செய்த குழலை இனிமையாக ஊதுவர். திருந்தாத சொல் லினையுடைய அவர்கள் தத்தம் பசுக்கூட்டங்களைக்கார்கால மழையால் நனைந்த அகன்ற மேய்ச்சல் இடத்தே கொண்டு சென்றனர். [கழுவாவது கறத்தற்கரிய பசுக்களைக் கறத் தற்கு இரண்டு தலையுஞ் சீவி மாலையாகக் கட்டிக் கழுத்தில் இடுவது.]

அவ்விடத்தே முன்பு காலால் வெட்டிப் புழுதியை எழுப்புவனவும், இப்பொழுது மழை பெய்தமையால் கொம் பால் மண்ணை உழுகின்றனவுமாகிய விளங்குகின்ற ஏரியை யுடைய ஏறுகள் ஒன்றை ஒன்று பகைத்து முழங்கிக் கொண்டும் மிகப் பாய்ந்து கொண்டும் போர்க்களத்திற் செல்லும் வீரரை ஒத்தன.

அவ்வேறுகள் ஒன்றை ஒன்று தாக்கிப் பின் வாங்கிப், பின் சேர்ந்து கொம்பாலே எல்லா விடத்தும் குத்துகை யினால் மெய்யினின்றும் வடிகின்ற இரத்தமுடைய ஏறெல் லாம் விடியற்காலையில் பெய்கின்ற மேகக் கூட்டங்களை ஒத்தன.

பசுக் கூட்டங்களை ஓட்டிச்சென்ற இடையர் அவ் வேறுகள போர் செய்யாமற் பிரிதலை விரும்பினர். அவர் அவை இரண்டு கூறுகும்படி நடுவே சில ஏறுகளைச் செலுத்தி விலக்கினர்; பின்னர் பசுக் கூட்டங்களை மேய்ச் சல் நிலத்துக்கு ஓட்டிச் சென்று, தத்தம் இனங்களைப் பிரித்தனர்.

அவ்விடையர், பெரிய நிலத்தைப் படைத்தற்கு அந் நிலத்தை மறைத்துக் கிடந்த அகன்ற கடலைப்போக்கும் கருத்தினையுடைய நான்முகனை ஒத்தார்.

அவ்வாறு செல்கின்றவர்களை அவ்வேறுகள் ஓடும்படி மிதித்தன; ஓடாமல் நின்றவர்களை எதிரே சென்று பெரிய

கொம்பாலே குத்திச் சருவித் துளைக்கும் அலகு இறுக்கிய மரம்போலத் (துறப்பணம்) துளைத்தன.

பொதுவர் அங்ஙனம் துளைத்த தம்முடைய புண்களி னின்றுஞ் சொரிகின்ற இரத்தம் வழுக்குதலால் மணலை அள்ளிக் கையைப் பிசைந்தனர். உடம்பு திமிர்கொண்டு பொறுத்து நில்லாதவர்களாய்க், கடலுள்ளே பரதவர் சிறிய தெப்பத்தை ஏறினாற்போல ஏற்றைத் தழுவினார்கள்

அவ்வேறுகள் தமது அழகிய கொம்பாலே வரிகளை யுடைய குடரைத்தோண்டின. அக்குடர்கள் நீண்டு விழும்படி எடுத்துக்கொண்டு உயர்ந்துபோம் பருந்தின் வாயினின்றும் தப்பிக் கொம்புகள் தோறும் தூங்கும். அக் காட்சி ஆலமரத்திலும் கடம்பமரத்திலும் உறையும் தெய்வங்கட்கு மகிழ்ச்சி யுண்டாக வேண்டித் தூக்கப்பட்ட அசையும் மாலைபோன்றது.

அப்போது ஆய்ச்சியர், மேயும் நிலத்தே ஏறு பரக்கும் படி செலுத்தின தம்முடைய காதலருடைய கையைக் கோத்து இன்பமுற்றுக் குரவையாடுவர்.

குரவைப் பாட்டு! எம்முடைய தோழி! கொலைத்தொழி லுடைய ஏறுகள் சாடின புண்களைத், தழுவிக்கொண்டு பொதிந்து விடக்கடவேம் ;

முலையின் வெம்மையால் ஆறும்படி ஒற்றித் தழுவிக் கொண்டு பொதிந்து விடக்கடவேம.

எம்முடைய தோழீ! பலமுறை தயிர்கடைதலினால் பாய்ந்த புள்ளிகளின் மேல் கொல்லேற்றைத்தழுவின வனுடைய இரத்தம்படும்படி தழுவுதல் எமது தோளிற்கு அழகு மாத்திரையோ ? அதிலுஞ் சிறந்த தொன்றன்றோ ?

எம்முடைய தோழீ ! ஆயர்போர் செய்கின்ற ஏற்றின் கிட்டுதற்கரிய தலையை அஞ்சுதலும், ஆய்ச்சியர் ஏறுதழுவாத

வருடைய அழகிய தோளை விரும்புதலும் இவ்விரண்டு நிலை 'யும் இக்குடிப்பிறந்தவர்க்கு உளவாகச் சொல்லப்படுதல் இல்லையோ?

எம்முடைய தோழீ! இவளுடைய கணவன் கொல் லேற்றைத் தழுவினனென்று ஊர்புகழ்ந்து சொல்லுகின்ற அச்சொல்லைக் கேட்டு, மோரை விற்று யாம் பெறுஞ் செல் வத்தை எம கணவர் தருமோ?

இவ்வாறு பாடிய ஆய்ச்சியர், "அரிய தலைமையுடைய ஏற்றையும் நம காதலரையும் பாதுகாத்தற்கு வண்டுகளின் ஒலிபோன்ற இனிய கானத்தைத் திருமாலின்மீது பாடுவேம் அதனால் வீரம் பொருந்திய பாண்டியன், பகைவர் நிலமென் னும் பெயர் பொய்த்துத் தன் நிலமென்னும் பெயர் பெறும் படி பகைவர் நாட்டை வென்று திறை கொள்வானாக." என்று பாடினர்.

## 7

தலைவி தோழிக்கு அறத்தோடு நின்றாள். தோழி அவட் குத் தமர் வரைவ உடன்பட்டமை சொல்லுகின்றாள் :

குறுங்காட்டிற் பரந்து வாழ்கின்ற ஆட்டிடையர்க்கும், மாட்டிடையர்க்குமாக நம சுற்றத்தார், கொல்லேறு தழுவு தல் காரணமாக ஏறுகளைத் தொழுவிலே புகுத விட்டார்

சில ஐதாகிய செவிமறையினையுடைய ஏற்றை ஒரு வன் தழுவினன். அவனுடைய சென்னியிற்கிடந்த முல்லை மொட்டினாற் கட்டின வளைந்த கண்ணியைக் கொம்பிலே எடுத்துக்கொண்டு அப்புகர்ஏறு துள்ளிற்று. அப்பூ வந்து என் மயிருக்குள்ளே மிகவும் வீழ்ந்தது.

போக்கடித்ததொன்றை மீண்டும் பெற்றவர்களைப் போலஅக்கண்ணியையான் முடிந்ததை, ஆய் கேள்விப்பட் டாள் என்று சொல்லுவார்களோ? இவ்வார்த்தையை எனக்கு விளங்கக் கூறுவாய்.

தோழீ ! அக்கண்ணி வரைந்து கொள்வதிற் ருமதி யாதவனுடைய கண்ணியன்றோ ? பின்னை ஆய் கேள்விப் பட்டால் என்ன பரிகாரம் யாம் செய்யவேண்டும் ? அதற்கு யாது பரிகாரமும் வேண்டா ?

தலைவி :—இன்னபூவை முடியலாம் என்று அறியாது அயலவன் ஒருவன் கையாற் கட்டிய பூவை முடிந்தா ளென்று தாய் கேட்கில், அதற்கு அவள் வெகுளாமற் செய் யும் பரிகாரம இல்லையாயிருக்குமோ ?

தோழீ :—இனி எல்லாத் தவறுகளும் நீங்கும்

தலைவி :— அத்தவறு நீங்குமா றெவ்வாறு ?

தோழீ :—அவன் ஆயருடைய மகனாயிருப்பினும், நீ ஆய்ச் சாதியிற் பிறந்த மகளாயிருப்பினும், இவன் உன்னை விரும்பினாலும், நீ அவனை விரும்பினாலும், தாய் மிகவும் வருந்தத்தக்கதோர் காரியம் இல்லையாகும்.

தலைவி :— அன்னையுடைய விருப்பமும் எனது விருப்ப மாகப்பெறின் அவள் நோகத்தக்கது இல்லையாகும.

தோழீ :—யான் இவ்வளவு கூறவும் அறியமாட்டாத தன்மையையோ ? ஆயர்மகனை மிகவும் காதலித்து ஆயை யும் அஞ்சியிருப்பாயாயின் இனி நீ உற்ற காம நோய்க்கு மருந்து அரிதாகும்.

தலைவி :—ஏடீ ! யானுற்ற வருத்தத்துக்கு மருந்தில்லை யாயின் இனி வருந்தியே விடுவேனல்லனோ ?

தோழீ :—இனி வருந்தாதொழி. கழுவி அழுக்கற்ற நின்னுடைய மயிரிடத்தே சூட அவன் கண்ணியைத் தந்தா னென்று பிறர் சொல்ல உன் தந்தையும் தமையன்மாரும் கேட்டனர். அவர்கள் கூடியிருந்து திருமாலாகிய தெய்வம் இவனுக்கு இவனைக் கொண்டு வந்து காட்டிற்றென்று கூறி மகிழ்ந்தனர். நின்னை அந்தக் களவொழுக்கத்தைப் பிறர் அறியாமல் ஒழுகவல்ல பொதுவனுக்குக் கொடுத்தலைத் தீர்மானித்தனர்.

பிறர் ஏவிய தொழிலைச் செய்யும் தலைவனுந் தலைவியும் முன்னொருகாற் கூடிப் பின்னர் அவன் எதிர்ப்பட்ட விடத்து, அவனிடத்திற் பரத்தைமையால் ஊடிக்கூறி நோர் கின்றாள் ;

*உனது முலை தோள் கண் என்று சொல்லப்பட்ட மூன்றிடங்களும் பெருத்தன. நுதல் அடி இடை என்னும் மூன்றிடமுஞ் சிறுத்தன. உனது அழகு காமனும் பிறர்க்கு மனக்கவலை செய்து தனது அம்பை விடுதற்குக் காரணமா யுள்ளது. இவ்வகையான அழகோடு நீ ஊரிற் றிரிந்து மோரை விற்று மீண்டாய். 'யான் சிரிக்கவல்லேன்' என்று சிரித்தாய். பாண்டியனது சேனை பகைவரின் உயிரோடு செல்லுமாறு படை தொடுத்துவிட்டதுபோல என்னை வருத்தினாய், ஏடீ யான் உனக்கு என்ன பிழை செய்தேன் சொல்லுவாய்.*

*தலைவி :—இடம்மாறித் திரிகின்றது எங்குலத்திற்குத் தீதன்று. நஞ்சுற்றத்தார் ஆயராதல் நாம் ஆய்ச்சிய ராவேம். அது கிடக்க, நீ காயாம்பூக் கண்ணியையும் துவருட்டிய கரிய ஆடையையும் உடையையாய், மேய்கின்ற நிரைகளுக்கு முன்னே ஒரு கோலை யூன்றி அதனை மேய்க் கும் நீ, இடையனுடைய தன்மையுடையையல்லை ; நீ தேவர் களுள் சூரியனாகிய தெய்வத்தின் மகனோ ? (கனனோ ? என்றவாறு.)*

*தலைவன் :—நீ இங்ஙனம் மகிழ்ந்து கூறுதலால் நின்னோடு ஒன்றுங் கூறேன் ; முல்லை முகையையும் மயிலிறகின் அடி யையும் நிரைத்தாலொத்த பல்லும், மூங்கில்போலும் தோளும், போர் செய்யும் பெரிய கண்ணும் உடையையாய், உன்னுடைய அழகை நீயே விரும்பியிருக்கும் சொல்லை யுடையவளே ! நின்னோடு மறு வார்த்தை யார் பேசுவார்.*

தலைவி :—அவ்வாறாயின் யாதும் சொல்லாதிருப்பாயாக.

தலைவன் :—நின்னைப் போகாமற்றடுத்தேன்.

தலைவி :—இவன் எமக்குச் செய்கின்ற வருத்தத்தைப் பாராய். யான் கண்டார் மயங்கும் குழந்தைப் பருவமுடையளாய் நின்றேன். மனம் விரும்பிச் சொல்லாத சொற்களைச் சொல்லுகின்றாய். சொல்லி என்னைக் கண்ட பொழுதே கடன் கொடுப்போர் கடன் வாங்குவாரிடத்தி லுள்ள பண்டங்களை ஆராயுமாறுபோல என்னிடத்துள்ள பண்டங்கள் யாவை என்று வஞ்சனையாக உசாவுகின்றாய். ஏடா! நின் வட்டியைப் பிடித்தற்கு நின்னிடத்து யாம் வாங்கிக்கொண்ட பொருள் எப்பொருள் ?

தலைவன் :—நீ என்னிடத்தில் வாங்கிக்கொண்ட பொருள் கூறக் கேள் : நீ மோர் விற்று மீள்கின்ற நாளிலே செம்முல்லை நெருங்கின காட்டில் சிற்றூன்றின் பக்கத்தே, மாம்பிஞ்சைப் பிளந்தாலொத்த கண்ணாலே எனது நெஞ்சை உன்னிடத்தில் வாங்கிக்கொண்டு என்னை அடிமைத் தொழில் கொண்டாய். நீ ஒரு கள்ளியல்லவோ ? அது நீ யறியாயோ ?

தலைவி :—நின் நெஞ்சை எனக்கு இருப்பிடமாக வாங்கிக் கொண்டு யாம் அடிமைத் தொழில் கொள்ளுதல் எங்ஙனம் எளிதாயிருக்கும் ? உன் நெஞ்சு புனத்திலேயிருக்கும் என் தமையனுக்கு உணவைக்கொண்டு சென்று கொடுக்குமோ ? பசுக் கூட்டங்களை மேய்க்கும் என் தந்தைக்குக் கறவைப் பாத்திரங்களைக் கொண்டுபோய்க் கொடுக்குமோ? தினை அரிந்த தாளிடத்தே ஆய்மேயவிட்ட கன்றை மேய்க்குமோ ? இல்லையே ! ஆதலால் நீ சொல்வது பொய்யாகும்.

தலைவன் :—இனி நீ ஏவின தொழில்களை என் நெஞ்சு புரியும். கடைந்த மோரைக் கையாற் கலக்கும் ஓசை கேட்கும் அண்மையிலுள்ளது உனது ஊர் ஆயினும், உச்சிப்

பொழுதாயினும் யான் கூறுவதைக் கேள். கண் வேறொரு வடிவைப் பாராது தடுக்கும் அழகும் மயிலின் கழுத்துப்போன்ற நிறமுமுடைய மாயஞ் செய்பவளே! இப்படி வெயிலாகிய பொழுதோடே விரைந்து செல்கின்றாய். இதனாற் பெறும் பயன் யாது? காயாம் பூவையுடைய குளிர்ந்த சோலையை அவ்விடத்தே பாராய். அவ்விடத்திற் பிடியை ஒத்த பாறை கிடக்கின்றது. அதனிடத்து, விழுந்த நுங்கை வெட்டின கண்போன்று நீர் நிறைந்த சுனைகள் இருக்கின்றன. அச்சுனைகளில் ஆடிக் குளிர்ந்த பூக்களையுடைய செம் முல்லை மலரோடு முல்லை மலரையும் பறித்துத் தனியே அப் பொழிலிடத்து எம்முடனே தங்குவாய். வெய்யிற்றாழ்ந்து குளிர்ச்சியுண்டாக நும் மூர்க்குச் செல்வாயாக.

தலைவி :—'நீ போகவேண்டா' என்கின்றாய் யாதலின் யாம் போவேம். மான்மருண்டு நோக்கினாலொத்த குளிர்ந்த கண்ணுடையவரும், நீ கூறுஞ் சொல்லில் மயங்குவாரு மாகிய சிறிய ஆய் மகளிரிடத்து நீ இவற்றைக் கூறு. யான் அதற்கு மருளேன். நீ, பல பசுக்களை வெறுக்காது கூடும் ஏறுபோல நாள்தோறும் பதின்மரை ஒருவரைப்போல விருப்பமுற்று அவர்மேற் செல்வாய். நீ ஓர் கண்ணைக் குத்திக் கள்வனாயிருக்கும்போது மற்றவருக்கு என்ன நன் மையைச் செய்வாய். இவ்வாறாகிய உனக்கு நாம் என்ன நன்மையைச் செய்வேம்?

தலைவன் :—கொலைத் தொழிலுடைய கண்ணும், கூரிய எயிறும், தளிர்போலும் நிறமும், கண்டார் வருந்தும் அழகுமுடைய மாயோளே! யான் விரும்புதற்குரியர், உன்னைக் காட்டிற் சிறந்த மகளிர் மண்ணுலகத்தில் இல் லாமையை நீ தானே அறிவாய். இனி நீ நினைத்த தவறு கள் இன்றென்று யான் தெளிவித்தற்குக் கிட்ட வருவாய். மலையோடொத்த மார்புடைய திருமாலைத் தலையினால் வணங்கிச் சத்தியஞ் செய்தேன்.

தலைவி :—நீ சொல்வதை மெய்யென்று நம்பும் அறியாத மகளிர் ; கூட்டத்துக்கு உடன்படுவர். பொய்ச் சத்தியஞ் செய்பவன் நீ : உன் வருத்தத்தைப் பார்க்குமிடத்து அதற்கு உடன்படுதல் வேண்டுதலின் எம்முடைய வாயிலிடத்து (புழைக்கடை) உள்ள காஞ்சி மரத்தின் கீழே குறியிடஞ் செய்தேம்.

தேனைத் தன்னிடத்தே கொண்ட பொதியின் மலையுடைய பாண்டியனது சிறு குடியில் வாழும் எம் ஆயர் அவன் இனிதிருந்து வாழ்தற்கு அந்நிலத்திற் றெய்வத்திற்கு மடைகொடுத்து ஆரவாரஞ் செய்வர். அவ்வாரவாரத்துக்கு வந்த நின் பெண்டிர் நின்னைக் காணாமலும், காஞ்சிப் பூவின் உதிர்ந்ததாகிய எருவையுடைய மன்றத்து வந்த நின்னுடைய பெண்டிர் கேளாமலும், நீ செய்யும் குறியை ஆம்பல் என்னும் பண்ணையுடைய குழலாலே குறித்து வருவாயாக.

## 9

காமக்குறிப்பில்லாத ஒருத்தியை ஒருவன் பார்த்துக் கூறுகின்றான்:

மழை நிறையப்பெய்த அகன்ற நிலத்தே அறுகம் புல் வளர்ந்திருக்கும். அவ்வறுகினைமேய்ந்த நிழலிற் றங்கும் நாகு போர்த்தொழிலில் அடங்காத ஏற்றினுக்கு ஈன்ற இளைய எருது, தேரை இழுக்கும்போது இளமையால் இறுமாக்கும். அவ்விறுமாப்புப்போலத் தலையில் மோர்ப் பானையுடனே அழகாலும் இளமையாலும் மிகுந்தவளாய்ப் பெரிய ஊர்களையும் சிறிய ஊர்களையும் ஆரவாரத்தை உண்டாக்குவாள் போல மோரோடே வந்தவள் அழகை நெஞ்சே காண்பாயாக. இவள்தான் மிக்க வனப்புடைய மகளிர் எல்லாரோடுந் தன் அழகு ஒவ்வாமை சொல்லப் பட்டவள்.

பக்கமேந்தின அகன்ற அல்குலையுடைய இவ்வாயர் மகள், சுற்றத்தார் தொடுத்து வந்து மயிர் முடியின் ஒரு புறத்தே செருகிவைத்த கண்ணியைச் சுமக்கமாட்டாதவளாவள். அவள், மனதில் காமவேட்கையில்லாத (இருடிகளுக்கும்) புண்பட்டு நெஞ்சு வருந்தும்படி பார்ப்பள். அதுவல்லாது மெய்ம்முழுவதும் கண்ணுடையவளாவள். (கண் செய்யும் வருத்தம்போல மெய்ம்முழுவதும் வருத்தஞ் செய்தலின் இவ்வாறு கூறப்பட்டது.)

இவள் பல நிற நெல்லுடைய கூடையை ஒரு கையால் அணைப்பாள்; அணைத்து மற்றத் தோளை இளமைச் செருக்குத் தோன்றத், தன் அழகுக்கேற்றதல்லாத சுமையையுடையளாய் நடப்பாள். கழுத்திற்பூண்ட வற்றாலும் மகரக்குழை ஆடுதலாலும உண்டான அழகையுடையள். (முலையும் தோளும் சுமந்து இளைத்த) இடை நுண்ணிதாய் நன்ருய்த் தோன்றும்.

இடை தெரியாத உருப்பசியும் திலோத்தமையும் தம்முடைய தம்முடைய அழகை எல்லாம் இவட்குக் கொடுத்தார்களோ? அவள் தெய்வத்திற்குப் பலியாகச் சமைக்கும் பாலோடு காமன் கோயிலிலே செல்லின் அக்காமனும் நெஞ்சழிந்து தன் கையிற் படையைப் போடுவான்.

இவ்வூரிற் பெண்டிரெல்லாம் இவள் நோக்கினுர் எல்லாருக்கும வருத்தம் செய்வள் என்று கருதுவர். கருதி "மோருக்குப் பதில் மாங்காயை நல்ல ஊறுகாயாகக் கூட்டி உண்பேம். நீ, எவ்விடத்தும்போய் அம்மோர் முதலியன விற்றுத் திரியும் நின் சுற்றத்தாருடனே போவாயாக" என்று கூறித் தம்முடைய கணவரை வெளியே போகாமற் காப்பர். காத்து இவள் வரும் நேரமே யல்லாமல் ஒரு நாள் முழுதும் வாயிலை அடைத்திருப்பர். இவள் மனம் வருந்தும்படி நோய் செய்து போவதன்றி அந்நோய் தீர்க்கும் மருந்தல்லள்.

## 10

**வெண்ணெய் விற்கச் சென்ற தலைவியைத் தலைவன் கண்டு மெய்தொட்டுத் தனது ஆற்றாமையை அறிவித்த விடத்து ஈண்டு பிறர் அறிவர் நாளை கன்றோடு வருவேன் என இடங் கூறுகின்றாள் ;**

*ஏடா! வேலியுடைய பெரிய குறுங்காட்டிடத்தே இருக்கின்ற ஆட்டிடையருடைய குடிதோறுமுள்ள மகளிரை விரும்பா நின்றாய். நினது காமவேட்கை தேள் கொட்டிய கடுப்பாற உடனே இட்டுத் தீர்க்கும மருந்து போல, வேட்கை தோன்றியபோதே கூடித் தீர்க்க வேண்டியதொன்றோ? அல்லவே! யான் நின்னோடு ஓர் நகை செய்தலின் நீ என் மெய்யைத் தீண்டினாய். அவ்வாறு நீ தீண்ட மெய்யைத் தந்தமையின், அப்பொழுதே யாம் புணர்ச்சிக்கு எளியேமென்று மனத்தாற் கருதினாய். அங்ஙனங்கண்டது, மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரை வார்த்து எளியளானவள், வெண்ணெயை வேண்டினார்க்கு வெண்ணெயை இட்டு எளியளாயிருப் பள் என்று நெஞ்சாலே கருதினாற்போல் இருந்தது. (வெண்ணெயை வேண்டினார்க்குக் கொடாள் என்றவாறு.)*

**தலைவன் :—** *ஒள்ளிய நெற்றியையுடையாய்! அங்ஙனம் கூட்டத்தைமறுத்துக் கூறுவையாயின் அக்கூட்டம் இல்லை யாவதாக; விட்டு நீங்குவாயாக. மெல்லிய இயல்புடைய ஆய்ச்சாதியிற் பிறந்தவள்* மத்தைச் சுற்றிய கயிறுபோல, *என்னுடைய நெஞ்சு நின்னுடைய நலத்தைச் சூழ்ந்து கொண்டு சுழன்று திரிகின்றது. நீ கூறிய கூற்றினால் எனது மனம் அஞ்சும். அதனால் உன்னிடத்தினின்றும் திரும்பித் தான் நிற்கமாட்டாமல் அசைந்து என்னிடத்தி னின்றும் புறப்பட்டு நாள்தோறும் தடுமாறா நிற்கும்.*

*முதல் ஈற்று ஈன்றபசு, இல்லத்திற்குச் சமீபத்தில் இடப்பட்ட வளைந்ததொழுவிற் கட்டிவைத்த கன்றை*

நினைந்து விடியற்காலத்தும் மேயப்போகாது சூழ்ந்து திரியும். அந்நாகுபோல் உன்னைக் கண்டு என் நெஞ்சு நாள்தோறும் நடுங்குகின்ற வருத்தத்தை, உற்று அறிவாயாக.

என்னிடத்து எந்நாளும் வருத்தம் மிகும. அதனால் இரங்கத்தக்க எனது உயிர், மருந்தைப்போட்டு நெய்யைக் கடைந்து வாங்கின பால் நுகர்வார்க்குப் பயன்படாதது போலாகிவிட்டது இதைவிட வேறொன்றையும் செய்ய அறியேன்.

தலைவி :—நீ அத்தன்மையை யுடையையோ? பலருந் திரிகின்ற மன்றத்தே எதிர்ப்பட்டாய். அப்போதே சான்றோர் மகளிராகிய உன்னையன்றி இவ்விடத்திற் புணர்ச்சியின்றாயின் உயிர் வாழேன் என்று கூறினாய். இவ்விடத்து நின்றால் எம்முடைய சுற்றத்தார் காண்பர். இனி இன்று மாத்திரமல்ல நாளையும் புலத்திலே கன்று மேய்த்தற்குப்போவேம். ஆண்டு வந்து இத்தன்மையன வற்றை மேலும் சொல்லுவாய். (நீ இவ்விடத்து நில்லாமற் போ.)

## 11

தலைவி ஆயத்திடைத் தலைவனைக் கண்டவாறும் அவனைக் கூடியவாறும் கூறித், தோழியைத் தலைவனை வரைவு கடாவி ஆய்க்கு அறத்தோடு நிற்கவேண்டுமெனக் கூறுகின்றாள் :

தோழி! இனிய பாலைக் கறந்த கலங்களை அவ்விடத்தினின்றும் எடுத்து வைத்தேன்; கன்றுகளை எல்லாம் தாம்பாற் கட்டி மனையிடத்து நிறுத்தினேன். ஆய்தந்த பூத்தொழிலும் கரையுமுடைய நீல ஆடை பக்கத்தே தாழ்ந்து நிற்க மெய்யை அசைத்துப் பாங்கர்க் கொடியும் முல்லைக் கொடியும் படர்ந்த தோட்டத்தே சென்றேன். அவ்விடத்தே ஆட்டினத்தையுடைய ஆயர்மகளிரோடு விளை

யாடா நின்றேன். அவ்விடத்தே குருந்தம் பூவாற்கட்டிய கண்ணியையுடைய ஒரு பொதுவன் வந்தான், அவன் என்னை நோக்கி, அணிகலன்களையும் அழகினையும் மடப் பத்தினையுமுடைய நல்லாய்! நீ கட்டிய சிற்றில்லை யானும் சிறிது அலங்கரிப்பேனோ என்றான்.

யான் ஏடா! வரைந்து கொண்டு நமக்கு ஒரு இல்லை அமைத்தல் அறியாய். தன் சுற்றத்தார் கட்டிய இல்லில் இவள் இருக்க யாம் பெற்றேமென்று நினைத்திருக்குமவன் நீ. ஆதலால் நீ, உறுதியாக உலகியலிற் கற்ற தொன்றும் இல்லைக்காணென்றேன். அதன் பின்பு அவன், கட்டின மாலையை, நினக்கு, முற்றின தாது சூழ்ந்த கூந்தலிலே அழகுபெறப்புனைவேனோ என்றான். யான் அதற்கு ஏடா! நீ வரைந்து கொண்டு விடாமற் கோதைபுனைதல் அறியா யாய், எஞ் சுற்றத்தார் கொண்டு வந்து சூட்டின பூவைப் பூவென்று கொள்ளுமவன் நீ. ஆதலால் உறுதியாகப் பெரி தும் பேதைத்தன்மையுடையை யென்றேன் ; அதன் பின்பு, ஆயிழாய்! அழகுதேமல் படர்ந்த மெல்லிய முலை மேலே தொய்யில் எழுதுங் குழம்பால் எழுதுவேனோ என்றான். யான் அதற்கு, நீ வரைந்து கொண்டு வெளியாக எழுது தல் நின்மனத்து இல்லை. யாம் எப்பொழுதும் எம் சுற்றத் தார் கோலஞ்செய்து எழுதுங்காலம் பொறுத் திருப் பேமோ? இனி இங்ஙனம் இருத்தல் ஆற்றேம். இங் ஙனங் கூறுதலின் நீ பெரிதும் மயக்கத்தை யுடையை. இங்ஙனம் அன்புள்ளார் போலக் கூறுகின்றாய். அவற் றைத் தவிர், என்று கூறினேன். தையலாய்! இன் னும் பின்னர் அவன் சொன்ன வற்றையெல்லாம் இங்ஙனம் மாறாய்மாறாய்யான் மறுத்தேன். அவன் இனிக்களவு நிகழா தென்று வருந்தினான் போலமீண்டு போயினான். அவனுக்கு நீ, ஆயர்மகளிரைவரைந்து கொள்ளும் இலக்கணத்தை அறிவி. பின்னர் என்னுடைய தந்தையும் தாயும் இக்கள வொழுக்கம் அறியும்படி அறத்தொடு நிற்கும் முறைமை

யால் உரைப்பாய். அதனால் அவன் உற்ற நோயன்றி யானுற்ற நோயையும் மிகப் போக்குவை.

## 12

**தலைவியை வழியிடத்துக் கண்டு தலைவன் தடுத்து நகையாடினன். இருவரும சில மொழிகூறிய விடத்து அவள் கூட்டத்திற்கு உடன் படுகின்றாள் :**

*என்னைத் தடுப்பவனாகிய இவன் எமக்கு என்ன உறவுடையன். நீரில் அசைகின்ற அழகிய தாமரைப் பூவை எமக்கு விளையாடத் தந்தவனே! பல மலர்களைக் கலந்து கட்டிய மாலையணிந்த உனது வடிவு தமது தொழிலையன்றிக் கல்லாத இடையர் வடிவோடு மாறுபட்டது. எம்முடைய சுற்றத்தார் இவ்வொழுக்கம் அறிந்தாரைப் போல நின்னோடு சில சொல்லுதலைப் பாதுகாத்துக் கொள். ஆதலால் நீ இங்கு நில்லாது போ.*

**தலைவன் :**—*ஏடீ! செலுத்திய கண்ணால் மனத்தைக் கலக்கின, காம நோயை உண்டாக்கும் கருமபு எழுதின தோளினையுடைய மகளிரைக் கண்டாயாயிற் போக விடாதே; அவர் செய்த நோயை அவரைக்கொண்டே, பரிகரித்துக்கொள் என்று எம்முடைய சுற்றததார் கூறினர்.*

**தலைவி :**—*அங்ஙனம் பரிகரித்துக் கொள்ளென்று கூறினவர்கள், அதுவல்லாமல் நல்ல மகளிரைக் கண்டாயாயிற் போகாமற்றடுத்து, விரும்பி அவருடைய பூப்போன்ற கண்ணையும், புகழப்படும் தோளையும் பாடும்படி நல்லதொரு தொழில் கற்பித்தார்! எமது சுற்றத்தார் வரைவு நேர்தற்கு, நும்சுற்றத்தார் செய்த செயல் மிகவும் வல்லமையுடையதாயிருந்தது.*

**தலைவன் :**—*ஓ ஓ! வெயில் வெம்மையால் ஒருவரும் திரியாத உச்சிக் காலத்தே நீ, கன்று மேய்ப்பார் போலப் பிறர்க்கு நோய் செய்து திரிகின்றாய். இத்தன்மையை*

அறிந்திருக்கின்ற என் சுற்றத்தவர்கள் இப்படித் திரிகின்று ளென்று எனக்கு உரையாதிருப்பராயின் அவர் எம்மை இகழ்ந்தவர்களாவர்.

தலைவி :—ஏடா! நீ கூறியது ஒக்கும். இனி இக் கூற்றைக் கை விடு.

தலைவன் :—யான் நின்னை விடேன்! கரிய கூந்தலை யுடையாய்! யான் கூறிய கூற்றை நீ பொய்யாகக் கொண் டதென்ன? யான் பொய் கூறிற்றிலேன். நின் சுற்றத் தார் நின்னை என் முன்னே நின்று சில சொல்லுதலைப்பாது காத்துக் கொள்ளெனச் சொன்னமையன்றி அவனை நீ புல் லுதலைப் பாதுகாத்துக்கொள் என்ற வார்த்தையை அவர் உடையரோ? இல்லையன்றே! ஆதலால் நீ மெத்தென முயங்குவாய். அப்பொழுது யான் நின் கூரிய எயிற்றை உண்பேன்.

தலைவி :—இவன் கூறியது எத்தன்மையதோ? பொய் யன்று; பொதுவன் கூறிய கூற்றெல்லாம் மெய்யாயிருப்ப தோர் வார்த்தையாயின் அவனிடத்து மனை வாழ்க்கையிலே பட்டேமாகின்றேம். அன்றி அது பொய்யாயிற்றேல் இனிய மார்பிற் கமழ்கின்றமாலை வருத்தின நின் அழகிய இதழ் போலுங் கண்கள் பசலை நிறங்கொள்ளும். பெரிய தோள் கள் பின்னர் மெலியும். ஆயினும் நின் மேனி இப்பொழுது பெறுகின்ற அழகை உடையதாயிருக்கும்.

(மாலையாற் கண்ணைக் கசக்குதலின் மாலை வருத்திய கண் என்று கூறினர்.)

## 13

தலைவியை வழியிடத்திற் கண்டு தலைவன் தடுத்து அவ ளோடு சிறிது கூறியவிடத்து அவள் உடன்பட்டுக் கூறுகின் றாள் :

பெரிய மிருதுவான தோளும் சுழலுகின்ற கண்ணு முடைய அழகிய நல்லாளே! நீ எதிர்ப்பட்டதனால் வருத்து கின்ற நோய்க்கு உய்யும் வழியைக் கூறிப் பின்பு போ.

தலைவி:—ஏடா! உன்னை முன்பு கண்டு அறிந்தது மில் லாத என்னிடத்துப் பெரிய பித்தேறினாய்போல முன்னே நின்று தடுக்கின்ற நீ யார்?

தலைவன்:—மனந்தளர்கின்ற இயல்பினையுடையாய்! நீ என்னை அறிய விரும்பினால், யான் ஆட்டினத்தையுடைய பகைக்கு அஞ்சாத ஆயரானவருக்கு ஒரு மகனாயுள்ளேன்.

தலைவி:—அது மிகவும் ஒக்கும். நீ ஆட்டினத்தை யுடைய ஆயனாயின், எம்முடைய சுற்றத்தார் பசுவினத்தை யுடைய ஆயராவர்.

தலைவன்:—ஏடீ! இவ்வாறு சிறந்த நின்னோடு சில வார்த்தை கூறின் மிகக் குற்றமாமோ?

தலைவி:—இருவருக்கும ஒத்த குடியாயிற் பின்னைச் சில வார்த்தைகள் கூறிற் குற்றமென்? யான் நாளை வருதற்கு இப்பொழுது போகவிடு.

தலைவன்:—யான் விடேன். எனது வார்த்தையைக் கேட்டு என் நெஞ்சு எனக்கு ஏவல் செய்யுமாயின் உனது வார்த்தையைக் கேட்டு யான் விடமாட்டேன். மெல்லிய தன்மையுடையவளே! ஒரு காரியத்தின் நிமித்தம் உடன் பட்டு மனத்தால் உடன்படாதார் கூற்றுச் செவிக்கு மெத் தென்றிருத்தலை அறிவேன்.

தலைவி:—உன்னைக் கைகடந்து காதலைக்கொண்ட காமம் கலக்குதலால் என் நெஞ்சு எனக்கு ஏவல் செய் யாது எனச் சொல்லி நிற்கின்றாய். அயலவர் கூறிய பொய் வார்த்தையைத் தெளியும் தன்மை உனக்கு எங்ஙனம் உண் டாயிற்று?

தலைவன் :—தெரிந்த ஆபரணங்களையுடையாய்! நீ இப்போது கூறியதால் நீ முன்னர் 'விடு வருவேன்' என்றது உண்மை யென்று யான் தெளிந்தேன்!

யாம முல்லைப் பூவைக்குருந்தம் பூவோடே முடியிற் சூடிக் காட்டாற்றில் விளங்குகின்ற மணலுடைய குளிர்ந்த சோலையில அகன்ற பாறையில் தோழரோடு பலமுறையும் விளையாடினோம். இவ்வாறு விளையாடுதலாற் பகற்பொழுது போய் இராப்பொழுது வந்தது. அது வருதற்குமுன் போகாமற் றுமதித்ததால் நம்மைக் கோபித்தார்கள். அதனை அறியாது நீ இவ்வாறு காலங் கழிக்கின்றாய். பாம்பு சேர்கையினால் இடிக்கும இடியின் குரல்போல அதிரும் பொருகின்ற ஏறு, பல பசுவின் திரளுள்ளே நாகுடன் கூடி நின்றது. அதுபோல நாமும் கூடிச் சேரப்போதற்குக் கூட்டத்துக்கு உடன்படுவாயாக.

## 14

பிறர் வரைவு மறுத்துத் தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள் :

தோழி! புதிய மலர்களைச் சூடி என்பெயரைக் கூறிப் பெண்பிள்ளைக் கலியாணஞ் செய்வாரைக் கண்டு என் சுற்றார்,* (எனது காதலனை) பின்னி முதுகிலே தூங்கும்படி விடப்பட்ட மயிரையுடைய சிறிய புதல்வன் அழுதனன் என்று எண்ணுவரோ? அப்படி அவர்கள் கூறுவார்களாயின் நீ அவனிடத்தே சென்று அக்கலியாணம் உன்னை விட்டு நீங்காதாக, அது நின்னிடத்தே ஆம்படி வரைந்து கொள்ளும் மதியை அறியாத ஏழைத் தன்மையுடையை, என்று கூறிக் கைத்துவர்.

[அழுதல் தான் வரைய வில்லையே என்று]

தோழி :—அவனிடத்துச் சென்று அவன் நிலையை அறிவேன். அவனுக்குக் கூறவேண்டியவற்றை இனிச் சொல்லுவாயாக

தலைவி : மடவாய்! அவனிடத்தே சென்று எடா! (நின்குரவரை நோக்கி இவ்வதுவை எனக்காக வேண்டுமென்று) சொல்லும் சொல்லறியாப்பேதையாயினை. அதனால் இவ்வதுவை நினக்குரித்தன்றி அகலினும் அகலும். அவ்வாருமாறு தானும் நீட்டியாது. ஆதலால் அவ்வது நினக்கு வருவதாகக் காண்பாய். இவ்வாறு வரையும்படி கூறும் சொல்லையும் அவன் மனம் கொள்ளும்படி சொல்லு.

அறல் ஒழுகும் மணலுடைய துறையின் முன்னே சிற்றில் இழைத்து விளையாடிய அழகிய நெற்றியுடைய ஆயத்தார் நடுவில் நின்று யான் தனியே நீங்கினேனாக, அவன் புணர்ந்த ஒருமணத்தை நம்முடைய நெஞ்சுதான் அறியும்.

அங்ஙனம் அறிந்திருக்கவும், கொண்டு வந்து குவித்த மணலைத் தங்கப் பரப்பி இல்லைச் செம்மண்ணைப் பூசித், தெய்வமாக வைத்த எருமையாகிய நாகின் கொம்போடே எம்முடைய சுற்றத்தார் இவ்விடத்து நடத்தும் பெண் பிள்ளைக் கலியாணம் அவனையன்றி வேறு சிலரிடத்தே தங்கும். அதனால் இருமணம் உண்டாகா நின்றது. பரந்த திரை விரிகின்ற கடலை உடுக்கையாகவுடைய உலகத்தைப் பெறினும், அரியநெறியுடைய ஆயர் மகளிர்க்கு இவ்விரு மணம் உண்டாதல் குடிப்பிறப்புக்கு இயல்பன்று என்று யான் வருந்துவதைக் கைவிட்டிருக்கவோ? (கை விட்டிருக்கிற் குடிப்பழுதுமாய்க் கற்பும் நீங்குமென்றவாறு.)

## 15

தலைவி களவு வெளிப்பட்டதென்று அஞ்சித் தோழிக்குச் சொல்ல, அவள் எம் சுற்றத்தவர் நின்னை அவர்க்கே கொடுக்க எண்ணினர் எனச் சொல்லி அச்சம் நீக்குகின்றாள் :

மெல்லிய இயல்பினையுடையாய்! ஆட்டினத்தையுடைய எமது ஆயர் மகன் சூடி வந்த ஒரு முல்லைமாலையையும் அதனாற் செய்த கண்ணியையும் கூந்தலில் வைத்து முடிந்தேன். தந்தை முதலியோர் இல்லிலே இருக்கச் செவிலித்

தாய் வெண்ணெய் தேய்க்க எனது கூந்தலை விரித்தாள். எனது நற்றாயும் நாணும்படி அப்பூ அவள் முன்பு விழுந்தது. பிறர் காணாமற் கள்ளுண்பார், களிப்பு மெய்யிடத்துத் தோன்றி மிகுதலால் பின்பு நாணாது சென்று அக் கடுங் கள்ளை உண்பர். அதுபோல நாம் கரந்த களவொழுக்கமுங் கையோடே பிடித்துக் கொள்ளப்பட்டேம்.

பின்னர் அப்பூவை இது எப்படி? என்ன? என்று கேளாமலும் கோபியாதும், நெருப்பைத் தொட்டவர்கள் தம் கையை உதறுவதுபோல் கையை உதறி வெளியே சென்றாள். அவள் போனபின்பு யான் என்னுடைய மயிர்ச் சந்தனம் பூசி உலர்த்தின மயிரை முடிந்தேன். நிலத்திலே தாழ்ந்த பூந்தொழிலுடைய கரையினையுடைய நீல ஆடையைக் கையினாலே சிறிது ஏறத் தழுவிக்கொண்டு, அச்சத்தால் தளர்ந்து நடந்து பக்கத்தே கிடந்த செல்லுதற்கரிய காட்டிலே சென்று ஒளித்தேன்.

தோழி :—ஏடீ! அப் பூ விழுந்ததற்கு நீ ஏன் அஞ்சினாய்? நின் தலைவன் கண்ணியை நீ சூடினாயாயின் அதற்கேற்ப நம்முடைய சுற்றத்தாரும் நின்னை அவனுக்குக் கொடுக்க எண்ணினார். அதுவல்லாமல் பெரிய முற்றத்தே மணலைப் பரப்பித் திரையிட்டுக் கலியாணமும் இப்பொழுதே செய்வார்கள். பகலையன்றி இரவிலும் தமர் ஆராய்ந்த காரியம் அதுவேயாம். நீ அஞ்சாதே.

## 16

தலைவியை வழியிடத்தே கண்டு தடுத்த தலைவனோடு அவள் சில மொழி கூறிக் குறியிடங் கூறுகின்றாள்:

மனைப் பக்கத்திலுள்ளதும், பிறர் சேருதற்கரியதும் நாம் பயிர் செய்வது மாகியதோட்டத்தே கன்றோடு போகாநின்றேம். அவ்வாறு போகின்ற எமது கையிற் கயிற்றின் ஒரு தலைப்பைப் பிடித்து, முன்னால் ஒருவர் நின்று மறித்தது

போல விலக்கினாய். ஏடா! இவ்வாறு செய்தற்கு நீ என்ன பித்தேறினையோ? நீ என்னைப் போக விடு.

தலைவன் :—நான் நின்னைப் போகவிடேன். தன்னைத் தொடுதற்குச் செல்வோரை இடையே தடுத்து எதிரே விரைந்து செல்லும் வலிய நாகுபோலப் பார்த்துச் சினக்கின்றாய்.

தலைவி :—நீ இவ்விடத்தினின்றும் போ. தன் கன்றின் கிட்டச் சென்றவர்கள் மீது கோபங்கொள்ளும் ஈன்றணிமையுடைய பசுப்போல, நீ என்மேல் வந்ததைக் காணில் தறுகண்மையையுடைய ஆய் வந்து சீறுதலுமுண்டு. (அவ் வரவைப் பாதுகாத்துக்கொள்.)

தலைவன் :—நீ அருள்செய்து என்னைக் கூடுவாயானால், அவ்விடத்தே ஆய்வருகினும் வரட்டும், அயலார் வருகினும் வரட்டும், நின் தந்தை வருகினும் வரட்டும்; எதற்கும்யான் அஞ்சேன்.

தலைவி :—உனக்கு யான் இவ்வகையாகச் சொன்ன வார்த்தைகளைப் பேணாது, கூட்டத்தை நினைந்து, மிக்க மழையில் நனைந்த ஏறுபோல் தலையைச் சாய்த்து யான் கூறியதற்கு எதிர் வார்த்தை கூறி மயக்கமுறுகின்றவனே! நாணமில்லாதவனே! கறவைக் கலத்தோடே யாம் செல்லும் பசு மேய்க்கின்ற இடத்தையும் நாடி என் தமையன்மார் நிற்கும் புலத்தினும் வந்தாய். (ஆண்டுக் கூடுதும் எனக்குறியிடங் கூறினாள்.)

17

வழியிடத்தே தலைவன் தலைவியை நின் கையிடத்திருப்பது யாது என வினாவிச் சேருகின்றான் :

உருக்கி ஓட வைத்த பொன்னில் நீல மணியை அழுத்தி ஒப்பமிட்டாற்போன்ற கரிய நிறமுடையவளே! முதிராத கோங்கினது இளைய முகை ஒப்பத் தோன்றின தொய்யிலெழுதின வனமுலையுடையாய்! உன் கையிடத்திருப்பது யாது?

தலைவி :—யான் இச்சேரியிலிருக்கும் இடையர் மகள். என் கையில் இருப்பது காதலை யுடைய புலைத்திவிற்பதற்கு முடைந்த பெட்டி. அது பனங்குருத்தை வார்ந்து இழைக்கப்பட்டது.

தலைவன் :—காட்சிக்கினியவளே ! இப்பெட்டிக்குள் என்ன பண்டங்களுள ? அவற்றை எனக்குக் காட்டு.

தலைவி :—பூவிதழ் நிறைந்த கூந்தலையுடைய என் தோழி ஆயத்தாருடன் காட்டிற் பறித்த சிறு முல்லை இவை.

தலைவன் :—முடிகூடின மயிரினையுடையாய் ! நான் தனியே இவ்விடத்தே கண்ட இவை முல்லைப்பூவாயின், இவற்றைத் தொடுத்து முடிந்து நாம் கூடுதற்குப் பொழுதாயின், உனது நினைவு செல்வதில் ஆயின், யான் போவென்று விடுவேன். உன்னைப்போகவிடாது எனது அறிவு இளைத்திருக்கின்றது (இனிக் கூட்டத்துக்கு உடன்பட நில் என்றவாறு.)

குறிப்பு :—இங்கு முல்லைத் திணைக்குரியனவாக வந்துள்ள செய்யுட்கள் பதினேழும் புணர்தலும் புணர்தல் நிமித்தமு மாகிய உரிப்பொருள் பெற்றுள்ளன. இவற்றை முல்லையிற் குறிஞ்சி வருதற்குரிய செய்யுட்களாகக் கொள்ளலாம்.

ஒரு காலத்தில் ஒவ்வொரு திணைக்கென்று பாடல்கள் செய்யப்படாமல் ஒவ்வொரு நிலத்துக்கும் எல்லா உரிப்பொருள்கள் வரவும் செய்யுட்கள் புனையப்பட்டன போலும்.

முல்லைக்கலி முற்றும்.

# ஐந்தாவது

## நெய்தற்கலி : நெய்தற்றிணை

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்படும். மக்கள் கடல் ஓரங்களில் வாழத் தொடங்கிய காலத்திற் கட்டு மரங்களிற் சென்று மீன் பிடிக்கும் தொழிலை மேற் கொண்டனர். கட்டுமரங்களுக்குத் திமில் என்று பெயர் ஆகவே கட்டு மரங்களிற் செல்லும் கடற்கரைமக்கள் திமிலர் எனப்பட்டனர். பரவை (கடலிற் செல் லுதலின் அவர்கள் பரவர் எனவும் படுவர். நூல்களிற் பரதவர் என்னும் பெயரே பயின்றிருக்கின்றது.

பரதவர் மீன் பிடித்தும் உப்பு விளைவித்தும், கருவாடு உப்பு முதலியவற்றைப் பிறநிலமக்களுக்குக் கொடுத்துப் பிற நிலங்களிற் கிடைக்கும் உணவுப் பொருள்களைப் பண்டமாற்றுச் செய்தும் வாழ்ந்தனர். உள் நாட்டுப் பண்டங்கள் கடலுக்கப்பாலுள்ள நாடுகளுக்கு அனுப்பும் பொருட்டுக் கடற்கரைக்குக் கொண்டு வரப்பட்டமையா லும், கடலுக்கு அப்பாலுள்ள நாடுகளின் பண்டங்கள் கடற்கரையிற் கொண்டுவந்து இறக்கப்பட்டமையாலும், கடற்கரைகளிற் பெரிய துறைமுகப் பட்டினங்கள் ஏற்பட் டன. அங்கு அரசாங்கத்துக்குரிய பண்டகசாலைகள் இருந் தன. பண்டங்களை வண்டிகளிலேற்றி உள்நாடுகளுக்குக் கொண்டு போவதற்கும், உள்நாட்டுப் பண்டங்களைத் துறைமுகங்களுக்குக் கொண்டு போதற்கும் ஏற்ற தெருக் கள் திறக்கப்பட்டிருந்தன.

புன்னைமர நிழலில் மீன்காய விட்டுக் கொண்டிருக் கும் நெய்தல் நிலமகளிருக்கும் மைந்தருக்கும் இடையில் நேரும் காதல் ஒழுக்கங்களைக் கூறுவதே இத்திணைக்குரிய பாடலாகும்.

நெய்தற்றிணைக்கு உரிப்பொருள்
இரங்கலும் இரங்கல் நிமித்தமும்.

பிரிந்த கணவர் பொழுது படும் நேரத்தில் வரப்பெறாத மகளிர், காதல் மிகுதியால் கடலையும், கடற்கரையையும் பொழுதையும் நோக்கிப் புலம்புவதாக இத்திணைக்குரிய பாடல்கள் பெரும்பாலும் வந்துள்ளன. குறிஞ்சித் திணைக் குரியனபோல புணர்தல் புணர்தல் நிமித்தங்களுக் குரியனவாகவும் செய்யுள்கள் வந்திருக்கின்றன.

நெய்தலுக்குச் சிறுபொழுது எற்பாடு. எற்பாடு என்பது பொழுதுபடும் நேரம். எற்பாடு என்பதற்குப் வெய்யில் படுகின்ற நேரமாகிய காலை எனச் சிவஞான முனிவர் பொருள் கொண்டார். அவர் யோகியராதலின் அகப் பொருட் பகுதிகளை ஆராய்ந்திலர்போலும்! அவர் கூற்றுப் பொருளன்று. நெய்தலுக்கு எற்பாடு சிறுபொழு தெனப் பட்டாலும் எற்பாட்டுக்குப் பின் வரும் மாலையும் உரித்தாக வைதனுச் செய்யுட்கள் புனையப்பட்டிருக் கின்றன.

1

பிரிவிடை யாற்றாத தலைவி மாலைப்போழுது கண்டு அதனோடு புலம்பித், தோழி கேட்ப அதனோடு புலக்கின்றாள்:

விளங்குகின்ற ஒழுக்கத்தால் வெற்றிப் புகழையுடைய அரசன், நீதி முறையில் பல்லுயிர்களைக் காப்பன். காத்துத் தீவினையால் உள்ள நடுக்கம் மனத்தில் இல்லையாம படி, தான் செய்த பழவினையின் பயனை நுகர்தற்குச் சுவர்க் கத்தை விரும்பிப் போவன். அதுபோல பல கதிர்களை யுடைய சூரியன், தனக்குப் பகையாகிய இருளைக் கெடுக்கும்; கெடுத்துப் பகலை உண்டாக்கி அத்தமன கிரியில் மறையும். அரசன் மறைதலின் அடங்காத கலக்கங்கொண்ட உலகத் தில் பின்பு அவ்வரசனுக்குப் பகைவனான அரசன் வந்து சிறிது அருள் செய்தல்போல சந்திரன் இருளைப் போக்கும்.

குடை நிழலின் கீழ் ஆண்ட அரசனுக்கும், இனி ஆளவரும் அரசனுக்கு மிடையில் நின்ற காலம்போல வந்துவிட்டமாலாய் !

நாம் வலிமை கெடும்படி நம்மைத் துறந்தவரை நினைக்கையில், நீர்நிலைகளிற் பூத்த பூக்கள்போல நின்னைக் கண்டு என் மனங் குவிந்தது. இவ்வகையான எனது அழகினையுடைய நலத்தை இகழ்கின்ற நீ, அழகிய சிறகுடைய வண்டு ஒலிப்ப முறுக்கு நெகிழ்ந்த கோட்டுப் பூப்போல மனம் நெகிழ்ந்து காதலரைக் கூடியிருக்கின்ற மகளிருடைய அழகைப் போக்கமாட்டாய்.

கோவலருடைய தனித்த குழலோசை தை என்னும் ஓசைபட ஒலிக்கும். அதைக் கேட்டுச் சோர்ந்த நெஞ்சுடையேமாகின்ற எமது பக்கத்தேநின்று நீ உயிரைக்கொள்ளாய். விநோதித்துப் பாராட்டுவாய். செவ்வழி என்னும் பண்ணுடைய யாழின் நரம்போசைபோலத் தங்கணவர் பிரியின் வருந்திக்கூறும் மொழியினையுடைய மகளிர் அக்கணவர் வருந்தின் கனவிலல்லாது நனவிற் புணர்ச்சியாற் பெற்ற புதிய அழகை நீ கடிய மாட்டாய்.

அழகு மிக்க தாழ்ந்த கொம்பர்களாகிய தமது இருப்பிடத்தே பேடுஞ் சேவலுமாகிய பறவைகள் சேர்ந்து ஆரவாரியா நிற்கும். இதனாலும் மற்றுமுள்ள பகைகளாலும் யாம் வருத்தம் மிக்க நெஞ்சத் தினையுடையேம் ஆவேம். இச்சிறுமைகளால் நாங்கள் இறந்து போகாதபடி பண்ணி நீ விநோதித்துப் பாராட்டுகின்றாய். நீ, அழகு மிக்க கூட்டத்தையுடைய மகளிரது, தாழ்ந்த நறிய முல்லைக்கொடியின் முகத்தை வண்டுகள் திறந்தாற்போல, ஆடவரால் திறக்கப்படும் முறுவலையும் கடியமாட்டாய்.(மகளிரது ஆடவரால் திறக்கப்படும் முறுவல் எனச் சேர்த்துக்கொள்க.)

நம்மைப் பிரிந்து நினையாத உள்ளத்தாலே மறந்திருந்தாரை உள்ளே உள்ளே உவந்து உள்ளும் நம்முடைய

நெஞ்சமும், இம்மாலையையும் ஊரார் கூறும் அலரையும் பொருதே நம்மை விட்டுப் போகா நின்றது.

2

பிரிவிடை, மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி, தோழிக்கு உரைக்கின்றாள் :

சூரியன் தன்னுடைய பல கிரணங்களைத் தனக்கு வாயாகக்கொண்டு அகன்ற உலகத்தை எவ்வுயிர்க்குந் தோற்றுவிக்கும்; அவ்வாறு தோற்றுவித்த பகற காலத்தை மீண்டும் அவ்வாயாலே விழுங்கினாற் போல அவற்றைச் சுருக்கிக்கொண்டு அத்தகிரியைச் சேரும். அதனால் போரின்கண் மிகுகின்ற சக்கரப் படையையுடைய திருமாலின் நிறம்போல இயல்பாகவுள்ள இருள் பரந்து வரா நின்றது. அதனைப் பொறாது தன் நிலவால் ஓட்டிப் புறங்காண்பாரைப்போலே அழகிய மதி தோன்றிற்று. அதனைக் கண்டு, கணவரைக் கூடித் துயிலைப் பெற்ற கண்கள்போலே திரண்ட தண்டுகளையுடைய தாமரை முதலியன குவிந்தன. தம் புகழ்களைக் கேட்ட சான்றோரைப் போலே மரங்கள் தலையைச் சாய்த்துத் துயின்றன. சிறிய புதர்கள் கணவரைப் பிரிந்திருக்கும் மகளிரை இகழ்ந்து சிரிப்பதுபோல முகைகளை அவிழ்த்து விளங்கின. சிறிய மூங்கிற் குழல்கள்போல வண்டுகள் ஆரவாரஞ் செய்து பாடின. புட்கள் தம் குஞ்சுகளை நினைத்துக் கூடுகளைச் சேர்ந்தன. பசுக்கள் தாம் தங்கும் ஊர்களிடத்திற் கன்றின்மேல் அமர்ந்த விருப்பத்தோடே தொழு நிறையும்படி புகுந்தன. மாக்கள் தாம் தங்குமிடத்தே சென்று தங்கின. அந்தணர் தாஞ் செய்யுந் தொழில்களைச் செய்து அந்திக் காலத்தை எதிர்கொண்டனர். மகளிர் செந்தீயால் உண்டான விளக்கை ஏற்றத் தொடங்கினர். இவ்வாறு விளக்கங்கொள்ளும்படி மாலை வந்தது. அதனை அறிவு கெட்டோர், அழகிய ஆபரண மணிந்த மகளிர் உயிரை,

அதனைப் பொதிந்து நின்ற உடலினின்றும் போக்கும் காலத்தினது இயல்பாவதறியாராய் மாலைக் காலம் என்று அதுவுமொரு காலமாகக் கூறு நிற்பர். (இவ்வாறு ஆற்றா ளாய் அவள் தோழிக்குக் கூறினள்)

## 3

பிரிவிடை யாற்றாத தலைவி, மாலைப்போழுது கண்டு கழிய ஆற்றாளாயின விடத்துத் தலைவன் வரவும், அவளது அகமலர்ச்சியைக் கண்டார் கூறுகின்றனர் :

அருள் இல்லாத அறிவுடையவன் அறஞ்செய்தல் இருமைக்கும் பயன் தரும் என்று கருதான். நல்லவற்றைச் செய்யான். எல்லாரும் அஞ்சும்படி தன்னுடைய நாளைப் பயன்படாமற் கழித்து மயங்கிய நெஞ்சுடையனுவன் அவன் நெஞ்சுபோல இருளாலே உலகம் நிறைந்தது. கணவரைப் பிரிந்தோர்க்குத் தனிமையாலுள்ள கவலை மேலிடும்படி செறிந்த சுடருடைய ஞாயிறு அத்தகிரியைச் சேர்ந்தது. இரத்தற் கஞ்சினவன் வலிமை கெட்டு ஒருவனை வேண்டியதுபோல மரமெல்லாம் பொலி வழிந்தன. இரப்பாரைக் கண்டு இருந்த விடத்தினின்றும் எழுந்திருந்து போய் மறைகின்றவன் நெஞ்சு பாராது குவியுமாறுபோல இலைகள் எல்லாம் குவிந்தன. இவ்வாறு வருகின்ற மாலாய்! நாலு திக்குஞ்சேர நடுக்கமுறும் ஊழி முடிவாகிய காலத்தே கூற்றுவன், விளக்கமமைந்த செக்கர் வானத்தே தோன்றின பிறையைத் தனக்கு எயிறாகக் கொள்வன். கொண்டு பல்லுயிரையுங் ஒருங்கே கொள்ளற்குச் சிரிப்பான். அது போல நீ தான் அச்சத்தைத் தரும் மாலையாயிருந்தாய்.

என் நெஞ்சைக் தம்மிடத்தே கொண்டு நீங்கினவர் எமக்குத் துணையில்லாதவராயினர். அக்காலத்திலே வெள்ளத்திலே அகப்பட்டுக் கரையேற மாட்டாத மானின் நெஞ்சைப் பார்த்து அம்பெய்யும் கொடியவனைப் போல

அல்லலிலே அழுந்தியிருக்கும் என்னை வருத்தஞ் செய்யும் படி நீ வந்தாயோ ?

நீ, அருளில்லாத காதலர் விட்டு நீங்கி அருளாதிருந்த காலத்தைப் பார்த்தும், போரிலே தோற்றவர்களை, அவர்கள் தோல்வியை இழந்து சிரிப்பாரைப்போலப், பொறுத்தற்கரிய வருத்தமுறற என்னை வருத்துவிக்க வந்தாயோ ?

நீ, எனக்கு ஆதரவாயுள்ளவர் என் வருத்தத்தைப் போக்காதகாலத்தே, முன்பே வெந்ததொரு புண்ணிலே, பின்பு ஒரு வேலைக்கொண்டு செருகுவாரைப்போலே, மெய்வெதும்புதற்குக் காரணமான காமநோயிலே அழுந்து கின்ற என்னை நினைந்து உள்ள அறிவையுங் கலங்குவிக்க வந்தாயோ ?

இவ்வாறு இவள் கூறும்படி ஆற்றுதற்கரிய கவலையைச் செய்யும் மாலைக் காலத்தில் வெறுப்புக்கொண்ட வருத்தந் தீரும்படி காதலர் விரைந்து வந்தார். அம்மாலை இராக்காலத்திற் சென்றொளித்தது. வருந்திய மெலிய அரசன் மீது வந்தபகை, விரைவில் நீங்கிச் செல்லாது காத்து நடத்தும் நல்ல அரசன் வந்த விடத்துக் கெட்டுப போனதுபோல இல்லையாக நின்றது, (என்று கண்டார் கூறினர்.)

## 4

இது, தலைவன் ஒரு வழிப் பிரிந்த விடத்துத் தலைவி ஆற்றுமை கூற் வரையக கருதிறைாயின் இஃது இட மேனச் சோல்லியது

ஒள்ளிய ஞாயிறு அத்த கிரியைச் சேர்ந்தாலும் சந்திரன் தன் ஒளியால் உலகெல்லாம் ஒளி பரப்பும் தன்மையது. அது கடற்பரப்பிற் றிரையை நீக்கித் தோன்றும் நுண்ணிய கதிரையுடையது. சந்திரனது அழகிய நிலா மிகுதலைச் செய்யும். பறவைகள் இரையை நிறையத் தின்று தாந் தங்கும் இடங்களைச் சேரும். நீலமணிபோன்ற பெரிய

கழி தன்னிடத்து ஆரவாரமடங்கிப் பூக்களும் குவிந்து துயில்கொள்வதைப்போல் இருக்கும். இவ்வகையான கழியுடைய கடலையுடைய சேர்ப்பனே !

நீ நின் நெஞ்சிற்றுங்குதற்கரிதா யிருந்த காமத்தை என்னிடத்தில் இட்டு வைத்துப் பிரிந்து, அதனைக் கைவிட்டாய். அதனால், துளியோடு தங்கின பூ நிற்கமாட்டாது நீருள் விழுந்து நீந்துவதுபோல், கண்ணீரில் கிடந்து நீந்தும் கண்ணையுடையவளுக்கு, அசைகின்ற கடலிலே எழுந்து முழங்குகின்ற திரை துணையாக நின்று ஆரவாரிக்கும்.

நீ ஈண்டு வாராமையால் அழகிய மேனியையுடையாள் இருந்து வருந்தினள். நீ அவளிடத்து வைத்த வேட்கையைக் கைவிடுதலால் அவள், உதிர்ந்து சிந்தும்படி இதழ்கள் உதிரும் வெண்காந்தள் போல இறையினின்றும் கழலும் வளையுடையளானாள். அவளுக்கு இராக்காலத்தே அசைந்து வருகின்ற காற்றுத் தான் துணையாகி நின்று வருத்தா நிற்கும்.

இனிய துணையாகிய இவளைக் கைவிட்டு இருப்பாய். ஆதலால், ஒள்ளிய கதிருடைய சூரியனின் மிகுந்த ஒளியாலே தன் ஒளி கெடுகின்ற உச்சிக்காலத்து மதிபோல அழகு கெட்ட முகத்தினை உடையவளுக்கு இராக்காலத்தே தன் சேவலைப் பிரிந்து வருந்தும் தனித்த கொக்குத்தான் துணையாக உசாவும்.

இனிய துறையிடத்தே எறிகின்ற திரை ஏறக் கொண்டு வந்து போடுகையினால் எக்கரிலே கிடந்த மீனை வருந்தாதபடி, மீள்கின்ற திரை அடித்துக்கொண்டுபோம். அத்தன்மைபோல நீ முன்பு நடத்தின ஒழுக்கத்தில் தாமதிப்பதினால் இவள் வருந்துகின்றவளானாள். பாய்கின்ற பரிபூட்டிய தேரோடு வந்து மணந்து கொள்ளின் துன்பம் நீங்குவதாகும்.

5

தலைவன் பிரிந்து தோன்முறை மனைவியரோடு புணர்ச்சி எய்தியிருந்தானாகத் தலைவியின் ஆற்றாமை கண்டு வினவிய தோழிக்கு அவள் கூறுகின்றாள் :

*தலைவி:—பூங்கோதைபோல நிரையாய் நின்று விளையாடும் ஆயத்தாரும் தாயும் அறியும்படி பூப்போன்ற கண்கள் அழகிழக்கும்படி, முன்னர் நம்மிடத்து மிக்க காதல் நிகழ்த்திப், பின்னர் ஒரு காரணமுமின்றி நம்மைத் துறந்தாரைச் சிறிது வெறுத்திருந்தனை, பின்னர் அவர் செய்த குறைகளை நூறு நூறாக அடுக்கிக் கூறினாய். அதுவுமல்லாமல் வருந்தி அழுதலையும் செய்தாய். ஆதலால் வருந்தியிருந்தாய் என்று சொல்லா நின்றாய் ; தோழி ! எனது வருத்தத்தைக் கேட்பாயாக.*

*மிக அழகினையும் காதலையுமுடைய மனைவியரோடு அவன் பொருந்தி நம் வருத்தத்தைப் பார்க்கும் குணம் இல்லாதவனாயிருப்பதை யான் அறிவேன். அறிந்திருப்பினும் அவன வந்து என்னை விரும்பிச் சிறிது அருள் செய்ய என்னுடைய நாணமில்லாத நெஞ்சம் என் வயத்தன்றி அவனிடத்தே நெகிழ்ந்து செல்லுதலையுங் கண்டிருப்பேன்.*

*இருள்போன்ற கரிய கூந்தலுடைய தொன்முறை மனைவியரோடு அவன் பொருந்தி நம் வருத்தத்தை தெளியும் குணமிலனாயிருப்பதை யான் அறிவேன். அறிந்திருப்பினும் அவன் ஒரு கால் அருள் செய்து சிறிதாக அளிக்க என்னுடைய மருளாகிய நெஞ்சம் அதற்கு மகிழ்தலையுங் கண்டிருப்பேன்.*

*ஒள்ளிய ஆபரணங்களையும் காதலையுமுடைய தொன்முறை மனைவியரோடு அவன் பொருந்தி அவன் நம்மை நினைக்கும் குணம் இலனாயிருத்தலை மிகவும் அறிவேன். அறிந்திருப்பினும் அவன் சிறிது புல்லி அளிக்க என்னு*

டைய வருத்தமுடைய நெஞ்சு வருத்தம் மீளாதாதலுங் கண்டிருப்பேன்.

ஆகையினாலே காம நோய் மிகுந்த நெஞ்சம், நடுயாமத்தில் நாம் கொள்ளும் துயிலை வாங்கிக்கொண்டு, பிரிந்தவர் இடத்திற் சென்று விட்டது. அவ்வாறாதலின் உயிர் வாழ்க்கையோ பிறர் மிகச்சிரித்தலையுடையது. (தோழி வரைவு கடாவுமாறு, தலைவி இவ்வாறு கூறினாள்.)

6

காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவி தலைவன் பாற் சென்ற நெஞ்சினை நோக்கி அழிந்து கூறுகின்றாள் :

கரிய கொம்பினையுடைய புன்னையின் சிறிய கொம்பரில் நறிய மலர்கள் விரியும் தருணம் பார்த்து நுகர்தற்கு வண்டினம் ஆரவாரிக்கும். இவ்வோசையோடே கரிய தும்பிகளும் ஒருங்கு இயைந்து ஊதும். இவ்விரு ஓசைகளுஞ் சேர்ந்து இம்மென இசைக்கும். யாராலும் பெறுதற்கரிய பொருளாகிய முறைமையினையிடைய திருமால், பாட்டோடு யாழையுங் கேட்டுப் பள்ளி கொள்வதுபோல இவ்வோசையைக் கேட்டுப் பெரிய கடலும் ஒலியவிந்து உறங்கும். இவ்வாறு வண்டு ஒலிக்கின்ற சோலையிடத்தே, நெஞ்சே! சென்றாய்.

அறியாமையுடைய நெஞ்சே! சோலையிடத்தே பொருள்களைக் கண்கள் காணாதபடி இருளைப்பரப்பி உயிர்கள் எல்லாம் ஓய்ந்திருக்கும் இருளிடத்தே ஒரு மருந்தாலும் ஆறாத காம நோயைச் செய்தவனிடத்தே போனாய். போன நீ அவனைக் கண்ணாற் கண்டாயோ ? காணாதிருந்தாயோ ? கூறு.

மடநெஞ்சே ! கொல்கின்ற ஆண்சுறாக்கூட்டம் சோலையிடத்திற் போகாமற்றடுக்கின்ற மயக்கத்தைத்தரும் மாலைக் காலத்தே வருத்தத்தைத் தரும் காம நோயைச் செய்தவனிடத்தே போனாய். போன நீ அவனை அணைய

என்கின்ற அவ்வளவு தானும் பெற்றேயோ? புல்லா திருந்தாயோ? கூறு.

மட நெஞ்சே! கடற்கரைச் சோலையிடத்தே பறவைத் திரள் தாந் தங்குமிடத்தே சென்று சேரும் மாலைக்காலத்தே முன்பு இறுகியிருந்த வளையலைத் தழரப் பண்ணினவனி டத்தே போனாய். போன நீ அவன் மனக்கருத்தை அறியும் அவ்வளவு தானும் பெற்றாயோ அதுதானும் அறியாதிருந் தாயோ?

இரங்கத்தக்க என் நெஞ்சே! பொறுத்தற்கரிய வருத் தஞ் செய்யும் காம நோயைத் தந்தவனிடத்தே துயிலைக் கை விட்டுப் பகலு மிரவும், கழியில் திரை போவதும் வருவதும் போல் நீயும் பல முறையாகச் சென்றும் வந்தும தடுமாறி அவனைப் பெறவிரும்பி வருந்தினாய்.

## 7

களவு வெளிப்பட்ட பின் வரையாது பொருள் வயிற் பிரிந்தவனைத் தோழி எதிர்ப்பட்டு நின்று தலைவியது ஆற்றா மைகூறி வரைவு கடாவுகின்றாள் :

எப்பொருட்கும் அடியாயிருக்கின்றவன் உலகம் மூன் றையும் தன்னடியால் அளந்தான். அவனது தமையனாகிய பல தேவன் நீல ஆடையை அழகு பெற உடுத்திருப்பான் அந்நீல உடைபோன்ற கடலின வெள்ளியதிரை இடுமணலி லிடத்தே வந்து சூழ்ந்து விளங்கும். இவ்வகையான கடற் கரையை உடையவனே!

காரிகை மனங்கலங்குதலால் அவளது பிறைபோன்ற நெற்றி பீர்க்கம் பூவின் நிறங்கொண்டது. இவ்வூரி லுள்ளார் அலரை ஆரவாரித்துக் கூறும்படி நீ இவளைக் கை விடுதலால் மிகுந்த வருத்தமுடைய காம நோயை எனக் குந் தெரியாமல் மறைத்தாள். ஆயினும் அவள் நுதல் அதைப் புலப்படுத்திற்று.

தோழியர் தோள்களிலும் அழகுபெற்ற இவள் தோள்கள் தம் இயற்கை அழகை இழந்தன. அவை நீ அணிதலாற் பெறுகின்ற செயற்கை அழகையும் இழந்தன. இவ்வூரினுள்ளார் தம்மிற் றம்மிற் கூடி அலர் தூற்றும்படி இவள் வருத்தத்தை நீ அறியாயாய் விட்டுப் பிரிந்தாய். அதனுல் உவமை கூற முடியாத வருத்தந்தரும் காமநோயை எனக்கும் மறைத்தாள். ஆனுல் தோள்கள் அதனைப் புலப்படுத்தாநின்றன.

வெற்றி வேலின் முனையை ஒத்த வெற்றியையுடைய அழகை இப்பொழுது நினைந்து கண்ணீர் உகும்படி நின்று அழுதாள். இன்று இவ்வூரிலுள்ளார் அலர் தூற்றும்படி இவள் வருத்தத்தை அறியாயாய் நீ விட்டுப் பிரிதலால் அவள் தன்னிடத்திற்றோன்றிய மிக்க நோயை எனக்கும் மறைத்தாள். ஆனுல கண்கள் புலப்படுத்தி விட்டன.

அலர்ந்த குளிர்ந்த மாலையணிந்த அகன்ற மார்பனே! இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தெய்வத்தாலே பிரியேனென்று தெளிவித்தாய். அவளும் அதனை உண்மையென்று துணிந்தாள். நீ பிரிதலின் கெட்டநலம் பண்டு போல நன்றாம்படி நின் நெஞ்சிலே புரி. புரிந்து பிடரி மயிருடைய குதிரை பூட்டிய தேரைச் செலுத்தி எம்மனையிடத்து வந்து அவளை வரைந்து கொள்.

## 8

வரைவு நீட ஆற்ருத தலைவியின் நிலைமையைத் தோழி கூறித் தலைவனை நெருங்கி வரைவு கடாவுகின்ருள் :

அறிவில்லாதவர்கள் இது செய்யலாகாதென்று தமது மனத்தைத் திருப்ப மாட்டார்கள். தாம் செய்வனவற்றை விலக்குவாரும், உலகத்திற் கண்டவர்களும் இல்லை என்று கருதித் தீவினைகளைச் செய்வர். தாஞ் செய்த தீவினைகளைப் பிறர் அறியாது மறைத்தார்களாயினும் தாம் புரிந்த

தீவினைக்கு அவர் நெஞ்சே சாட்சியாகும். ஆகையினாலே நல்ல குதிரையையுடைய செல்வனே! நின்னை யான் கடிந் துரைக்க வேண்டுவதில்லை. கடிந்துரைக்க வேண்டியது இல்லை என்று நன்குயறிந்தேனாயினும் உன்னிடத்திலுள்ள தாக நான் ஆராய்ந்து கண்டவற்றால் நீ என் தலைவி மாட்டு அன்புடையையல்லை என்று சொல்லி வந்து நின்னைக் கடிந் துரைப்பேன். ஐயனே! அதனைக் கேள்.

மகிழ்ச்சி தரும் இனியமொழியுடையவளுக்கு தொய்யில் எழுதிய இளைய முலைகள் தோன்றுகின்ற இளமைப் பருவததே நீ இவளைக் கூடினாய். அத்தொடர்ச்சியை இவள் கண்கள் தோற்றுவிக்கும் நீர்த்துளிகள் விழுந்து அறிவிக்கும். அக்கண்ணீர்த் துளிகளைக்கண்டும் அருள் செய்யாது விடுகின்றவனே! ஒலிக்கின்ற கடற்கரையை யுடைய தலைவனே! நீ மிகக் கொடியை காண்.

விளங்குகின்ற வளையுடையாள் அழகிய தழையை உடுத்து இளமைப் பருவமுடையளாய் விளங்கினாள். அப்பொழுது நீ வந்து இவளது உயர்ந்த அழகு மென்மேல் வளர்ந்து செல்லும்படி அருளினாய். அத்தொடர்ச்சியை அவள் மேனி வாடி நின்னை வெறுத்து அழா நின்றது. அதனைக் கண்டும் சேராது கைவிடுகின்றவனே! நீ மிகக் கொடியை.

இனிய ஓசை செய்யும் உள்ளிடுமணியுடைய சிலம் பணிந்தவளும், சிறு வார்த்தைகளையுடையவளுமாகிய என் தோழியின் மயிரைப் பின்னி முடிக்கின்ற இளமைப் பருவத்தே வந்து அவளை உறவு கொண்டாய். அவ்வுற வின்மை நீங்கும்படியும் அவள் மேனியின் நுண்ணிய அழகு வாடும்படியும், அவள் இடம் வாராமல் அவளைக் கை விடுகின்றவனே! தண்ணிய துறையை உடையவனே! நீ இனித்தகுதிப் பாடுண்டாக நடப்பாயாக.

பெருமா! யான் கூறிய அத்தன்மைகள் உடையவள் என்று கருதி அவளை அருள் செய்வாய். நீ இவளை மணந்

துவிடின், நின்னை இல்லாமல் முன் கையில் நில்லாமற் கழன்றவளையினையுடைய இவட்குப் பிறையை ஒத்த நெற்றியிற் தோன்றிய பசலை இனி ஒரு காலமும் வாராமல் மறையும்.

## 9

தலைவியது ஆற்றுமை கூறித் தோழி தலைவனை வரைவு, கடாவுகின்றாள்:

*சூரியன் பொன்னையுடைய அத்தகிரியிலே சென்று சேர்ந்து மறையும் அப்போது ஞாயிறின்றி வருந்தின உலகை நோக்கி உலகங் கொண்டாடும்படி பெருமையுடைய சந்திரன் தோன்றும். செக்கர்வானமுடைய அந்திக் காலத்தே,* முக்கோலையுடைய அந்தணர் இருந்து மந்திரங்களை நினைத்தல்போல, *நாரைக் கூட்டங்கள் ஆரவாரமின்றி இடுமண்மேல் இருக்கும். இவ்வாறு இலங்குகின்ற நீரையுடைய தலைவனே!*

*[அந்தணர் நிலத்தில் முக்கோலூன்றிக் காவி வேட்டியுடுத்தவர்களாயிருப்பார். நாரையின் சிறகு சிவந்திருத்தலாலும் மூக்கு நிலத்திற் சென்று குத்துதலாலும், நாரை அந்தணருக்குவமிக்கப் பட்டிருக்கின்றது.]*

*அழகிய சிறகுடைய கொக்குகள் இராக்காலத்து ஒலிக்குமிடத்து, அதனை நினது தேர் மணியின் ஓசை என்று இவள் துணிவாள். துணியும்போது அப்பறவைகள் ஓசை செய்யாதிருக்கும். பின்பு அதனைத் தேர் மணியின் ஓசை அன்று என்று காண்பள். அது கடற்கரைச் சோலையிடத்துப் பறவைகளின் ஓசைஎன உணர்ந்து தனிமையால் வருந்துவள.*

*நீருக்குமேல் உயர்ந்து நெருங்கின பூக்கள் நாறும். அதனை நின்மார்பிற் கிடந்த மாலையின் நாற்றமென்று இவள் துணிவள். துணிந்த அப்பொழுதே அப்பூக்கள் அலரும் சமயத்து அவற்றை அசைத்த காற்று வந்து அவள்*

மேற்படும். அதனால் அது கழியிடத்துப் பூத்த பூவின் மணமென்று உணர்ந்து பின்பு மயங்கி வருந்தா நிற்கும்.

உயர்ந்த மனையிடத்தே மனத்தை நிறுத்தமாட்டாளாய் நின்னை நினைந்து சிறிது துயின்றாள். அப்போது நீ தன் தோள்மேற் கிடந்தாயாகத் துணிந்தாள். துணிந்து மெய்யென்று கருதித் தழுவுமிடத்து உன் வடிவைக் காணாளாய் தான்கண்டது கனவென்று அறிந்து பின்பு கலங்கா நிற்பள்.

என் தோழி பலவற்றை நினைந்து நொந்த நெஞ்சாலே சுழன்று காம நோயில் அழுந்துவாள். அவளது மதியென்று மருளும் முகம் விளங்கும்படி நின் தேர் குதிரையைப் பூண்டு வருவதாக.

## 10

இதுவும் அது :

போரில் மிகுகின்ற சக்கரத்தையுடைய திருமாலின் தோளில் மாலை கிடக்கும். அம்மாலை போலக் கடற்கரையிற் கருமணலுடைய எக்கர்மீது விளங்குகின்ற கொத்தினையுடைய ஞாழற் பூவும், தேன் நாறுகின்ற புன்னைப் பூவும், தளை அவிழ்ந்த பூக்களையுடைய தாழம் பூவும், முறுக்கவிழ்ந்த செருந்திப் பூவும் விளங்கித் தோன்றும், வண்டுகள் சிறிது ஒலித்து ஆரவாரிக்கும். கரிய தும்பிகள் தேனை ஊதச் சூழ்ந்து கிடக்கும். இவ்வாறு விளங்குகின்ற நீரையுடைய தலைவனே!

கடிய பனி நீர் விழுவதுபோலக் கயல்போன்ற கண்களில் நீர் நிறைந்து வடியும்படி வருந்தி அழும்படி இவளை நீ துறந்தாய். அவ்வாறு துறத்தற்குக் காரணம், நின் மனம் நடுங்குதற்குக் காரணமான காம நோய் தீரும்படி (சுறவு முதலியன உடைமையால்) கொடிய கழி சூழ்ந்த குன்றுபோல் உயர்ந்த வெள்ளிய இடுமணலிடத்து நீ செய்த குறியிடத்தே தப்பாமல் வந்தாளென்பதோ ?

அறிவு வருத்தத்தில் அழுந்ினமையால் அவள் அழகு சிதைந்தது. அதனால் முன்பு இறுகியிருந்த வளை தோளினின்றும் கழன்று விழும். இவ்வாருகும்படி நீ அவளைத் துறந்தாய். நீ அவ்வாறு செய்தது, திரை ஒலிக்கின்ற கடற்கரையிலே உனது வேகமாய்ச் செல்லும் தேர், இன்ன காலத்தில் வரும் என்பதை அறியும் குறிப்பில்லாதவிடத்தும், அது வருங்காலத்தைப் பல நாளும் மனத்தால் நோக்கி எதிர் கொண்டாள் என்பதோ?

மூங்கிலினும் அழகிய இவளது தோள்களிற் கிடந்து விளங்குகின்ற பூண்களை அத்தோள்கள் பொறுக்கமாட்டாது மெலியவும், நெற்றி பசப்பூரவும் நீ இவளைத் துறந்தாய். நீ இவ்வாறு செய்தது, காண்டற்கினிதாகிய இக்குளிர்ந்த துறையிடத்து, நடுயாமத்தே நீ வந்து செய்த நின் வரவுணர்த்திய குறியிலே தப்பாமல் வந்தாளென்பதோ ?

வலிய நீரையுடைய கடற்கரைத் தலைவனே! உனக்குச் செய்ந்நன்றிக்கேடு உண்டாகும்; ஆகையினலே அது தீர வலிய ஞாயிறு சுடுமென்று கருதி உயர்ந்த திரை தன் கரையில் நெருங்கி வளரும் கடும்பை விரைந்து அருள் செய்தாற்போல, இவளுடைய முன் கையில் வளை கழன்று வருதற்குக் காரணமான வருத்தந்தரும் நோய் தீரும்படி அருள் செய்து வரைந்துகொள்.

## 11

வரைவிடை ஆற்ருளாய்ச் செல்கின்ற தலைவியின் அழகு கெடுதலைக்கண்டு வினவிய தோழிக்கு அவள், தான் கண்ட கனவு நிலை கூறுகின்ருள் :

வளைந்த தாழையின் அசைகின்ற கொம்பை வாடைக் காற்று அசைக்கும். அதன் மேல் அசைகின்ற நடையுடைய நாரை இருக்கும். இருந்து இராக்காலத்து நமது துயரை அறியாமல் நம் தோளைத் துறந்து நமக்கு அரு

ளாதவரைப்போல நின்று (காமநோயாலே) வருத்தமின் ருய்ச் சத்தமிடும். இவ்வகையினதாகிய சோலையையுடைய கடற்கரைத் தலைவனைக் கண்டு கூடினுய் போலப் புதிய ஓர் அழகினை உடையையாளு யென்று கூறுகின்ருய். வெளியாய் வராத உறவில்லாதவனை கனவிடத்தே கண்டு யான் செய்த காரியத்தை இப்பொழுது கேள் :

அக் கனவிடத்தே, நின்னைப்பிரிந்த இடத்து வருந்தி உயிர்வாழே னென்று கூறினவனைப் பிடித்துக்கொண்டு, நீ கொண்ட எனது நலத்தை இனித்தருவாய் என்று வளைத்துக் கொள்வேன்போல இருந்தது ; அவ்விடத்தே என்னுடைய கழிந்த அழகை யான் பெறும்படி தழுவிக் கூடி இனிவருந்தாதே யென்று கூறி என்னையும் அருள் செய்வான் போலவும் இருந்தது.

என்னை மறத்தல் மாத்திரமல்லாமல் பின்னர் முலை யிடத்திற் றுயிலும் துயிலையும் மறந்தாயென்று கூறிப் பழைய தன்மை கெட்ட நெஞ்சுடையேன் போலவும் இருந் தது ; அது கண்டு வலையிலே அகப்பட்ட மயில் போலக் கவலையிலே அகப்பட்டுப் பெரிதும் வருந்தினுயே யென்று கூறி, அடிமுன்னே தன்றலை யுறும்படி வணங்குவான் போலேயும் இருந்தது.

அங்ஙனம் வணங்கி நின்ற குளிர் காற்றுடைய கடற் கரையூரனை, மாலையைக் கோலாய்க் கொண்டு அடிப்பேன் போலவும், அவ்விடத்தே யான் செய்த தப்பு யாதென்று கூறி நடுங்கி நீ பெரிதும் அறியாமையுடையை என்று தெளிவிப்பான் போலேயும் இருந்தது.

தோழி! இவ்வாறு கனவிடத்தே கண்டேன்.அதனுலே என்னுடைய பெறுதற்கரிய உயிரை எனக்குத் தரும்படி அழகிய சோலையையுடைய தலைவன் கனவிலே வந்தான் போல மெய்யாக வந்து கூடுதலும் உண்டென்று கருதி,

அவன் அருளும் காலத்தை நோக்கி விரும்பி என் நெஞ்சு நின்றது.

## 12

தலைவி ஆற்ருளாயினவாறு தோழி தலைவற்குக் கூறுகின்ருள் :

பல உலகங்களில உயிர்கள் எல்லாம் பழைய ஊழிக் காலத்தே பிறந்திறந்து தடுமாறித்திரியும்படி முதல்வன் படைப்பான். அவன் ஊழி முடிவில் அவ்வுயிர்களை எல்லாம் தன்னிடத்தே ஒடுக்கிக் கொள்வான். அதுபோல ஞாயிறு பகற்பொழுதைத் தோற்றுவிக்கும் வெவ்விய கிரணங்களைத் தன்னிடத்தே மீட்டுக்கொண்டு மறையும். நீதி முறையே உலகை ஆண்ட அரசன் போக அநீதியை மேற்கொண்டிருந்து நீதியை உலகத்துக்கு நிறுத்தமாட்டாத குறுநில மன்னன் காலம்போல மயக்கமுடைய இருள் தோன்றும். பகலுக்கு எல்லையாயுள்ளதும், வருத்தம மிகுதற்குக் காரணமானதும் மயக்கத்தையுடையதுமாகிய மாலை தோன்ரு நின்றது. இம்மாலையம் பொழுதில்,

பரந்த திரை ஒலித்தல் மாருத பரந்த நீரையுடைய பனிக்கடலே! எம் வலி கெடும்படி தலைவன் துறந்தானென்று கூறி, அவனுல் உண்டான காமநோய் சுட அதனிடத்து அழுந்துவாரை வருத்தவேண்டி ஆரவாரிக்கின்றனையோ? அன்றி, முன்பு இனிய துணையாய்ப் பின்பு பிரிந்தாரை உடைய எம்மைப் போல நீயும் உடையையாய் வருந்துகின்ருயோ?

மன்றத்தில் நின்ற கரிய பனையின் மடலைச் சேர்ந்திருக்கும் அன்றிலே! நந்தலைவர் செய்த நன்மைகளை யான் இருந்து சொல்லுதலை அவர் கெடுத்துவிட்டாரென்று கலங்கிய என் வருத்தத்தை அறிந்தனையாய் மிகவும் வருந்த வேண்டி ஆரவாரிக்கின்றனையோ? அன்றி முன்பு இனிய

துணையாய்ப் பின் பிரிந்தாரை எம்மைப்போல நீயும் உடை யையாய் வருந்துகின்றனையோ ?

வருத்தத்தைத் தரும் அழகிய சிறு குழலே! இக்காலத்து வருவாராயின் அவர் செய்த பழி மிகவும் போகுமென்று கருதிப் பனியோடு கூடிய இருள் சூழ்தலாற், கலங்கியத் தனித்தவளுடைய வருத்தத்தைக் கண்டு நீயும் வருந்து கின்றாயோ ? அல்லது இனியவற்றைச் செய்து பின்பு நீங் கியவரை நீயும் உடையையோ ?

என்று இவ்வாறு சொல்லி நெஞ்சழிந்து, அயலார் அறிந்த வருத்தம் மேலிடுதலால பெரிய பித்தேறிய தன்மை யைப் பெற்றாள். பெரும! ஆதலின் அவளை வரைந்து கொண்டுபோவாய். அங்ஙனஞ் சொல்லுங்கால் உன்னை நுகர்ந்தவருடைய நெஞ்சம் அழியும்படி அவரைக் கை விடாதிரு. விடுவாயாயின், வருத்தத்தைப் போக்கும் மருந் தின் திறமையை அறிந்த ஒருவன் அம்மருந்தை அறியேன் என்று கூறி அம்மருந்தின் காரியத்தைக் கெடுக்கும் அதி லும் கொடியதாகும், என்று அவள் ஆற்றாமை கூறித் தோழி வரைவு கடாவினாள்.

## 13

பிரிவிடை ஆற்றாத தலைவியது ஆற்றாமை தலைவன் வந்து சார்தலின் நீங்கியது. அது கண்டு வாயில்கள் தம்முள்ளே கூறுகின்றன :

இவனாட்சியிற் றோன்றிய உறவும் உண்மை கூறலும் நன்மையாகிய நடுவு நிலைமையும் ஆகிய இவைகள் இவனுக்குப்பின் இல்லாமற் போயின என்று மக்கள் இரங் கும்படி பொய்யைக் கெடுத்து நன்மை உண்டாக ஓர் அர சன் நன்றாக ஆள்வன். அவனிடத்தே நல்லூழால் உண் டான செல்வம் அவனோடு கெட்டதுபோல நிரைத்த கதிரு டைய ஞாயிறு படுதலால் பகற்காலம் மறைந்தது. பின்பு வருத்தங்கொள்ளுதற்குக் காரணமான மருட்சியுடைய

மாலைக்காலம் வந்தது. ஒன்றையும் கல்லாமல் மூத்தவனது ஞானக் கண்ணில்லாத நெஞ்சு போலப் புல்லென்று இருள் பரக்கும்.

இம் மாலைக்காலத்து இருடிகள் (ஐயர்) விளங்குகின்ற அழலை ஆகுதிபண்ணி எழுப்புவர். எனது செயலற்ற நெஞ்சந்தானும் கொதித்து எனக்குக் காமத்தீயை கொளுத்தும்.

இம் மாலைக்கண்ணே, கரிய கழிகளிற் பெரிய மலர்கள் குவிய, என் நெஞ்சம் அவனை நினைந்து அழிந்து கூம்பும்.

இம் மாலைக்கண்ணே கோவலருடைய இனிய குழலாலே நெஞ்சு வருந்தும் ; எனது பூவின் அழகுடைய கண்கள் தனிமையைக் கொண்டு வருந்தும் என்று சொல்லி, பொழுது படுகின்ற மாலையில் இவள் வருத்துகின்ற காம நோயில் அமிழ்ந்தி யிருப்பாள். அவளைப் பிரிந்தவர் வந்து தீண்டப் பசப்பு நீங்கிற்று. அத்தன்மை, குடிமக்களைப் பாதுகாத்துப் பின்னர் தன்னைக் காக்கின்ற பாண்டியனது அகன்ற படை செல்லச் செல்லப் பகைவர் நீங்கினார் போலிருந்தது.

## 14

வரைவு நீடத் தோழி ஆற்றாளாயினாள். "அவன்முன் அருமை செய்து அயர்த்தகாலத்து அவன் வரவினை யான் ஒர்ந்து உன்னைக கோண்டுசேன்று ஊசல் ஆடா நின்றேன். அப்பொழுது யான் தலைவனின் அன்பின்மையைக் கூற நீ அவன் அன்புடையன் என்று கூறினாய். அதனைக் கேட்டிருந்த தலைவன் வநது ஊசலை ஆட்டினான். அத்தன்மையுடையவன் இப்போது உன்னை வருந்தவிடாது வருத்த மறிந்து வரைந்து கோள்வன்" எனத் தோழி கூறித் தலைவியை ஆற்றுகின்றாள் :

பார்க்கும்போது அப்பார்வையாற் பிறர்க்கு வருத்தமுண்டாக்குவதும், சோடியாக மலர்ந்த பூவின் அழகு

போன்றதும், புகழத்தக்க அழகினையுடையதுமாகிய கண்ணினையுடையாய் !

கொல்லுகின்ற சினமுடைய சுறு, மீன் கூட்டங்களின் பகை போகும்படி அவற்றைத் தாக்கிக் கொல்லும். யாழ் அழகு பெறும்படி அச் சுறுவின் கொம்பாற் செய்த பலகையைக் கோத்தும், புறவிதழ் ஒடித்த நெய்தற்பூவை நெடிய நாரிலே தொடுத்தும் கட்டப்பெற்றிருக்கும். கையினாலே தடவி வாசிக்கும் அவ்வியாழின் ஓசைபோல வண்டின் கூட்டங்கள் ஆரவாரஞ்செய்து பாட,அதனைத் தாங்கமாட்டாது தாழையினது பூக்கள் தேன் துளிகளைச் சொட்டும். அத்தாழையின் விழுதைத் திரித்துக்கட்டிய ஊசலை நீ ஆடுவாய். அவ்வாறு ஆடின், நீரையுடைய பெரிய கடற்றெய்வத்தை நோக்கி உன்னைப் பிரியேன் என்று தெளிவித்து, உன்னுடைய அழகிய ஆபரண மணிந்த மிருதுவான தோளைக் கூடினவன் அருமை செய்து மறந்ததால் நினக்குண்டாகிய அரிய வருத்தத்தை, யான் அவனை எதிர்ப்பட்டுத் தீர்ப்பேன்போல இருக்கின்றது.

அதுகேட்டு ஊசலிடத்தே சென்ற தலைவியை அவள் நோக்கி, இளைய மடமான் பிணையின் நோக்கினையுடையவளே ! உன் விசாலித்த மிருதுவான தோளைக் கைவிட்டவனுடைய கொடுமைகளின் பகுதிகளைச் சொல்லிப் பாடி நீ ஏறின ஊசலை உயரச் செலுத்தி ஆட்ட நீ நெடுநேரம் ஆடுவாய்.

தலைவி அங்ஙனம் பாடாமையில் தோழி தலைவியை விளித்துத், தோழி ! கடற்கரைச் சோலையிடத்துக் கமழ்கின்ற ஞாழற் பூவின் நிறத்தை ஒப்ப நின்மேனி பசப்படைந்தது. அவ்வாறு பசப்படையச் செய்தவனுடைய துறையிடத்து ஒளியுடைய நிலாவைப்போல விளங்குகின்ற இடுமணலிருக்கும். அம்மணல் மீது ஓயாது ஓடும் நண்டுகள் இப்பொழுது நம்மைக் கண்டு தம் வளையிலே

புகுந்தன. அத்துறைவன் நமக்குச் செய்த கொடுமையை நினைந்து நம் முன் தாம் நிற்க நாணி அவை அவ்வாறு புகுந்தனவோ? அவ்வாறு நாணினவாயின் இராக்கால மெல்லாம் அவை நாணியிருக்கும்.

மழைபோல் நீண்ட கூந்தலையும், மதர்த்த அழகிய கண்ணையும், ஆழ்ந்த கடலிற் பிறந்த முத்தின் அழகை ஒத்த முறுவலினையும் உடையாய்! மாயாத நோயைச் செய்தவனது கொடுமையின் பகுதிகளைச் சொல்லி நாம் பாடும் மிக உயர்ந்த ஊசற் பாட்டில் ஒன்றை நீ பாடுவாய்.

துறைவன், நம்மேல் அன்புற்றுப் புணர்ந்த அன்று தானெழுதிய கரும்பின் அழகு கெடும்படி மென்றோளை மெலிவித்தான். அவனது துறையிடத்து இனிய துணையோடு கூடிய அன்றில், தன் துணைவனை நீங்கினவள் வருந்தினாளோ என்று கருதி இராக்காலத்தில் அழைக்கவில்லை. ஆகையினாலே தோழி! அவை நம் வருத்தத்தைப் பார்த்துத் தாமும் வருத்தமுற்றனபோல விருந்தன. ஆதலால் அவை இரவெல்லாம் நம் வருத்தத்தைப் பார்த்துத் தாமும் வருத்தமுற்றன.

**தலைவி:**—கரையை இடித்துத் தனக்காக்கிக்கொள்ளும் கொடிய கழியிடத்து நோக்கினார் கண்களைக் கவரும் பறவைகள் கூட்டமாக இருக்கும். அவை, திரை மோதுகையால் இறந்த புலால் நாற்றமுடைய மீனை இரையாகத் தின்னுமல்லாமல், தாம் ஒன்றன் உயிரைப் போக்கி உண்ணா. இவ்வகையான அருளுடைய துறைவனை, நாம் பாடுகின்ற ஊசற்பாட்டால் நீ அவரின் அன்பைப் பழித்துப் பாடினாய். இனி அவர் அன்பு தோன்ற ஒன்று பாடுவாய்.

அவன் துறை, மணம் நாறுகின்ற ஐம்பாலாய் முடிந்த கூந்தலை யுடையாரிடத்து உண்டாகிய ஊடலைக், கண்ட பொழுதே வளைந்து தீர்க்கும். திரண்ட இடுமணலாலே

காவிச் செடிகள் வருந்தும். பெரிய திரைகள் வந்து அம் மணலைக் கரைத்து அக்காவிச் செடிகளை அருள் செய்யும். ஆகவே அத்திரைகள் அருள்செய்தனவோ? செய்யா தனவோ. இரவெல்லாம் அருள் செய்தன. (என அருள் தோன்றக் கூறினாள்.)

இவ்வாறு அன்பைப் பழித்தும், அன்பு தோன்றவும் நீயும் யானும பாடச் சேர்ப்பன் பாட்டை மறைய நின்று கேட்டான். நீடிய வெண்மையுடைய கடற்கரையுடையவனையான் ஊசலை ஆட்டு என்றேனென்று அவன் கருதினான். கருதிப் பின்பு யான் என்று நீ மருளும்படி அவன் தேன் வணடு ஒலிக்கும் புன்னையைப் பொருந்தி நின்றான். பின்பு வந்து அவ்வூசலை ஆட்டினான். (ஆதலின் உன் மிகுந்த வருத்தத்தை அறிந்து வந்து வரைந்துகொள்வனெனக் கூறி அவளை ஆற்றுவித்தாள்.)

## 15

வரைவு நீடித்த விடத்துப் பகற் குறி வந்து நீங்குந் தலைவனைத் தோழி எதிர்ப்பட்டு, அவனை நாணம் நெஞ்சை அலைக்கும்படி வரைவு கடாவுகின்றாள் :

பாண்டியர், வீரமுரைசு கொடைமுரைசு, நியாய முரைசு எனமூன்று முரைசுடையர். அவரது படையின் நடுவே யானைகள் வரிசையாகக் கம்பங்களிற் கட்டி நிற்கும். அப்படையின் தோற்றம் போலப் பல வடிவினையுடைய புள்ளினங்கள் இரை தேடித் தின்று இருந்து இளைப் பாறும். அவை, கடலின் திரை வந்து பொரும்படி உயர்ந்த இடுமணலிடத்திற்றங்கும். இவ்வகையான இடுமணலுடையதும், தாஞ் சென்ற விடத்துத் தாம் போன காரியம் முடித்து வந்த மரக் கலங்கள் நிற்பது மாகிய கடலையுடைய துறைவனே!

இவள் பரந்த பசலை நிறத்தாற் பகற்பொழுதே எடுத்த விளக்குப்போல் ஒளி கெட்டாள். அவளின் மேனி மாந்தளிரை ஒக்கும் அழகை இழந்தது. நறிய புன்

னைச் சோலையிடத்தே இவளைப் புணர்ந்தபோது “நன்னு தால்! நீ, யான் பிரிவேனென்று அஞ்சாதே” என்று நீ தெளிவித்ததனுல் உள்ள பயனல்லவோ?

நெடுங்காலம் கழுவி மினுக்காத மணியை ஒத்த இவளது திரண்ட தோள்கள் அழகுவாடிக் கெட்டேன். அத்தோள்களின் நிரைத்த வளை கழன்றன. இது நீ நறிய சோலையிடத்தே அவளைக் கூடிய விடத்துச் “சில மொழியினையுடையாய்! நின்னை யான் பிரியேன்” என்று கூறியதன் பயனன்ருே?

அணிகலன்களைப் பொறுக்கமாட்டாத இடையின் தன்மையால், இவள் அணிகலன்களை அணியாது பூ மாறின கொடியை ஒத்தாள்.

அவள், மருந்தாற்றீராத காம நோயிலே அழுந்தியிருக்கின்ருள். அவளை நீ அடம்பங்கொடி பரந்த இடுமணலிலேகூடி விளையாடிப் புணர்ந்தபொழுது, “வளைந்த காதணியுடையவளே! யான் பிரியேன்” என நீ கூறியதை மெய்யென்று அவள் கொண்டதன் பயனன்ருே?

தனக்குத் துணைசெய்யும் என்று கருதித் தான் வழிபட்டதெய்வம் தன்னை வழிபட்டவருக்கு நெஞ்சழியும் நோய் செய்ததுபோலத், தனக்கு வலி என்று வழிபட்ட என்ருேழியை நீ செய்த பழி எங்குஞ் சென்று அலர் தூற்றும். அதனுல் உண்டான மிகுந்த நினைவால் அவளது கொடிய வருத்தம் நீங்குவது அரிதாகும். (என்று தோழி வரைவு கடாவினுள்.)

## 16

தோழி தெருளாத தலைவனைத் தெருட்டி வரைவு கடாயது:

பெரிய மலரையுடைய தாழை கரிய மலருடைய கழி முள்ளியாலும் தில்லையாலும் சூழப்பட்டுக் கடற்கரையிடத்துள்ள உயர்ந்த மணல் மேட்டின் மேல் நிற்கும். அம்

முடத் தாழையில், மிகுந்த சிறப்புடைய தக்கணமூர்த்தித் தேவர் தாமிருந்த ஆலமரத்தே, இருப்பதற்கு முன் தூக்கி வைத்த குண்டிகை போலப் பழந் தூங்கும். அத்தாழையின் அலர்ந்த பூக்களைப் போலக் கொக்குகள் அதன் மேற்றங்கும். இவ்வகையான துறையையுடையவனே! யான் கூறுகின்றதைக் கேள் :

இல்வாழ்க்கை நடத்துதல் என்று சொல்வது வறுமைப் பட்டவர்களுக்கு யாதானும் ஒன்றைக் கொடுத்தலையாகும். ஒன்றைப் பாதுகாத்தல் என்று சொல்லுவது கூடினரைப் பிரியாதிருத்தலை; அன்பு என்று சொல்லப்படுவது தன் சுற்றத்தைக் கெடாதிருத்தலை. அறிவு என்று சொல்லப்படுவது அறியாதார் தன்னைப் பார்த்துச் சொல்லும் சொல்லைப் பொறுத்தலை; ஒருவரோடு ஒருவர் உறவு என்று கூறப்படுவது கூறியதொன்றைத் தாம் மாறுதிருத்தலை; நிறை என்று சொல்லப்படுவது மறைந்தது ஒரு காரியம் பிறர் அறியாமல் ஒழுகுதலை; முறை என்று சொல்லப்படுவது நம்மவரென்று பாராது அவர் செய்த குறைக்கேற்ப அவர் உயிரைக் கொள்ளுதலை; பொறை என்பது பகைவரைக் காலம் வருமளவும் பொறுத்திருத்தலை.

அப்படியே அவ்வொழுக்கத்தை நீரே அறிந்து ஒழுகுவீராயின் அவ்வொழுக்கத்துக்கு ஏற்பது கூறுவேன்; கொண்க! என் தோழியது நெற்றியின் அழகை நுகர்ந்து அவளைக் கைவிட்டாய். அஃது இனிய பாலையுண்பவர்கள் பாலையுண்டு அதனைக் கொண்டிருக்கும் கலத்தைக் கவிழ்த்து விடுவது போல்வது. நின்னால் வருந்துகின்றவளின் துயரத்தை வரைந்து சென்று களைவாய். அங்ஙனங்களைதற்கு நின் தேர் குதிரையைப் பூண்பதாக.

## 17

பிரிவிடை மாலைப்பொழுது கண்டு இவ்வகைப் பட்டனவும் நமது இடுக்கண் கண்டு வருந்தின போன்றன; அவர் நமக்கு அருள்வரோ? என்று தலைவி சொல்லியபோது தலை

வன் புகுந்தான். அவ்வளவில் அவள் துன்பம் நீங்கினமை கண்டு வாயில்கள் தம்முள்ளே கூறுகின்றன :

அலர்ந்த மாலை அணிந்த அகன்ற மார்பையுடையவன் பகைத்து வந்த மல்லரின் வீரத்தைக் கெடுத்தான். அவன் பகைவர் எல்லாரும் ஒருமித்து வந்து கோபித்துத் தன்னை எதிர்த்ததினால், அவரை வருந்தி அவர் ஓடும்படி அவர்களின் கொல்லும் யானையின் அழகிய மத்தகத்திலே சக்கரப்படையை அழுத்தினான். அத்தன்மைபோல ஞாயிறு தன்கதிர்களை வாங்கிக்கொண்டு அத்தகிரியைச் சேர்ந்து மறைந்தது. பெரிய கடலில் திரை ஏறுகின்ற நீர் மிக்குக்கரையைச் சேரா நின்றது. கழியிடத்துப் பூக்களினின்றும் போன வண்டுகளாலே அழகழிந்த துறை, துயில் கொள்வது போன்றது. நீரில் உள்ள மலர்களெல்லாம கூம்பின. இவ்வுலகம் எல்லாம் அஞ்சும்படி தான் தோற்றுவித்த பெரிய நிலத்தைத் தன்னிடத்தே ஒடுக்கிக்கொள்ளும் தன்மைபோலப் பெரிய கடல் ஒலித்தது. இவ்வகையானதும், பிரிந்தோர்க்கு வருத்தம் மிகுதற்குக் காரணமான மயக்கத்தைத் தருவதுமாகிய மாலை நேரத்தில்,

எனக்கு நீங்காத காமநோயைச் செய்தவரைக் கண்ணுற் காணுமல் என்நெஞ்சு அவரையே நினைக்கும் : மாறுபாடுகளைத் தனக்கு இடமாகக் கொண்டு கொடுக்கும் பனிக்காலம் அறிவைத் தின்றுவிடும். அப்பொழுது பல நினைவு கொள்ளும் நெஞ்சுடையயான், கவலை கொண்ட நெஞ்சினேனுவேன். கடல் அதனைக்கண்டு என்னுடைய இவ்வருத்தம் தனது மெய்யிடத்திற் கொண்டதுபோலக் கூப்பிடுதற்குக் காரணம் என்னவோ ?

எனக்கு நடுங்குகின்ற காமநோயைச் செய்தவர் என்னை அருளாதபடியால் என் நெஞ்சு அவரை நினைக்கும். அதைக் கண்டு கடும் பனிக்காலம் மிகுந்து வரும்

அதனை யறிந்து யான் செய்தற்கரிய துன்பத்திலே அழுந்து வேன். அதனை மணற் குன்று நோக்கும்; நோக்கி நடுங்கும் துயரில் வருந்தும் என் அழகை இழந்த எனது நோய்க்குத் தான் கரைந்து தாழ்வதுபோல இரா நிற்கும். அதற்குக் காரணமென்னோ?

என்னை இறக்கச் செய்து என் துன்பத்தைப் போக்கா மல் என்னை வைத்து எனது நலத்தை உண்டவர் ஈண்டு வராமையினால் என் நெஞ்சு அவரை நினைக்கும். அது கண்டு பனிக்காலம் வருத்தும். அதனைக்கண்ட பொழுதே, செய்வது அறியாத வருத்தமுடையேனைக் கலக்கத்தில் அழுந்துவேன். அதனை நோக்கிய மரம் வருத்தத்தாற் செய்வதுபோல மயக்கங் கொண்ட நெஞ்சோடு இலைகளைக் குவித்தற்குக் காரணமென்னோ?

கரை காணாத நடுக்கடலிலே மரக்கலங் கெட்டு அழுந் தினவன் திரைகொண்டு வந்து தர ஒரு தெப்பத்தைப் பெற் றுத் தீதில்லையாய்ப் பிழைப்பன் அதுபோல இவள் காத லர் விரைந்து புகுதத் துன்பம் யாவும் விரைந்து போயிற்று. அதனைக் காணீர்,(என வாயில்கள் தம்முள்ளே கூறினர்.)

## 18

வரையாது வந்தொழுகுந் தலைவனைத் தோழி நெருங்கி வரைவு கடாவுகின்றாள் :

கோட்டை மதிலின் வேல் நெருங்கத் தைத்த கதவை மத்தியானத்திற் குத்தும் யானையைப்போல, இடு மணலின் சிகரத்தைத் தொடும்படி வீசும் திரை, வீசுகின்ற காற்றுப் பாகனைத், துணையைக் கூடி எழுகின்ற வலம்புரிச் சங்கு திரண்ட இரண்டு மருப்பாக மோதும்: இவ்வாறான துறையை யுடையவனே! கேள்.

வாசங் கமழும் மலருடைய புன்னையின் கீழ் நின்னைப் புணர்ந்ததினால் இவள் தன்னழகைத் தோற்றாள். அவளை

வளை கழல்கின்ற தோள் உடையளாய் விடா நின்றாய். அது உனது ஒழுக்கத்திற் பெரிய குற்றமாய்த்தங்காதோ ?

மலருடைய புன்னையின்கீழ் நின்னைப் புணர்ந்ததனால் தன் அழகிய நலத்தைத் தோற்றவளைக், காமநோய் மிகுந்த நிலையுடையளாகக் கைவிட்டாய் ; அது நின் மெய் கூறுதற் கண் பெரிய பொய்யாய்த் தங்காதோ ?

விளங்கும் மலருடைய புன்னையின்கீழ் நின்னைப் புணர்ந்ததனால் இவள் திருவின் நலம்போன்ற அழகைத் தோற்றாள். முன்பு இவள் கண்ணுக்குத் தோற்ற மலர்கள், இப்பொழுது இவள் கணணை இகழும்படி இவளைக் கை விட்டாய். இது நின்னைப் புகழ்ந்து கூறுந்தன்மை யிடத்துப் பெரிய குற்றமாயிராதோ ?

இவ்வாறு யான் சொல்வதைக்கேட்டு உட்கொண்டா யாயின், அழகிய நெடிய மாலையை வருத்தும் நின் மாணிக்கம் விளங்கும் முத்துவடத்தை பூமாலையோடு அசையும்படி அணிவாய். அணிந்து வந்து பெரு மூச்சுக்கொள்ளும் என் தோழி பொருட்டு ஓடுகின்ற ஒலியினையுடைய உயர்ந்த தேரை விரைந்து செலுத்துவாய் (எனவரைவு கடாவினாள்.)

## 19

பிரிவிடை வைத்துப் பிரியக்கருதிய தலைவனைத் தோழி, தலைவி ஆற்றாமை கூறிச் செலவு தடுத்து வரைவு கடாவு கின்றாள் :

ஊறுகின்ற நீரையுடைய இடுமணலிடத்து மீன் பிடிக் குந் திமிலையுடைய எறியும் திரைகள் திரண்டுவந்து அலைக் கும். அவ்விடுமணலிடத்து அலையினின்றும் புள்ளிகளு டைய நண்டு வெளியே வந்து விளையாடித் திரியும். அந் நண்டுகள் சூதாடுமிடத்தே வேட்கை தவிராது உருட்டும் சூதாடு காயை ஒக்கும். இவ்வாறு விரும்பத்தக்க அழகிய கடற்கரையை உடையவனே!

முத்தை ஒக்கும் மணலிடத்தே நீ கூடியபோது அவள் தாயக்காயை உருட்டி ஈரைந்தைப் பெற்றவனுடைய மனம் போல் மகிழ்ச்சி யுற்றிருந்தாள். நீ பிரிந்தபின் அவள் அழகு வாடிச் சூதிற் பொருளை இழந்தவனைபபோலக் கொடிய துயர் எய்தி வருந்தவோ ?

முடத்தாழையுடைய தாழை முடுக்குக்குள்ளே நீ கூடியபோது (சிறு தாயம் வேண்டியபோது) சிறு தாயம் விழக்கண்டவன் உள்ளம்போல் ஆக்கம் பெருகினள். சுற்றத்தார்க்குப் பொருளைக் கொடுத்து வரைந்துகொள்ளத் தக்கவனே! நீ முன்பே பொருளைத் தேடாது இப்பொழுது பொருள் வயிற் பிரிய ஆராய்ந்து பார்க்கின்ருய். அவ்வாருயின் சிறுதாயம் இடவேண்டுமளவில் இடாமல் பெருக இட்டு (முறை கேடாகச் சூதாடி) அதற்கென்று கட்டி வைத்த தன்னுடைய பொருளை இழந்த வனைப்போல மிக்க துயரில் அழுந்தவோ ?

நறிய பூவுடைய புன்னைக் கீழ் நீ விரும்பிக்கூட இருகாற் சிறுதாயமிட வேண்டியவன் அவ்வாறு இட்டான் போல் மனத்தில் ஆக்கம் பெருகியவளானுள். நீ பிரிந்து வந்து வரைவேனென்று அறிவித்துப் பிரியக்கருதினுய். நின் பொருட்டு அவள், இருகாற் சிறுதாயம் இடவேண்டியவன் ஒருகாற் சிறுதாயம் இட்டான்போல நெருங்கிய துயரில் அழுந்தவோ ?

நீ பலரும் தூற்றும் அலருக்கு அஞ்சாய்; பிரிதலைக் கைவிட்டு இவளை வரைந்து கொண்டு கூடுதற்கு அருள் செய்; அதற்காம் திறத்தை அறிந்து எழுந்திருந்து தேரை ஏறுவாயாக; அங்ஙனம் வரைந்தால் இவள் நலமும் வாடின வளாயிருப்பாள்; இருவரிடத்தும் சேரும் பொருள் இனிப் பெருகுவதாக (என்று கூறி வரைவு கடாவினுள்.)

## 20

வரைவு நீடித்தது. அதற்குத் தலைவி ஆற்ருளாயினள். அவள் ஆற்ருமையை அவள் மூலம் தோழி தலைவற்கு அறிவித்தாள. தலைவன் மறைவிடத்தே நிற்கத் தோழி, அவன் வரைவா ருதலை வலியுறுத்திக் கூறினாா அதற்கு அவள் அவ்வலியுறுத்தலுக்கு மாருகக் கூறுகின்ருள் :

*தோழி! நம்முடைய நாணை நம்மிடத்து நிறுத்துவே மென்று உணர்ந்திருத்தல் அரிது; அதற்குக் காரணம் வேட்கை பெரிதாயிருப்பது. அதனுல் உயிர் தேய்ந்து சிறிதாய் நிற்கின்றது. நமக்கு வருத்தத்தைத் தரும் யாமங் களும் பலவாயிருந்தன; அவ்வியாமங்களிற் றுயிலாதபடி துணையைப் பிரிந்து வருந்தி நம்மோடு உசாவும் அன்றில் களும் சில உளவாயிருந்தன; ஆதலால் உயிர் தாங்குத ரிது. முடிவில் அவர் நம்மோடு கூடப்பெற்றதால் பெற்ற பயன்யாது? பீலியுதிர்ந்த மயில போல அழகழிந்த நாணத் தால் நாம் நடுங்கப் படுக்கையிலே கிடந்து உடம்பு, நெருப் பிலே ஓடவைத்த பொன்னுற் செய்த சிலம்பு முதலியன ஒலிக்கும்படி நடுங்க நமக்குக் காமத் தீ உண்டாகியது ஒன்றுமே.*

*நம்முடைய நெஞ்சு அவர் நெஞ்சுபோல வலியுடைய தன்று. வலியில்லாத அந்நெஞ்சு வருத்தம் மிகும்படி நான் பிரியேன் என்று சொல்லால் வருத்தினுர். அவர் நம்மை செய்ய வல்லவனுற் பண்ணப்பட்ட அழகிய விசையுடைய வில்லினுல் எய்தாரல்லர். ஆயினும் ஆயிழாய்! அவர் தெளிவித்த சொல்லாற் பிறந்த நோய் மிகவும் வில்லினும் கொடிதாயிருந்தது.*

*நகுதல் முதலிய மெய்ப்பாடு காரணமாக நாங் கொண்ட நட்பிலே தோன்றிய தமது தகுதிப்பாடுகளால் அவர் நம்மை வருத்தினுர். அவ்வாறல்லாமல் வேறு காரண மாகத் தோன்றிய பகையினுல் வருத்துவாரல்லர். ஆயினும்*

ஆயிழாய்! அவர் தமது தகைமையினால் வருத்தும் நோய் பகைமையினால் வருத்தும் நோயிற்பெரிதாயிருக்கின்றது.

ஆயிழாய்! நம்முடைய நெஞ்சு அவர் நெஞ்சுபோல் வலியுடையதன்று. எனது வலியில்லாத நெஞ்சு வருத்தம் மிகும்படி அவர் 'உன்னைப் பிரியேன்' என்னும் சொல்லைக்கூறி என்னை வருத்தினார். அவர் வில்லைச் செய்ய வல்லவன் செய்த விசையுடைய வில்லினால் எய்து என்னை வருத்தினாரல்லர்; ஆயினும் அவர் சொல்லாற் பிறந்த நோய் வில்லினாற் செய்யும் நோயினும் மிகக் கடியதாயிருந்தது.

ஆயிழாய்! நகை முதலியன காரணமாக நாங் கொண்ட நட்பாகிய பெருந்தன்மைகளால் என்னை அவர் வருத்துவதல்லது, பல காரணங்களால் எழுந்த பழைய பகை காரணமாக என்னை வருத்தினாரல்லர். அவர் தகுதிப்பாட்டால் வருத்தும் நோய் பகையினாற் செய்யும் நோயிற் பெரிதாகின்றது.

ஆயிழாய்! 'நின்னைப்பிரியேன்' என்று சொல்லி, என்னைத் தனக்குண்டாகிய அன்பினாலே வயப்படுத்தினார். அவர் நம்மைத் தமது மென்மையாற் சுடுதலல்லாமல், பரந்த இருளை அகற்றும் நெடிய நெருப்பினாற் சுட்டாரல்லர். ஆனால் அவர் தனது மென்மையாற் சுடும் நோய் தீயினும் கடிதாகும்.

தோழி! நெஞ்சிற் தன்மையுடையவர் இயற்கைப் புணர்ச்சிக்காலத்தே நம்மிடத்திற் காதலுடையராய் விரும்பி நீங்குதல் அருமையுடையரா யிருந்தார். அவர் அன்று நம்மிடத்து நிறுத்தின நோயை யான் பொறுக்கத் துணிந்த துணிவை ஆராய்ந்து பார்க்கில், அத்துணிவு எப்படியும் என் உயிரைப் போக்கும்; அவர் நமக்கு உயிரைப் போக்காமல் திரும்பவும் மருத்துவராய் இருப்பாராயின் அந்நிலை எக்காலத்தே உண்டாவது. (இவ்வாறு

தலைவி, வலியுறுத்திக்கூறிய தோழியின் கூற்றை அழித்து மொழிந்தாள்).

## 21

மடலூர்ந்து தலைவியை எய்திய தலைவன் தான் மடலூர்ந்தவாறும், அவளை எய்தியவாறும், தனக்குப் பாங்காயினோர்க்குக் கூறுகின்றான்.

ஒருத்தி, மின்னல் விளக்கத்தின் அசைவும் கனவும் போலத் தன் வடிவைக்காட்டி என்னை முன்பு கூடினாள்; பின்னர் பிறர் என்னை இகழ்ந்து சிரிப்பனவற்றையும் எனக்குக் காட்டினாள். அதனால் எனது நெஞ்சம் என னோடு கூடிநில்லாதாயிற்று.

அழகிய மருப்புடைய யானை மதஞ்சொரிதலால் பாகனுக்குச் செய்யும் தொழிலைச் செய்யாது; தன்னை நினைத்தபடி செல்லவிடாது தடுக்கும் அங்குசத்தையும் மீறும். அதுபோல என மனமும் தானகொண்ட வேட்கை மிகுதியால் என் ஏவலைக் கேட்கத் தவிர்ந்தது. மனம், தான் வேண்டியவாறு ஒழுகாதபடி தன்னைக் காத்து நிற்கும் அறிவும், அறிவு ஆராய்ந்த அடக்கமும், இயல்பாகத் தோன்றிய நாணமும் இல்லையாகும்படி, கைகடக்கும்படி அவள் அதனைக் கைக்கொண்டாள்; கைக்கொண்டு தனது நலத்தைத் தான் காணாதபடி மறைத்தாள். அவளைக் கூடும் வழியாது என்று ஆராய்ந்து இனி மடவேறுதலே கூடும் வழி என்று கருதினேன். பனைமட்டையாற் செய்த குதிரைக்குச் சூட்டவேண்டி நிலமணிபோன்ற நிறமுடைய மயிலிறகையும் அழகிய பூளைப்பூவையும் ஆவிரம்பூவையும் எருக்கம்பூவோடே நூலாற் றொடுத்து அம்மடன் மாவிலே கட்டினேன். இவளைப் பாடும் பாட்டை எல்லீருங் கேட்பீராக என்று சொல்லிப் பாடத் தொடங்கினேன். அப்பாட்டாவது:

யான் காதலிக்கும் விளங்குகின்ற வளையுடையவள் எனக்குக் காதலித்துத் தந்தவை வருத்தமும், வருத்தத்தால் உண்டான பனையின்ற மடலாற் செய்த குதிரையுமாகும்.

அழகிய நெற்றியுடையவள், எனது உயிர் பொறுக்கும் எல்லையைக் கடக்கும்படி நிறை என்னுங் குணம் அழிதற்குக் காரணமான இவள் தந்த காம நோயை என் உயிர் நீந்தி, உப்புப்பாத்தியிற் கிடந்த உப்பாற் செய்த பாவை மழைத்துளிபட்டதுபோலக் கரைந்துவிட்டது.

மூங்கிலை வென்ற தோளையுடையவள் எனக்குத் தந்த பூக்கள் பூளைப்பூவும் பொன்போன்ற ஆவிரம் பூவுமாகும்.

ஒள்ளிய ஆபரணமணிந்தவள் என்னாற் பொறுக்கும் அளவில்லாத வருத்தத்தையுடைய காம நோயை எனக்குத் தந்தாள். என்னியல்பு அழிதற்குக் காரணமான அந் நோயில் என்னுயிர் அழுந்திக் கிடக்கின்றது. கொதி நெய் யுள்ளே கிடந்தமெழுகு மெத்தென உருகித் தேயுமாறு போல என்னுயிர் மெல்ல மெல்லத் தேயா நின்றது.

யானுற்ற காமநோய்க்கு, யான் வருந்தும்படி, உசாவுந் துணையாயுள்ளார் இளைய பிள்ளைகளும் அயலாருமே.

இப்படி இப்படி எல்லாம் யான் பாடினேன். அதனைக் கேட்டு முன் அன்பில்லாத வார்த்தையுடைய என்னாற் காதலிக்கப்பட்டவள் வந்து என்னை அளித்தாள். அவள் அருள் செய்தமையால் அரிய வேட்கை அடங்கினேன்; விளக்கமுடைய செய்தற்கரிய தவத்தை முயன்றோர் தம்முடலை இவ் வுலகிற் போட்டுச் சுவர்க்கத்தை இனிதாகப் பெற்றாற்போலிருந்தது. துன்பத்துக்குத் துணையாய் நின்ற மடல் இனி இவளைப் பெறும் படி இன்பத்துக்கு இடம் பெறக் கடவது, என்று அவன் கூறினன் (என்றான்.)

## 22

மடலேறுகின்ற தலைவன் சான்றோர்க்குக் கூறுகின்றான்:

நற்குணங்கள் எல்லாம் அமைந்தீர்! நற்குணங்களெல்லாம் அமைந்தீர்! பிறர் நோயும் தன்நோய்போல என்னாளும் எண்ணி, அதனாற் பெறும் அறனை அறிதல்

உலகிலுள்ள சான்றோர்க்கெல்லாம் முறைமையாகும். நுமக்கும் அது முறைமை என்று கருதி நுமக்கு ஒரு காரி யங் கூறுவேன். அஃது யாதெனில், ஒருத்தி இருண்ட மழைக்கு நடுவில் மின்னல போல் வந்து தோன்றினாள். தோன்றித் தன்னொளியோடு தன்னுருவையும் என்னைக் காணப்பண்ணி என்னை அளிக்குந் தன்மையளாய் அளித் தாள்; பின்னர் என் நெஞ்சைத் தான் வரும் வழியாகக் கொண்டு விட்டாள். அதுமுதற்றுயில் கொள்ளேனாயி னேன். அசைகின்ற அழகிய ஆவிரம்பூவோடு எருக்கம்பூவையும் வைத் துக்கட்டிய கண்ணியைச் சூடினேன். கரிய பனைமடலாற் செய்த குதிரையை மணிகள் ஆரவாரிப்ப ஏறினேன்; ஏறி இருந்து வருத்தத் தைத்தரும் என் காமநோயைத் தாங்கமாட்டாமையால் உண்டான மனவருத்தத்துக்கு இளைப்பாறுதலாக, இறு கின ஆபரணமணிந்த மாதர் என்னை வருத்தின தன்மை களுள் ஒன்றைப்பாடுவேன். அதனை இவ்விடத்துள்ள சான்றீர்! கேண்மின்.

தேன்போலும் மொழியுடைய மாதர் தாங்காமுறுது என்னைக் காமுறுத்தின காமமாகிய கடலில் அகப்பட் டேன். அகப்பட்டு உசாவுந் துணையில்லாத நடுயாமத்தும், உசாவுந்துணையுள்ள பகலிலும் மனவருத்தமாகிய திரை வந்து அலைக்கையினால் குதிரையின்மேல் இருக்கின் றேன். இருந்து அம்மடன்மா ஒரு தெப்பமாக அக்கடலை நீந்துவேன்? அஃது என் நிலையாகும்.

என்னை மயக்க முறுத்தினவள் அதற்கு மருந்தாகத் தந்த இம்மடன்மா யான் பிழைக்காமைக்குக் காரணமான காம நோய்க்குப் பிழைக்கச் செய்வது ஒன்றாய் இரா நின் றது.

சிறந்த ஆபரணமுடையவளது அழகால் வந்த வருத்த மென்று யான் கூறும்படி, காமனுடைய ஏவலாலே வந்த காம நோயாகிய படை, யான் கண்டார் இகழும்படி வருந்த

என்னிடத்தே வந்தது. வந்து என்னுடைய ஆண்டன்மையின் அழகாகிய மதிலைச் சூழ்ந்திருந்து புறத்தை எல்லாம் உடைத்துப் பின்னர் உள்வாயை அழியா நிற்கும்.

காமமாகிய கடிய பகை ஆண்மையை உள்ளும் புறம்பும் அழித்தலாலே இங்ஙனம் வடிவுகொண்டு தோன்றின எனக்கு அழகிய நுதலினையுடையவள் தந்த இம்மடன்மாப் பரிகாரமாயிற்று.

முல்லை முகையை ஒக்கும் இலங்குகின்ற எயிற்றையும், இனிய மகிழ்ச்சியையுமுடைய அழகால், அவளை என் நெஞ்சு பற்றிக்கொண்டது. அந் நெஞ்சின் உள்ளத்தைச் சுட்டு எரிகின்ற காமத்தீ என்னரிய உயிர்போம் அளவுக்குப் பெரிதும் நின்று சுடும். ஐயோ! யான் எங்ஙனம் ஆற்றுவேன்.

அழகிய ஆபரணமுடையவள் நெருப்பொத்த காமமாகிய பொறுத்தற்கரிய நோய்க்குப் பரிகாரமாகத் தந்த இம் மடன்மா, அதற்கோர் நிழலாய் இருந்தது.

சான்றீர்! சான்றோர் உள்ளாக வைக்கப்பட்ட அரசன் பெரிய தவத்தினின்றும் தவறியவிடத்து அச்சான்றோர் மறுபடியும் அவனைத் தவம் முயல்வித்து உயர்ந்த நிலையுடைய சுவர்க்கத்தே போகவிட்டுத் துயர் தீர்த்தாற்போல, எனது துயரைப் போக்குதலும் உமது கடனாகும்.

## 23

மடலேறுவேனென்ற தலைவன் கண்டார்க்குக் கூறுகின்றான்:

என்னைக் கண்ட நீங்களெல்லாம் விரைவாக வந்து இவ் ஊரிடத்து என்னைப் பண்டு அறியாதீர்போலப் பார்க்கின்றீர். நாவுடைய மணியைக் கையிலே கட்டிக் கையாற் பிடிக்கும் வாய்க் கயிற்றோடு யான் கையிற் கொண்டது மடலன்று, குதிரையே. தலையினும் மார்பினும் கிடக்கின்ற இவை,

தகட்டுப் பொன்போல் விளங்கும் ஆவிரம் பூவாற் செய்த கண்ணியும், உழிஞைப் பூவோடே பூளைப்பூவும், புனமுடைய மலையில் மயில் உதிர்த்த பீலியும். இவை விளங்குகின்ற பொன்னல்ல, யான் நன்றென்று கருதிக் கட்டின பூமாலை என்று அறிவீராக. **திருமாலின் மகனாகிய காமன்** என் தலைமையை அழிக்க விரும்பினான். விரும்பி அவன் ஒருத்திக்கு எல்லா வனப்பையும் கொடுத்தான். அவள் தன் வனப்பாலும் சாயலாலும் மாம்பிஞ்சின் பிளவுபோன்ற கண்களாலும் என் காவலாகிய அரண் இடிந்துபோம்படி நடுவே வந்து என்னைக் கவரும் ஒப்பில்லாதவளானாள். அவளுக்கு யான் வழிபட்டு உறைதலை உலகத்தார்க்குக் காட்டவேண்டிச் செல்லா நின்றேன். இதனைக் கண்டு வெறுத்துக் கூம்பியிராதீர். யான் அத்தன்மையுடைய ஒருவனாவேன்.

ஏதாவது ஒன்று பாடென்று கூறுவீராயின் சிறிது பாடவும் வல்லேன். அம்மடன்மாமீதிருந்து அது இடத்தும் வலத்தும் செல்லும்படி உன் மெய்யை அசைப்பாயென்பீராயின் அத்தொழிலை யான் செய்யவும் வல்லேன். இப்பொழுது, என் நெஞ்சிடத்துக் காம நோயை யான் ஆற்றும் மருந்தாக, நல்ல நெற்றியையுடையவள் தந்த இக் குதிரையை யான் பாடுவேனோ?

சான்றோர், திங்களைப் பாம்பு சென்று மறைத்தால் அதன் வருத்தத்தைத் தீர்க்கமாட்டாராயினும் அதன்மேற் றமக்குள்ள அன்பைக் காட்டித் துன்புறுவர். அதுபோல, இனிய மிருதுவான ஒண்டொடியது வருத்தும் பார்வையில் அகப்பட்ட என் நெஞ்சிடத்துக் காம நோயைக் கண்ணாற் கண்டும், இவ்வூரார் அதனைத் தீர்க்கமாட்டாராயினும் பார்த்தலும் செய்திலர்.

பிறராற் றாங்கவொண்ணாத சினத்தோடு தன் வடிவைக் காட்டி அவருயிரைப் போக்கும் பாம்பும் **பலரிடைப்பட்**

டாற் சாவாதென்னும் உலக வழக்கிற் கேற்பச் சான்றோர் அவைப்படிற் பிழைக்கவுங் கூடும்; அத்தன்மையேனல்லாத எனக்கும் பூப்போற் கண்ணையும், கடை சுருண்ட தழைத்த ஐம்பாலாய் முடியும், கூந்தலையும் உடையாள் செய்த இக் காம நோயின் வருத்தத்தை அறிந்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்க்கும் உபாயம் அறிகின்றிலர்.

கொடிய நீர்ச்சுழியில் அகப்பட்ட ஒருவனுக்குக் கரையில் நின்றோர் சென்று எடாமல் "பயப்படாதே" என்று கரையிலே நின்று கூறினாலும் அச்சந் தீருவதாகும். அதுபோல இவ்வழகிய முறுவலுடையாள் செய்த இக் காம நோயை அறிந்திருந்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்க்க வாற்றாராயினும், ஒரு அன்பு செய்தலையும் அறிகின்றிலர்.

என்னிடத்து நிகழ்கின்ற வருத்தத்தை யான் அறிந்தேன். இனி இதனை நும்மிடத்தே தெளியும்படி பார்மின். இத்தன்மைய மயக்க முறும் காம நோயாலுண்டாகிய என் மயக்கம் நீங்கும்படி இருண்ட கூந்தலையுடையாள் என்னை அருளும்படி பண்ணுவீராயின் அது நமக்கு அறனும் புகழுமாகும்.

## 24

இரந்து பின்னின்ற தலைவன் மடலேறிய வழி அவன் தமர் அஞ்சித் தலைவியைக் கொண்டுவந்து கொடுத்தலைக் கண்டோர் கூறுகின்றனர்:

மக்கள் யாக்கை பெறுதற்கரியது. அதனைப் பெற்றார் சிலர் தாம் விரும்பியவற்றைச் செய்து தீவினையை ஈட்டுவர். அதனால் அறம் பொருள் இன்பம் என்று சொல்லப்படும் ஒன்றின் பகுதியையும் சேரார்கள். அவர்கள் செய்து திரியும் தொழில் ஒன்றாக, அழகுபெற்று நிற்கும் பனையின்

மடலை ஏறி அவ்வூரிடத்தே எல்லார்க்குங் காட்டி ஒருத்தியின் அழகிய நலத்தைப் பாடி வரும்படி நூல்கள் கூறின. ஆதலால் யானும் அதுவே துணிந்து மடலேறிப் பாடுவேன்.

சான்றீர் வாழ்வீராக! யான், போரிடத்து வெற்றியினையுடைய குதிரையின்மேலிருந்து போர்த் தொழிலை நடத்தும் ஆண்மையுடையேன். ஒருத்தி என்னை மாவல்லாத மடன்மாவில் ஏறி அக்களத்தே தோன்றி மன்றின் கண்ணே தன்னை நினையும்படி செய்தாள். அவள் என் மனத்துள்ளே இருந்து பின் நீருட்டோன்றி நின்ற மதியினுடைய நிழல் பெயர்த்துக்கொள்ளுதற்கு அரியவாறு போலப் பெற்றுக்கொள்ளற்கு அரியளாய் இரா நின்றாள்.

கேளீர் சான்றீர்! யான் உலகத்தை எல்லாம் பாதுகாக்க முயலும் உள்ளமுடையவன். என்னை ஒருவரிடம் ஒன்றை இரக்க முயலும் இன்னாதாகிய வருத்தத்தை ஒருத்தி செய்தாள். அவள், கிழக்கில் தோன்றுவதும், பொய்யில்லாத உலகத்தவராற் புகழப்படுவதுமாகிய குற்றமில்லாத சூரியனை யான் பிடிக்க விரும்பின் அத்தன்மையளா யிருக்கின்றாள்.

பரந்த சுணங்கினையும் பெரிய தோளையுமுடையவள் தான் மறைந்தபொழுதே பொறுத்தற்கரிய நோய் செய்யா நிற்பள். அவள் குணம் என்றும் இத்தன்மைத்தோ?

சான்றீர் வாழ்வீராக! சான்றீர்! தெளிந்த நாவினால் வார்த்தை சொல்ல வல்லார்முன் சொல்ல வல்லவன் யான். அவள் என்னைப் பிறர் முன்னே ஒன்றையும் கல்லாத தன்மையள் ஆகக் காட்டினாள். அவள் இராக்காலத்து இடியை உமிழ்கின்ற மேகத்தின் இருளைக் கிழிக்கும் மின்னலைப் பிடிப்பேனென்று ஒருவன் கருதிய தன்மையளாய் இரா நின்றாள்.

இவ்வாறு சொல்லி அவ்வூரிடத்துத் தெருவிடத்துக்

கண்டார் வருந்த மடன்மாவை ஏறிப் பாடினான். அழகிய ஆபரண மணிந்தவளைத் தான்பெறக்கருதி அவன் பொருத்தமான வார்த்தைகளாற் பாடக்கேட்ட தமர், குடிப்பழுதாமென்று அஞ்சி அவளை அவ்விடத்தே கொண்டுவந்து கொடுத்தார். அவர்கள் அவளைக் கொடுத்தது. போர்த்தொழில் வல்ல பாண்டியனுக்கு அஞ்சிப் பகைவர் அரிய திறை கொடுத்ததுபோன்றது. ஈது ஒரு மகட்கொடை இருந்தவாறென்னே! (என்று கண்டார் கூறி அதிசயித்தனர்.)

## 25

இது தலைவன்வரைவிடைவைத்துப் பிரிவிடை நீடித்த வழி, தலைவி, பிரிவாற்றாது நாணம் எல்லைகடந்து கலங்கி மொழிந்து அறிவழிந்தவிடத்து அவன் வந்து வரைந்து தெளிந்தமையைக் கண்டார்கூறியது :

கேட்பீராக! இவள், தன்னுடன் சேர்ந்து விளையாடும் ஒள்ளிய நெற்றியுடைய ஆயத்தாரோடு கூடி விளையாடுமிடத்தும், முட்போன்ற தனது பல்லின் நுனி தோன்றுமற் சிரிக்கும் இயல்புடையவள்; அவள் சிரிப்பை உள் அடக்கிக் கொண்டு முகத்தாலும் கண்ணாலும் சிரிப்பவள். அவள் இப்பொழுது பெண் தன்மையின்றிப் பிறர் கேளாமற் கூற வேண்டிய மொழிகளை எல்லாருங் கேட்கும்படி கூறுவாள்; நிரைத்த பற்களின் மேற்பக்கம் தெரியும்படி பலத்துச் சிரிப்பாள். சிரிக்கும்பொழுதே பூ மலர்ந்தாற்போல அழகுடைய கண்கள் இமை நீர் நிறையும்படி அழும். இவள் இங்ஙனம் அழுதற்குக் காரணம், ஒருவரை ஒருவர் காதலித்துப் புணர்ந்தபின் ஒருவர் மற்றவர்க்கரியராம்படி பிரிவு நிகழ்ந்ததனாலாகும். இந்நிலைமை, யாழை மீட்டுப் பாடும்

இனிய ஓசையைக் கேட்பவர்கள் இன்புறுதற்குமுன் நரம்பு அறுந்த தன்மையுடையது. இக்கனத்த குழை அணிந்த வளது துயர்தரும் குணம் எம்மை வருத்துமென்று கருதாது இவ்விடம் வந்தேம். குறுகின யாம் இதனை முற்றாகக் காண்பேம், என்று குறுகின நீவிர் எல்லாரும் யாது காரியஞ் செய்தீர்?

இங்ஙனம் வந்த நீர்தான் என்னை இகழ்கின்றீரோ? யானுற்ற வருத்தத்தை எனக்குத் தந்தவனுடைய மாயத்தைச் செய்த பரந்த மார்பை யான் தழுவி அவனைக் கூடப் பெறினும் அஃது இகழ்ச்சி இன்றாம். இங்ஙனம் என்னைச் சிதைத்தவன் இவனென்று யான் முன் கூறினேன். அதனைக் கேட்ட நீர் அவனானுற்றது எத்தன்மைத்து என்று கேட்பீர். அவ்வாறாயின், யானுற்றது இதுவென எழுவகையாகிய அறத்தொடு நிலைகளுள் ஒன்றை உம்மனத்துக்குப் பொருந்தக் கூறும் அறிவுடையேன் ஆயின் யான் இங்ஙனம் வருந்துவேனோ? அவ்வறிவு கெட்டமையால் யானுற்ற வருத்தம் இத்துணை வருத்தமென யான் உமக்குக் கூறுவன்; அதனைக் கூறக் கேண்மின்; சான்றீர்!

எனது சிற்றில்லுள் அவன் கூடம் இழைத்தான். அவனை யான் கூடுவேனோ என்று ஆராய்ந்தேன். அக்கூடத்தில் ஒரு பாகத்தை யான் இழைத்த அளவில் முழுதும் வளைவில்லாத இளம்பிறையைக் கண்டேன். கண்டு இது வானத்திலே பின்பு நிறைமதியாய் வருத்துமெனக் கருதி யானுடுத்த ஆடைத் தலைப்பால் அதனை மூடி அகப்படுத்திக் கொள்ளப்போனேன். யான் அதை அகப்படுத்தினால் நீலமணிபோன்ற திருமிடற்றையுடைய கொன்றைமாலை சூடிய கடவுள் அம்மாலையோடு சூடுதற்கு அதனைத் தேடித் திரிவர் என்று எண்ணினேன். எண்ணி! நெஞ்சே! இது பின்பு வருத்துமென்பதை நினையாது இதனை அவற்குக் கொடுத்து

ஒருவகைப்பட்ட உபகாரியாவாய் ; யாம் அறிவுடையேம்! என்று நெஞ்சைத் தேற்றி அதனைக் கைவிட்டேன். பின்னர் அவர் வருவாரோ? வந்தால் யான் உடன்படாதவரை இகழ்ந்திருப்பேனோ? என்று எண்ணினேன். கவிந்த செறிந்த இருளுடைய இரவைக் காவலர் காவல் புரியும் இரவில் கனவில் யான் நினைந்தவாறே அவன் வந்து தோன்றினான். யான் அவனை வளைந்து பிடித்துக்கொண்டேன். அதனாற் பெற்றதென்? அங்ஙனம் பிடித்துக் காண்பேனாகப் பையென விழித்தேன். யான் பிடித்த கைக்குள்ளே மறைந்து அவன் தோன்றானாயினான்.

இனி யான் ஞாயிற்றைக்கொண்டே அவனைக் காண்பேன் என்று கருதினேன். கருதியிருந்து மற்றை நாள் அந்தியிலே ஞாயிற்றை நோக்கிக் கிரணங்களைப் பிறர்க்குப் பகுத்துக்கொடாத ஞாயிறே! கதிர்களோடு நீ அத்தகிரியை அடைகின்றாயாயின், அவரை நினைத்துத் தேடிப் பிடித்துக் கொண்டு என்முன்னே நிறுத்தி 'என் கையிலே உன் கையை நீட்டித் தப்பாமற் றருவாயாயின் உயிர் திரியாக என் நெஞ்சாகிய அகலிலே கொளுத்திய காமத்தீ அவியும்' என்றேன். அதற்கு மறுமொழி கொடாது அது அத்தகிரியிற் சென்றது. அதனை யான் நோக்கி 'மறுவில்லாத சுடரே' அத்தகிரியைச் சேர்கின்றாயாயின், நீ கடல் நீரிடத்தே மீண்டு வந்து தோன்றிப் பகற் பொழுதை உண்டாக்குமளவுந் தொய்யிலை எழுதாமற் கெடுத்தவனை யான் தேடுவேன். யான் தேடும்படி எனக்குக் கை விளக்காகச் சில கிரணங்களைப் பகுத்துத் தாராய்' என்று கூறினேன். அச்சுடரும் யாம் அதனைக் கெடுத்தால் அவனைக் கண்டு வெறுப்பேன் என்று நினைத்து அதனைத் தராது போயிற்று. போகவே யான், 'அவன் எம்மை முன்னர் விரும்பி நலத்தைச் சிதைத்

தான். இங்ஙனஞ் சிதைத்தவனை எதிர்ப்பட்டால் யான் கூடாமல் வேறு யாது ' என்று கருதி, “ அத்தகிரியில் மறையும்போது மன்றத்தில் நிற்கும் மூங்கில் மேலே தோன்றும் மலையிடத்து மாந்தளிர்போலும் நிறமுடைய வெயிலே! என் மிருதுவான தோளை மெலிவித்தானது வடிவழகின் தன்மையை யான் விரும்பிக் காண்பதல்லது அவன் செய்தது தீதென்பவற்றைக் காணேன். யான் மாத்திரமல்லாமல் பழைய இவ்வுலகத்து மகளிரும் தங்கணவரைக் கண்டாற் கூடுவதல்லாமல் புலந்து இருந்தார் என்று கேட்டும் அறிவையோ ” என்று கூறினேன். இவ்வாறு கூறிக் காமநோய் என் மனத்தைச் சுழலப்பண்ணி நெருப்பாக நின்று சுட்டதாயினும் அதனை மறைத்ததுபோல அழகிய பூப்போலும், கண்களிடத்துத் தோன்றி நின்ற வெம்மையான நீரையும் மறைப்பேன். அதற்குக் காரணம், அந்நீரைத் தெளிப்பின் அன்புடைய இவ்வுலகு வேம் தன்மையா யிருந்ததென்று யான் ஆற்றிய அருமையும் கூறினேன். யானுற்ற வருத்தம் இதுதானென்று சான்றோரை நோக்கிக் கூறி, பின்னர், ' சான்றீர் ! வருத்துங் காமமும் முதிர்ந்த அலரும் என்னும் இரண்டு துயரம் உயிரின் இரண்டு புறத்தும் தூங்கி என்னை வருத்தும். இதனை உயிர் வருந்துமட்டும் வலிதிற் பொறுத்தேன். இனி இறந்துபோவதற்கு முன்னே இதனைக் களைவீராக ' என்று கூறினாள். பகலும் இரவும் கூட்டமின்றிக் கழிந்தன என்று எண்ணி வருந்தி அழுதனள் ; அழுது நீள நினைந்து வருந்திப் பெருமூச்செறிந்தாள். அதன் பின்பு விளக்கமுடைய இராக்காலத்தே காதலன் வந்து வரைந்து கொண்டான். அவள் கணவனது அழகிய மார்பைப் புணர்ந்து தேற்றாவிரை கலங்கல் நீரைத் தெளிவித்தது போலத் தெளிந்து அவள் பழைய நலத்தைப் பெற்றாள். ஆதலால், யாமும் இவர்களை உண்மையாக மணியும், அதனிற்

பிறந்த நீரும்போல வேறல்லரெனத் துணியக் கடவேம்'
எனக் கண்டார் கூறினர்.

## 26

இதுவும் அது :

அகன்ற ஊரிடத்திருந்து கனவின்கண் அவனோடு கூடி இன்புற்றாள். இருளை நீக்கும் நிலவுடைய சந்திரன் போன்றவன் நீங்கினான். அப்போது பகற்காலத்து ஒளி கெட்ட மதி போல அவள் ஒளி கெட்டது. நெற்றியினின்றும் திலதம் போனது. நீலமணியின் ஒளியைத் தன்னொளி விட்டு மாறுபடுத்தும் பொன்னின் ஒளியோ ? மாந்தளிரின்மீது கோங்கம்பூவின்றாது பரந்த ஒளியோ ? என்று கண்டார் கூறும்படி தன் மேனியை மறைக்கும் பசலையளானாள். தன் நெஞ்சம் மிகுந்த இன்பத்தோடு பொருந்தி இருந்ததையும் அது கழிந்ததையும் நினைந்து நாணாற், பிறர் முகம் நோக்காள். நிலத்தை நோக்குவாள். அஞ்சி அழுது பலவுஞ் சொல்லி நிற்பாள ; என்று கூறி இவள் ஒருத்தி இவ்வாறு வருத்த முற்றாள் என்று கூறுகின்றவர்களே !

யான் பொன் செய்தேன். எனக்குற்றதைக் கேட்பீராக என்று கூறினாள். வஞ்சனையாகத் தான் வாசித்த யாழோசையைக் கேட்ட அசுணமாவின் இன்பம் போம்படி கெடுத்து அதன் உயிர் போம்படி ஒரு பறையைத் தட்டினாற்போல, ஒருவன் முன்னர் வஞ்சித்து இன்பத்தை உண்டாக்கிப் பின்னர் அவ்வின்பம் போம்படி கைவிட்டான். அக்களவொழுக்கத்தால் என் மெல்லிய தோளை மெலிவித்தவனை நினைந்து அவனுறைகின்ற இடத்தே சென்று வருதற்கு நெடுங் காலமாயிற்று' என்று கூறினாள்.

இவ்வாறு கூறியவள் அவனைக் கொண்டுவருதலுங்

கூடும். 'நீரும் கூடி நவகண்டம் எனக் கூறும் உலகத்தில் அவனைத் தேடிப் பிடித்துக் கொண்டுவந்து எனக்குத் தரப் பெறின் யானும் பிறமகளிரைப்போல நிறை என்னும் குண முடையேனாவேன்' என்றும் கூறுகின்றாள்.

'இவள் ஒரு நாளாயினும் அவனைக் கூடி முயங்குவள், என்று கருதி என் பின்னே பின்னே வரா நின்றீர்; இவள் முன்னிலும் அதிகம் வருந்தினாள் என்று கருதி அவ்வி டத்தே நின்று அவனுக்கோர் தீங்கு வந்ததோவென்றும் சொல்லா நின்றீர்; இன்னும் ஐயோ! இவள் வருத்தம் எய்தினாள் என்று மயங்கா நின்றீர்; இவ்வாறு உண்மை யுணராது மயங்காதீர். என் இனிய உயிரை ஒத்தவனுக்கு யாதும் தீமை நேரவில்லை என்பதை அவனுயிரோடு ஒன்றா கிய என்னுயிர் காட்டா நிற்கும். அதுகேட்டு அவர்கள் நின்னை இவ்வாறு வருத்தினவனை ஞாயிறு வருத்தும்' என்றார்.

அதுகேட்டு 'நடுவு நிலைமை செய்யாமல் பழி நீக்கும் ஞாயிறே! உலகியல் அறியாதாரிடத்து மிகவும் கோபித்தற்கு நீ விரைந்துசெல்வா'யென அவர்கள் கூறக்கேட்டு, 'நின்னை வழிபட்டு நீ அவரை மிகச் சீறாதபடி இரந்துகொள்ள வந் தேன். நீ, என் நெஞ்சு வருந்தும்படி கைவிட்டவனைக் கண்டு சீறுமிடத்து என்னையும் சீறுவாய். நீ அவனை மிகச் சீறில் யான் இறக்கும்படி நேரும்' என்றாள்.

இங்ஙனம் கூறும்போது 'ஞாயிறு படும் நேரமாயிற்று. பிரிந்தார்க்கு வருத்தந் தரும்படி மாந் தளிர்போல் நிறம் கொண்ட மாலைக்கு முன்னாகிய இக்காலத்தில், இவ்வூரின் மகளிர் தாம் தளிர் விரவின மாலைகளைச் சூடி ஆடவர் மேற் றும் வைத்த நலத்தைப் பாடி இன்புறுவார்கள். ஆச்சாமரந் தளிர்க்குங் காட்டிடைச் சென்றவர் மீண்டு வரின் அவர் களைப்போல யாம் மனம் மகிழுவேம். ஆனால் அவர் வரக்

கண்டிலேம்' என்று கூறினாள். கூறி யான் தளிர்க்குமாறு எங்ஙனம் என்பீராகில், 'என் தோளைச் சேர்கின்றவன் நெய்தற் பூவைப் புறவிதழொடித்து மாலை கட்டிச் சூடவும் வல்லன். நெடிய மிருதுவாய தோளிலே காமன் சிலையாகிய எழுதுகரும்பை எழுதவும் வல்லன். இளமுலைமேற் றொய்யிற் குழம்பாற் கொடி எழுதவும் வல்லன். தன் கையின் வில்லைத் தொழில் கொள்ளவல்ல காமனை அவன் ஒப்பன். கூடுங் காலத்து நிகழ்த்தும் தொழில் பலவும் செய்யவும் வல்லன். இவ்வாற்றான் என் மனந் தளிர்க்கும்' என்று கூறினாள்.

இங்ஙனம் கூறும்போது மாலைக்காலம் வந்தது. அதனைக்கண்டு, என்னுள்ளங் குவியுமாறுபோல நெடிய கழியின் மலர்கள் குவியும். இரங்கும் என் நெஞ்சம்போல கோவலர் குழலோசை தோன்றும். அலையும் என் மொழிகள்போல வண்டுகளின் செவ்வழிப் பாட்டு அடங்கும். கெட்டுப் போன என் அழகுபோலப் பகற்காலத்தின் ஒளி மழுங்கும். கலக்கத்தோடே வந்த காலனைப்போல என்மேல் மாலைக்காலமும் வந்தது. இனி எங்ஙனம் ஆற்றுவேன் என்று கூறினாள்.

கூறி அம்மாலையை வரவிட்ட ஞாயிற்றை நோக்கிச் 'சுடரே! யான் செயலழிந்து இராக்காலத்தே வருந்தும்படி நீ போனாய். அருள் இல்லாதிருந்தாய். நீ வாழ்வாயாக' என்று கூறினாள்.

கூறி, 'இரவில் இறந்தேனாயினும் தீதில்லையாகும். தங் கணவர் இறக்கப்பெற்றவர், அக்கணவர்மீதுள்ள விருப்பத்தோடு இறப்பாராயின் சுவர்க்கத்திற் சென்று அவர்கள் விரும்பியவற்றை விரும்பியவாறே பெறுதல் மெய் என்று நூல்கள் கூறும். யானும் அவன்மேலே விருப்பத்துடன் உயிர்விட்டு அவ்விடத்து அவனைப் பெற்று எவ்விடத்தும் புகழுடையனாவேன் இனி வருத்தம் ஏன்?' என்றும் கூறினாள்.

கூறி, 'முற்பகல் செய்தான். **பிறன்கேடு தன்கேடு பிற்பகற் கண்டுவிடும்,** என்னும் பழமொழி உள்ளது. அவ்வாறு, நீரில் அலர்ந்த நிலமென அவர் புகழும்படி அந்நாளிற் பெரிய வருத்தஞ்செய்த என் கண்கள் இப்பொழுது பீர்க்கம் பூப்போல் பெரிதும் பசந்தன. இதனையும் என் வருத்தத்தையும் கண்டும் அருளின்மையில் அவனை எனக்குக் காட்டாது இவ்வூர் நின்று அலர் தூற்றும். உயிர்களைப் பாதுகாக்கும் அரசனும், எனக்கினிய உயிரை ஒப்பானைக் காட்டி என்னுயிரைக் காவாது இருத்தல் என்ன பயனைக் கருதியோ' என்றுங் கூறினாள்.

இவ்வாறு கூறும்படியான காம நோயாகவே மயக்கங் கொண்டவள், பல மலைகளைக் கடந்து போனவன் வரைவோடு வந்து சேரப்பெற்றாள். அதனால் பாண்டியனை உறவாடி அவன் மனத்தை மகிழ்வித்த தேயத்தவர்கள் இன்பமுற்று வாழ்வதுபோல அவனால் இழந்த நலத்தை இனிய மகிழ்ச்சியோடு எய்தினாள். (இஃது என்ன வியப்பாயிருந்தது எனக் கண்டார் கூறினர்.)

## 27

இதுவும் அது

'நல்ல நெற்றியையுடையாய்! இவள் ஒருத்தி தனக்குரிய நாணினைக் கைவிட்டுத் தன் மனத்தே ஒன்றை நினைத்துப் பெருமூச்செறிகின்றாள். வீழ்கின்ற கண்ணீரைத் துடைத்துப் பிறரை நோக்காது நிலத்தை நோக்குகின்றாள். தன்னை, 'நீ உற்றது என்ன? என்பார்க்குக் கனவின்கண் வாய்' வருவிக் கூறுவாரைப்போல உத்தரமல்லாத சில சொல்லிச் சிரிக்கின்றாள். இங்ஙனம் தெளிவும் மயக்கமுமாய் மயங்கி, வேறும் அத்தன்மையவாகிய துன்பங்கள்

தன்னிடத்தே கொண்டு நின்று வருந்துகின்றாள். இவள் யாது துன்பம் உற்றாளோ? இவளைக் காண்பாயாக; யாஞ் சென்று இவர் கூறும் வார்த்தைகளைக் கேட்போம் என்றார்கள்' என்று கூறினாள்.

அங்ஙனங் கூறியவள், இவள் கூறுவதைக் கேட்போமென்று தம்மிலே கூறிவந்து, 'ஏடீ! நீ என்ன வருத்தமுற்றாய்? யார் நினக்கு வருத்தஞ் செய்தார்? நினக்கு உற்ற வருத்தத்தை எங்கட்கு உரை' என்று சொல்லி என்னைக் கேட்கின்றவர்களே! அது வந்த வகையை என்னிடத்திற் றெரியக்கேண்மின்! ஒருவன் என்னை நோக்கி, 'கொத்தான கூந்தலுடையாய்! எனக்கு உற்ற வருத்தத்தை யான் நினக்கு வந்து உரைக்குமளவும் என்னுயிர் போகாமற் றங்கிற்று என்று கூறித் தன்னோடு யான் மருவுதலைச் செய்தான். அவன் பிரிந்துபோன அக்காலந் தொடங்கி என் நெஞ்சு என்னை அவன் மருவின இடத்தே அகப்பட்டு நின்று விட்டது. இனி அவனுள்ள இடமெல்லாம் தேடித் திரிந்து என் நெஞ்சினைக் கூட்டிக்கொள்வேன்' என்றாள்.

அவள் அந்திக்காலத்தே துயருற்றுக் கூறினாள்: இனி மாலைக்காலத்துத் தன்னைற் றேடுதல் அரிதென்று கருதினாள். மதியைக்கண்டு அதனோடு சேர்ந்தமுயல் தேடித் தருமெனக் கருதினாள். கடல்சூழ்ந்த உலகமெல்லாம் பார்த்துத் திங்களுள் இருக்கும் முயலே! இவ்வுலகத்தில் என் கணவன் இருக்கின்ற இடத்தைக் காட்டுவாய். அவனிருக்கின்ற இடத்தைக் காட்டாயாயின் நினக்குப் பகையாகிய நாயை நின்னிடத்தே ஏவுவேன். அதுவன்றி, வேட்டுவருள்ள இடத்தே சென்று ஒரு முயல் உண்டென்று கூறுவேன். நீ அரணாக உறைகின்ற திங்களோடே நின்னை அலைத்து விழுங்கும்படி மதிக்குப் பகையாகிய பாம்பைச் செலுத்துவேன்' என்று அவ் வந்திக்காலத்தே நின்று தன் நெஞ்சி

ளுள்ள வருத்தத்தைச் சொன்னாள். அது வெள்ளிய மேகத்தில் மறைந்ததைக் கண்டு, 'நீ மதியோடே வெண் மேகத்தே ஓடிச் சென்று புகா நின்றாய். ஆதலால், சிறிது என்னைப் பார்த்து நீ எனக்காகத் தேடிப்போகின்றாய் போலே இரா நின்றாய்' என்று கூறினாள்.

'மதி கரிய மேகத்திற்சென்று மறைந்தது. அதனை நோக்கித் தேடுமாறு அதற்குக் கூறக் கருதினாள். அக் கள்வனால் மறைந்திருக்க முடியுமோ என்று காட்டும்படி தாழை நிற்கும் செம்மணலுடைய கடற்கரைச் சோலைகடோறும் ஓடிச்சென்று பார்ப்பேன். அங்ஙனஞ் சென்று காணேனாயின் ஓடிச்சென்று அவனை ஒளித்திருந்து காணக் கடவேன்' என்று கருதினாள்.

பின்பு அவள் 'அவனிருக்கும் இடங்களும் கூறக் கருதினாள். அடம்பின் மலரைப் பறித்து, எமக்குத் தரும் மாலையைக் கட்டின இடத்தே பாராய்; யாம் வைத்து விளையாடும் பாவையையும் மலர்களையும் கொண்டுவந்து நமக்குக் காட்டி யான் தனக்குப் பின்னே செல்லும்படி அவன் அவற்றைக் கொண்டோடிய இடத்தே பாராய். எமக்குத் தான் தொய்யிலை எழுதிய அவ்விடத்தே பாராய். மனத்தில் அன்பில்லாதவன் 'தையால்! நின்னைப் பிரியேன் நீ தெளி' என்று தெளிவித்துப் பின்னர் மெல்லப் பிரிந்த அவ்விடத்தே பாராய்' என்று கூறினாள்.

அவ்வாறு கூறுதலும் அம்முயல் கருமேகத்தில் மறைந்துபோயிற்று. அதனைக் கைவிட்டு இடையே தன் மேல் வந்து வீசிய காற்றை நோக்கினாள். 'காற்றாகிய தெய்வமே! நீ திங்களின் ஒளிபோலன்றி ஆகாயத்தும், உலகத்தும் பரக்கும் கதிர்களுடைய ஞாயிற்றின் ஒளியுள்ள இடமெல்லாஞ் சென்று தேடுதற்கு உரியை நீ; ஒருவன் உயர்ந்த

தேரை ஏறிவந்து தன்னால் அருளத்தக்கதும் என்னுள்ளத்தே கெடாததுமாகிய காமநோயைச் செய்தான். நோய் செய்து கைவிட்டுப் போன அன்பில்லாதவனை, அந்நோய் தீர்ந்து யான் தெளியும்படி எதிர்ப்படுவாய். ஆசை மிகுதியால் எனது இயற்கை நலத்தை நுகர்ந்து பின்பு எம்மை ஒரு காரணமுமின்றி வெறுத்து, அவ்வியற்கை நலத்தைக் கொண்டு இம்மண்ணகத்தே ஒளித்தவனைக் கொண்டுவந்து காட்டாய். காட்டாயாயின் என் கண்ணீரைத் தெளித்து அக்கண் அழுகின்ற அழலாலே நின் மேனியெல்லாம் சேரச் சுடுவேன்' என்று கூறினாள்.

அதனைப் பின்னர்க் காணாமையின் தான் அதனைத் தேடக் கருதினாள். கடலை நோக்கினாள். 'வருகின்ற கடற்றெய்வமே! என்னைப் பாதுகாவாமல் நீங்கினவனை யான் தேடிக் காணும் இடத்தை நீ விட்டுப் போவாய்; போகாது அவ்விடத்தே ஏறுவாயாயின் நின் இடமெல்லாம் வெறு மணலாம்படி என் காற்புறத்தாலே நின்னுடைய நீரெல்லாம் போம்படி இறைப்பேன். அது முடியுமோவெனில் அதற்குக் கடவுள் உதவியும் உண்டாயிருக்கும்' என்றுங் கூறினாள்.

பின் கடற்றிரை ஓடிவந்ததனைக் கண்டாள்; கண்டு, 'என்னைக் கைவிட்டுப் போனவனை நீ தேடிக் கொண்டுவந்து தருவையாயின் அதற்குக் கைம்மாறாக என்னேயைச் சொல்லி நினக்கொரு பாட்டினைப் பாடுவேன் என்றுங் கூறினாள். அங்ஙனம் கூறிப் பாடுகின்றாள்: 'என்னைக் கூடின அன்பர் வந்து கூடுகின்ற காலம் இரவோ பகலோ என்று அறியேன்; ஆதலால் என்னை வருத்தும் பகற்பொழுது போய் இராப்பொழுதாவதாக என்று கருதிப் பகற்பொழுதை வெறுப்பேன். பகல் போய் இரவான காலத்து அவ்விராக்காலத்தை அப்பொழுதே வெறுப்பேன். கடலே!

யான் உற்ற வருத்தத்தை நின்னை ஒழியப் போக்குவாரைக் காணேன்' என்றுங் கூறினாள்.

'கடலே! அறனில்லாதவன் என் கண்ணுள் வந்து தோன்றுகையினால் மூடிய இமையை விழித்துப் பிடித்துக் கொள்ளுவேனென்று கருதி யான் விழிப்பேன். பின்னை அவன் ஓடிப்போய் என்னெஞ்சுள் மறைந்து நின்று அப் பொழுதே யான் துயிலாத காம நோயைத் தாரா நிற்கும். கடலே! ஊரை எல்லாம் எரிக்கும். கடிய நெருப்புத் தன்னை நீர்க்கும். நீரைச் சொரியச் சினம் ஆறும். அதுபோலன்றி அருளில்லாத என் அன்பர் எனக்குச் செய்த இந்தக் காம மாகிய நெருப்புத் தனக்குப் பகையாகிய நீருள் புகினும் வேகும்படி சுடும். கடலே! தன் மனத்து ஒரு துணிவில் லாதாள் என்ன பித்தேறினாளென்று கூறி இக்காம நோயைப் பெற்று அறியாதவர்கள் என்னை இகழ்ந்து சிரிக்கின்றனர். இக்காமநோய்க்குத் துணையாவதோர் முடிவை அறியாதபடி என்னை விட்டு என் வலியை அறுத்தவன் மார்பினை, இத் தன்மையாக வருமென்றறியின் விரும்பின அக்காலத்தே முயங்கேன்' என்றுங் கூறினாள்.

கடலோடு வருந்தி இவ்வாறு கூறினவளுடைய மனங் கலங்கும் வருத்தம் தீரும்படி அவள் காதலர் விரைந்து வந்தார். அவளது மாற்றுதற்கரிய காம நோய் தீர்ந்து நுத லிற் பசப்பும் மாறினது. அது அறநெறி யறிந்து நடக்கும் பார்வை யுடையவனை அத்திறமில்லாதார் உண்டாக்கிச் சொன்ன தீய மொழியெல்லாம் நல்ல அவையுள் ஆராயப் பட்ட விடத்துக் கெட்டதுபோல் இருந்தது. இது என்ன வியப்போ!

## 28

### இதுவும் அது

மக்கள் விரைந்து விரும்பும் சிறந்த காமம் இரவிற் கண்ட கனவுபோல் நிலைபெறுதல் இல்லாதிருந்தது. தழைத்த பல கூந்தலுடையளாகிய ஒருத்தி, தன் நலங்களை யெல்லாம் நுகர்ந்து கைவிட்டவனை நினைந்து பெருமூச்செறி வள்; அவனோடு கூடுமாற்றைப் பிறரோடு வினவுவள்; நெஞ்சு சுழல்வள்; பெய்கின்ற மழையைச் சேர்ந்த மதி போல் தன் முகம் தோன்றும்படி, தன் கயலை ஒத்த கண்களி னின்றும் நீர் அற்று வடியும்படி ஓயாது அழுவள். அவனை மறந்தாளைப்போல ஆரவாரித்து இடையே சிரித்தலையும் செய்வாள். ஆதலினால் தனக்குச் சிறந்த நாணையும் மற்றும் நற்குணங்களையும் நிலைநிறுத்த நினையாது காமம் ஒன்றை யுமே நினைந்து அவள் சுழன்றாள் என்று இங்ஙனம் இகழ்ந்து கூறி எல்லாருங் காண என்னைச் சிரியாதிருப்பீர்க ளாக. ஐயறிவினையுடையவர்களே! சுருக்கமாக யான் அதன் தன்மை கூறுவேன் கேளுங்கள் என்று இவ்வாறெல் லாம் கூறினாள். மகளிர் தோள்களைச் சேர்ந்த ஆடவர் அவர்கள் வருத்தம் மிகும்படி பிரிவர். நீண்ட சுரத்தைக் கடந்து சென்றவர் விரைந்துவந்து அருள் செய்வர். இவ் விரண்டும் பகலும் இரவும்போல ஒருவரை ஒருவர் விரும் புவாரிடத்திற் றோன்றும். இவ்வாறு இன்பம், நிலையில்லாத தடுமாற்றமாகத் தோன்றும். இவள் தனக்கேயன்றி உல கத்துக் கூடியிருந்து வாழ்வார்களுக்கெல்லாம் அது வரு மென்னும் தன்மையும் கூறினாள்.

அவர் சிரித்ததினால் யாம் இங்ஙனமாயினேம் என்று அழுகின்றவள், அங்கு எழுந்த வெண்மேகத்தை நோக்கி ‘வானமே! நீ பெய்யாதே வந்து என்ன காரியஞ் செய்

தாய்? நின் இனத்தோடே கூடுவாய். என் கண்ணீராற் சிறப்படைந்த கடலிலே நீரை முகந்து முழுங்கி முன்னர் என்னிடத்தே தாழ்ந்தாய். பின்னர், என்னைத் துறந்து நெருங்கிய வளையை நெகிழப்பண்ணியவன் போகிய கானத்தே நெருப்புச் சுடாமற் றுளியை வீசுவாய்.' என்றாள்.

மீண்டும் அவள் உள்ளூரிலுள்ளாரை நோக்கி, 'ஊரி லுள்ளீர்! இக்கடும் பகல், எமக்கு, எம் கண்ணுறக்கத்தைக் கைக்கொண்டு, பின் என்னை நினையாக் காதலன் செய்த குணங்களால் வந்த என் இடையறு நோயால் வருங் குளிரை வேதுக்கொள்வதுபோல் இழிந்தது. இது நமக்கு யாது போல் இருக்கின்றது கூறுமின் என்றாள். அங்ஙனங் கூறி இங்ஙனம் வேதுக்கொண்டு என்னைக் காக்கும் கடும் பகல் ஞாயிறே! நீ எல்லாக் கதிர்களையும் பரப்பி இப் பகற்பொழு தோடு போகாது நிற்றலை விரும்பினேன். நீ போகில் மயக்கந்தரும் மாலைக்காலம் இன்றுவந் தென்னைக் கொல்லா மற்போதல் அரிது. அவள் பின்னும் ஞாயிறே! நீ என் காதலரை விரைவாகக் கொண்டுவந்து கடல்மேலே தோன்றி விடியற்காலையில் வருவாயாக. யான் என் நோயின் நடுக் கத்தையும், மாலையாகிய பகையையும் பொறுத்து, உன் னிடத்து, அவன் இனியன், அவனிடத்து நீ துனித்திராதே, என்று நெஞ்சினைப் பாதுகாப்பேன். பின்னர் அவனைக் காண் பேன்' என்று கூறினாள்.

அங்ஙனம் ஞாயிற்றை நோக்கிக் கூறினவுடன் மாலைக் காலமும் திங்களும் வந்தன. அவற்றால் வருத்தம் தாங்க மாட்டாத நெஞ்சு, முன் வளை கழலும்படி என்னைக் கைவிட்டு வருத்திய கள்வனை நினைந்து என்னை ஒளித்துப் போய் அவனிடம் சென்றது. பெருங் கடல் தன்னிறம் தோன்றாமல், கானல் பறவைகளின்றியும், நெய்தல் இதழ்

குவிந்தும் தோன்ற மாலை வந்தது. பின்னர் விளங்கும் நிலாப் பரக்கும் பொழுதில் ஞாயிறு விசும்பையும் நிலத்தையும் திசைகளையும் அவனைத் தேடித் துழாவா நிற்கும். இவ்வாறு என்னை வருத்தியவனும், தான் விரும்பாமல் என்னால் விரும்பப்பட்டவனும், என்னோடே துயிலாது தனியே துயில் கொள்வானோ? கொள்ளானோ?' என்று கூறினாள்.

அங்ஙனங் கூறி, எழுந்த திங்களை நோக்கி, 'நிலவைக் கான்ற திங்களே! தோள் மெலிந்த காலத்தில் இறுக்கிச் செருகலாம் என்று எடுத்துவைத்த வளை தானும் கழலும்படி, அவன் அருள் செய்யாது பிரிந்தான். எமக் கருளாது கைவிட்ட காதலன் செய்த மனக் கலக்கந் தரும் காம நோய்க்கு, நின்னை ஒழிய அயலார் எல்லாரும் ஒரு மருந்தைத் தெளிவித்துக் கூறுர். ஆதலால் ஊரவர்க்கெல்லாம் பெரிய இகழ்ச்சி உண்டாம்படி என்னுயிர் போகா நிற்கும். இதனை நோக்கித் திங்களாகிய தெய்வமே! நீ அவர்பாற் சென்று என் குறை முடிப்பாயாக' என்று கூறினாள்.

திங்கள் மறைந்தது. அதனைக் கைவிட்டு ஊரவரை நோக்கி, 'நம் வருத்தம் உணர்ந்து உதவின ஊரிலுள்ளாரே! அவனே, தம் வருத்தம் தீர்த்தற் குரியானென்று கருதினீர். நீர் இகழ்ந்திருப்பினும் என் கேள்வன் சிறிதும் என்னை இகழ்ந்திரான். துயர்கொண்டேனது காம நோயை நீக்குதற்கு இவ்வூரிலுள்ளார் யாதும் பரிகாரம் தேடார்' என்றாள்.

'செறிந்த இருளுடைய மேகமே! நீ அவன் இந நோயை நீக்கும்படி அவனைத் தருமளவும், வளைகழலப் பண்ணினவனது வருத்தத்தாலே எனக்குச் சந்து தோறும் சந்து தோறும் காமத்தீ மூண்டது. இதன் வெம்மை ஆறுதற்கு நீ கடல் நீரை முகந்து இடைவிடாது என்மீது துளியைப் பெய்தல் வேண்டும்' என்றுங் கூறினாள்.

அங்ஙனங் கூறிக் காம நோயுடைய நெஞ்சிலே அடித்துக்கொண்டு வருந்தி அழுதாள். அழுது, 'நீங்கள் எல்லீரும் தேடிச்சென்றும் என் கணவரைக் காணப் பெறீரோ' வென்று கூறினள். அவட்கு உற்ற வருத்தம் தமது நித்திரையை வாங்கிக்கொண்டு தன்னை நினையாதவர் தன்னிடத்தே வரக்கண்டு அவர் மார்பிடத்து, மாயவன் மார்பிடத்துத் திருச் சேர்ந்தாற்போலே, அவள் சேர, ஞாயிற்றின் முன் இருள் கெட்டதுபோற் கெட்டது. ஆதலால், இவ்வாராய்ந் தெடுத்த ஆபரண முடையவள் பசப்புற்ற வருத்தத்திற் கடவுள் உதவித் தீர்த்தாற்போல் அவரும் உதவித் தீர்த்தார்' என்று கண்டார் வியந்து தம்மிற் கொண்டாடிக் கூறினர்.

## 29

### இதுவும் அது

கொடுங்கோல் அரசன், தன் புகழ் மிகும்படி சேர்ந்த அமைச்சரை முன்னர் நடுக்கமான மொழிகளைக் கூறிப் பின்னர் எல்லையில்லாத துன்பத்தை விளைவித்துக் கொல்லும் இயல்புடையன். காட்டில் அக்கொடுமையிலும் கணவற்கு மகளிர்க் குண்டாகிய காமத்தை நோக்கியும் அவர்மேல் அன்பில்லையா யிருநதது.

அவ்வாறாயின் தலைவன் இராக்காலத்தே வந்து அன்னத் தூவியாற் செய்த மிருதுவான படுக்கையிலே கூடி நெருங்கிய எயிற்றின் நீரை நுகர்ந்து அருள் செய்து நீங்கினான். அதனால் நிறையாது தன்னணிகலன்கள் சிதைந்தவளாயினாள். தனக்கியல்பாகிய நாணையும் நிறையென்னுங் குணத்தையும் தாங்குதல் வேண்டுமென்று அறியாளாயினாள். தன் தோள் மெலிந்து, பெரிய கண் நீர் நிறைகையால்

அந்நீர் தன் குவிந்த முலைமேல் வடியும்படி அவனைத் தேடுந் தன்மையில் மனஞ் சுழலா நின்றாள். 'இனி யாம் இவளி டத்தே சென்று இவள் கூறுவனவற்றைக் கேளாதிருப் பேமோ?' என்று கூறி எம்மிடத்தே வருவீர். வந்து 'எல்லிழாய்! பிரியேன் என்று கூடி யவன் பிரிதலின் நாளை யும் மறந்தாள்' என்று கூறி எனக்கு அன்புற்றீர்போல 'நீ என்னுற்றனை,' என்று வினவுவீர்! என் வருத்தத்தை எல்லீரும் கேட்பீர்களாக. எனக்குச் சிறந்தவன் என் வலி யழியும்படி கைவிட்டான். பெருகிவந்து என்மேல் நிலை பெற்ற காம நோய், உலகத்தைக் கோடை சுடும்படியாகப் பெய்யாமற் போன மேகம் வருத்துவதுபோலும்; வெள்ளம் பெருகி என்னுயிரை வருத்துமாற்றைப்போலும்.

'அவன் அன்பிலனாதலை அறியாதே அவனோடு புணர்ந்து தன் அழகினையும் நாணையும் உள்ளத்தையும் இவள் இழந்தாள் என்று எண்ணியிருந்தீர். அவன் அன்பிலனல் லன். சிவந்த நிறமும் புள்ளியுமுடைய தேருருள் போன்ற ஆண் நண்டு பெண் நண்டுக்குச் செய்யும் சிறப்புகளை யான் நின்னிடத்தே நிகழ்த்தும்படி நினைந்து, அவை நிகழ்த்துகின்ற வற்றையும் பாராய் என்று, இந்த உடம்பினின்று போகின்ற உயிர்க்கு உறுதியாகும்படி கூறினான். அதனால் அவனது அன்புடைமை அறிந்தே யான் அவனோடு சிரித்தேன். அக் காலத்து என்னாணும், என்னலமும், என்னுள்ளமும் புணர்ச் சியால் மிகுதியைப் பெற்றன. அவை, அவன் நீங்கிய அப் பொழுதே அவனிடத்து நின்றுவிட்டன. ஆதலால் நோயும் மிக உறும். அதனைக் கடக்கும் தன்மை உடையேனல்லேன்' என்று கூறினாள்.

என்னைப்போல எல்லைகாணாத காம நோயில் மூழ்காத வன், பெருமை அழியும்படி பிரிந்து நாணம் முதலியவற்றைத் தராத கொடுமையை நாடி அவன் வந்த காலத்தன்றே 'நீ'

இவை பெறுவது என்று கூறுகின்றவர்களே! யான், நிறைந்த கதிருடைய ஞாயிற்றை நோக்கித் திரையைத் தருகின்ற கடல் சூழ்ந்த உலகமெல்லாந் தேடி அவனைக் கொண்டுவா என்றுஞ் சொல்லிவிட்டேன். அதுவேயன்றி யானும் அவன் இவ்விடத்துளன் என்று சொல்லப்படும் இட மெல்லாஞ் சென்று தேடுவேன். இங்ஙனம் தேடுமளவில் உயர்ச்சி தீர்ந்தவன் பின்னை எவ்விடத்தே ஒளித்திருப்பான்? அவனை அகப்படுத்திக்கொண்டு அந்நாணம் முதலியவற்றை வாங்கியே விடுவேன். என்னை வரைந்திருக்கின்றவன் என் னிடத்தினின்று நெஞ்சால் நீங்கான்' என்றுங் கூறினாள்.

இவ்வாறு கூறியபொழுது மாலையும் இரவும் வருகின்ற தனை உணர்ந்தாள். 'மயக்கம் மிக்க மான்பிணைபோல் யான் மயங்கும்படி வெவ்விய காம நோயை உண்டாக்கும் மாலைக் காலமும் வந்தது. அதனோடே, எரியின் கொழுந்துபோற் கொடிய இராக்காலமும் வரும். வருமாயின் அதனிடத்தே யான் பட்ட வருத்தத்தை, என்னைப்போல வருந்தும் பல மகளிருக்குள்ளே சென்று கூறுவேன். பலரையும் துயிலப்பண்ணும் இராக்காலமே! என்னுறையை நினக்குக் குறைப்பட்டுக் கூறின் நீயும் வருந்தித் துயில்கொள்ளாயா வாய். ஆதலால் நினக்குச் சொல்லேன்' என்றும் கூறினாள்.

'திங்கள் வருத்தும் என்றுணர்ந்தாள். திங்கள் பிறை யான பருவத்து உலகத்துள்ளாரால் எதிர்கொள்ளப்படும். அது முதிர்ந்து, யான் துயில்கொள்ளாமல் என்மேல் வந்து வளைத்தது. யானுற்ற நோயைக் கூறி முறைப்படு மிடத்துத் தன் கதிர்கள் ஒளி மழுங்கி நடுங்குவதுபோல அது ஓடி மிகவுஞ் சுழன்று திரியும். ஆதலால் நுமக்கன்றி (கேட்கும்) சான்றோருக்கு, என்னுறையைக் கூறேன்' என்றும் கூறினாள்.

இவ்வாறு கூறிப் பெரிய ஊரிற் றெருவிலே யான் உறு கின்ற வருத்தத்திற்குப் பரிகாரஞ் செய்யாமற் பெரிய உறக்

கங்கொள்ளக் கருதிய சான்றீரே ! ' மழையெல்லாம நின்று என்னிடத்தே பெய்யினும் என் மெய்யிடத்து நின்றெரியும் காம நோய் ஆறுமாறில்லை. இது தணியும்படி உலகிலுள்ள நீரை என்னிடத்தே நிறையும்படி அடைத்துவைத்து என்னுயிரைப் பாதுகாப்பீராக ' என்றுங் கூறினாள்.

' அவன் என் நெஞ்சிடத்தே விடாமலிருப்பினும் அவனாலும் அடங்காது நோய் காந்தும். நெஞ்சில் நிற்கும் அவன் ஒருபொழுது நீங்கில் அதற்கு நெஞ்சு வருந்தும். இவ்வாறு என்னெஞ்சு வருந்துதலைத் தாங்கமாட்டேன். தாங்கமாட்டாது, பல உறுப்புகளையுங் கூட்டி இயங்குவதோர் பொறியாகச் செய்த அழகிய பாவைபோலத் துன்பத்தில் அழுந்தித் தடுமாறும் யாக்கையோடு சிறிது செல்வேன். அதனைற்றணியாத எனது நோய் பிறரால் அழித்தற்கரிய அரணின் தன்மையுடையது. இவ்வரணை அழிக்கத்தக்க ஓர் உபாயம் நாடுவீராக ' என்றும் கூறினாள்.

இவ்வாறு அவள் சொல்லுதலும், கோடைகாலத்தில் வானத்தே மேகத்தின் துளியைப் பெறுதற்குச் சுழன்று திரியும வானம்பாடிக்கு அம்மேகம் பெய்யும். அதுபோலத் தன்னுடைய நல்ல அழகையுடைய மார்பன் வந்து அருள் செய்து முயங்கினான். அதனால் ஆயிழையின் அல்லலாகிய குணம் போயிற்றென்று கண்டார் வியந்து தம்மிற் கூறினார்.

## 30

### இதுவும் அது

' தோழீ ! தெளிந்த கள்ளையும் தேனையும் உண்டவர்களிடத்தில் அறத்தொழில்கள் தோற்றாமல் விடும்படி அறமில்லாத தீய மொழிகள் தோன்றும். அவர்களின் மயக்கம் போல நன்மக்கள் ஆற்றுகின்ற காமம் உலகியல் திறம்பி வேறோர் பகுதியாய் விட்டதோ ? இவள் தன் கணவனில்

லாத தனிமையினால் அழகழிந்தாள். வேலின் நுதிபோலக் கொடுமையினால் கணவனை இழந்தவள்போலத் தெருவிலே புறப்பட்டு வெய்யில் தன்மேற் படும்படி தன் சிறிய அடியிற் சிலம்பு ஒலிப்ப, எங்கும் திரியும் நிலைமையளாயினாள். அதுவு மன்றி, ஊண் சிறிது மிலளாய் மேனி மெலிந்து உயிரினுஞ் சிறந்த நாணுஞ் சிறிது மிலளாய் நகுதலையுஞ் செய்யா நின்றாள். அப்பொழுதே பெண்டன்மையு மிலளாய் அழு வாள். இதனை நெஞ்சால் நினைந்து பார்மின். அங்ஙனம் நினைந்து பார்த்து இவளுற்ற வருத்தத்தை யாம் இவ்வி டத்தே சென்று கேளாமோ? இவ்வாறு கூறிவந்து என்னை மொய்த்துப் பாராதீர். நுமக்கு முன்னே வந்து சூழ்ந்து நின்ற இவரைக் கண்டீரோ? இவர்களே சூழ்ந்து நிற்கத் தக்கவர்கள். எனக்குற்ற கெடுதிபோல இதற்கு முன்பு நீர் கூறவில்லைபோல் இருந்தது. அக்கெடுதி நுமக்கும் ஒரு காலத்துண்டாம். இனி யான் கூறுவதைக் கேட்பீராக. தேறுது நீங்கிய காமத்தின் மிகுந்த பகுதியும் ஒரு காமம் என்று நூல்களிற் கூறுவர். ஆதலால் அதனை உற்று நின்ற என்னை இகழாதீர்கள். இவ்விடத்து வருந்துகின்றவர் யார் என்று பிறர் கேட்டு வருந்தும் நிலைமை யேன்? தாம் விரும் பிய ஆடவர் தம் மதிமயங்கும்படி கைவிட்டவிடத்து அவர் பெற்ற அழகு கெடுகின்ற தன்மை, வண்டு நுகர்ந்த பூ தன் புதிய நலம் சிறிது கெட்ட நிலைமைத்துக் காண்பீர்களாக' என்றாள்.

அவனோடே கலந்த கண், புருவம், தோள், இடை, மழைபோல் நீண்ட கூந்தல் முதலியவற்றின் அழகின் பெரு மையை அறிந்து விலை கொடுக்கத் தக்கவனிடத்தில் அவற் றைக் கொடாது, ஒருவன் கூறிய பொய்யாகிய வலையில் என் நெஞ்சு அகப்பட்டுவிட்டது. இன்னுங் கேளீர்' வாழ்வீராக!

அவன் இயற்கைப் புணர்ச்சிக் காலத்தும் பல சத்தியங்களால் என் மனத்தைத் தேற்றி அணைந்து மூலையிடத்தே முயங்கினான். அங்ஙனம் தேற்றி முயங்கிப் பின் கைவிட்ட கொலைத்தொழில் வல்லவனை யான் முயங்கேனோ? அவன் என்னைக் கண்டானாயினும் அவனால் யான் பெறும் பொலிவை அறியமாட்டீர்' என்று அவரை நோக்கிக் கூறினாள். அவர்கள் யாதும் மறுமொழி கூறாமையின் ஞாயிற்றை நோக்கி, 'ஞாயிறே! போக்கற்கரிய இருளைப் போக்கும் விசும்பிடத்து மதி தோன்றுமாறுபோல நீயும் நீருள்ளே தோன்றுவை. அங்ஙனம் தோன்றியவிடத்து அத்தேரை (மீன் முதலியன) இரையென்று தின்னப்படுதலைப் பரிகரித்துக்கொள். வானிடத்தே இருந்து எவ்விடமுங் காண்கின்ற நீ எனக்கென்ன காரியஞ் செய்வை? ஒன்றுஞ் செய்யாயாயினும், இப்பொழுது எனது கணவர் எங்கிருந்தாராயினும் அவரை எனக்குக் கொண்டுவந்து காட்டுவாய். நீ காட்டாயாயின், யான் நின் கதிர்களைப் பிடித்துக்கொண்டு அவ்விசும்பிலே ஏறி அவனைப் பார்ப்பேன். அதற்கு நீ செய்யுங் காரியம் எனக்கு அருளாத இணையில்லாதவனைத் தேடி யான் பிடித்துக்கொள்ளுமளவும், நீ நின் பல கதிர்களை இவ்விடத்தே நிற்க விட்டுச் சில கதிரோடே படுவாயாக.

உலகத்தார் வேண்டிக்கொள்ளும் காரியங்களை மறாத ஞாயிறே! ஐதமயிருடைய என் முன்கையிற் கிடக்கும் வளையைப் பிடித்துத் தெளிவித்துக் கூடினவன், பால் கறக்கப்படாத காட்டெருமைகள் நிற்கும் காட்டைக் கடந்து போயினானோ? அல்லது என்னோடு அன்புறாது இவ்வூரிடத்தே இருந்தானோ? இரண்டும் அறிகின்றிலேன். அவனைக் கூடப்பெறாது வருந்தா நின்றேன். அதற்குமேல் நீ உண்டாக்கும் மாலைக்காலமும் வந்தது. இனி இந்நோய்

என்னிடத்தினின்று நீங்காது. அவன் இவ்விடத்துளனாயின் அவனை எனக்குக் காட்டுவாய். காட்டினால் கோபியாது மனத்தினாற் கைக்கொள்வேன். ஞாயிறு அவனைக் காட்டாமற் பட்டது ; படுதலின் அதனைக் கைவிட்டு, நடுவு நிலை செய்தலன்றி ஒருபாற் பாராத கூற்றமே! சுறாக் கொடியையுடைய இக்காமன் செய்கின்ற கொடுமைகளையும் நின் ஓலையிடத்தே எழுதி வைத்துக்கொண்டு தண்டிப்பை. அவன் நமக்கு வழிபடு தெய்வமாதலின் அவனைத் தண்டியாமற் றவிர்வாயாக.

காம! நின்னுடைய அம்புகள் ஒருத்தியின் நெஞ்சைத் தன்மேல் அன்பில்லாத ஒருவன்பொருட்டு வருத்துவிக்கும். இவ்வாறு செய்தல் சிலர்க்குமாத்திரமன்றி எல்லார்க்கும் ஆமோ?

இனி வருகின்ற இராக்காலத்து நின் அம்புகள் யான் இறவாது உயிரோடிருக்குமாறு அருளுவனவாக. அவை அவ்வாறு செய்யின், துன்பத்தினால் சிறிது துயில்பெற்றுக் கலங்கிய கண்ணால், எனக்கு வருத்தஞ் செய்தவனைக் கனவிற் கண்டேனாயின் கண்களை விழித்துக் கடிந்து பாராநாமெத்தெனப் பார்ப்பேன். பார்த்தபின் தப்பிப் போகாதபடி தாழ்ந்து கிடக்கும் துகிலைப் பிடித்துக்கொள்வேன். என் மேனி வேறுபாட்டைக் கண்டு இவள் நந்தலைவியோ அல்லளோ என்று ஐயங்கொண்டு என்னை அறியமாட்டாது கைவிடுவனாயின், என் நாண் முதலிய குணங்களையும், மேனி நலத்தினையும் மெய்யாகக் கைக்கொண்டுபோன கள்வனிவனென்று எல்லாருங் கேட்குமபடி விரைவாகக் கூப்பிடுவேன்' என்றாள்.

'ஊரிலுள்ளீர்! எங்களை நோக்கிக் கூறுகின்ற நீ ஞாயிற்றையும் காமனையும் நோக்கிக் கூறியதற்கு அவை என் செய்யுமென என்னைக் கேளன்மின். எப்பொழுதும்

எனக்கு உறங்காமையைச் செய்தவன் தந்த நட்பினால் உண்டான நோய், குடிக்கும் கள்ளை உண்டாரைப்போல் மயங்கும்படி, உயிரைப் போக்குந் தன்மையோடு கூடிவிட்டது. இனி இவ்வுயிரைக் காக்கும் வழி உண்டாயிற் காப்பீராக' என்றுங் கூறினாள்.

வருகின்ற இராக்காலத்துக் கனவில் அவனைக் கண்டு ஆற்றுதற்குக் காமன் கணை செய்கின்ற கொடுமையாலே கண் துயிலாவாயின், ஞாயிறே! 'நீ கனவில் வந்தாயினும் அவனைக் காட்டுவாய். காட்டாயாயின் யான் இவ்வாறு வருத்தமுற்றுப் பனைமடற் குதிரையேறி அவன் என்னிடத்தே வலிய வரும்படியாக, அக்காமன் காலைக் கட்டிக் கொண்டு நின் அருளை எனக்குத் தரவேண்டும்' என்று அவனை இன்னும் இரந்துகொள்வேன் என்றும் கூறினாள்.

இவ்வொண்ணுதல் அன்னையோ! என்று இனைந்து கலங்கி அழுதாள். தோள் மெலிந்து வளை நெகிழ்ந்தாள்; இப்பேதை அழகிய மெல்லிய நடையுடைய அன்னப் பேடு விரைந்து செல்ல, அதனைச் சேர்ந்த அன்னச் சேவலின் கூட்டம்போலத், தன் காதலன் வர அங்கே அவனைக் கண்டு தான் வருந்திய துயரம் முழுதும் மறந்தாள். இத் தையலாள் பின்னர் ஊரிலுள்ளார் நகைத்த நகையையும் போக்கினாள். போன நாணம் தன் மெய்யிடத்தே அழகுண்டாக—மனத்திடத்தே நகையுண்டாக அந் நல் எழில் மார்பனிடத்தே சேர்ந்தாள். இம் மகிழ்ச்சியையும் எல்லீருங் காண்பீராக எனக் கண்டார் வியந்து தம்மிற் கொண்டு கூறினார்.

# 31

அரசன் பண்கோடற்கு ஏவுதலின், வாளான் நேதும் பிரிவின்கண் தலைவன்வரைவிடை வைத்து வேந்தற் குற்றுழிப் பிரிந்தவிடத்து அவள் வருத்தம்மிகுதி கண்டார் கூறுகின்றார்.

ஞாயிறு விளக்கத்தைச்செய்து பழமைபோல உலகத்தை நடத்தும்; பின்னர்க் காமன், தனக்கு யான் பிரிந்தாரை வருத்துதற்கு நீ போவாயாக என்று கூறிய காரியத்தினைத் தலைமேல் ஏற்றுக்கொண்டவனைப்போல அத்தகிரியைச் சேரும். பல உயிர்களும் தங்களாற் கொள்ளும் பயன் கெடும்படி சூரியன் மறையத் தீவினையைப் போக்குகின்றவனுடைய அருள்கொண்ட முகம்போலத் திங்கள் பெரிய கடலிற் றிரைமேற் றோன்றி மயக்கத்தைத் தரும் இருளைப் போக்கும். பொருளில்லாதார் நடத்தும் இல்லறம் போலக் கழியின் மலர்கள் குவியும். இவ்வாறு என்னுயிரின் புறத்தே வந்துவிட்ட மாலாய்! 'நீ அறிவு மயங்கின மாலையாயிருந்தாய்' என்றும் கூறினாள்.

கூடி இன்புற்றவர்களுக்கு உறவாய அவர்கள் கூடும் நிலைமையை முன்பு செய்தாய்; இப்பொழுது ஆடவர், தம்மீது அன்புற்ற மகளிர் அழும்படி கைவிட்டதனால் உண்டான வருத்தத்தாற் கலங்கிய மகளிரை வருத்துதல் உனக்குத் தக்கதன்று.

மகளிரைக் கூடிய கணவருடைய மன வேட்கையை அம்மகளிர்க்குத் துணையாய் நின்று அவர் மனத்தினின்றும் நீங்கா தெரியும் தன்மையை முன்பு மிகவுஞ் செய்தாய். இப்பொழுது அம்மகளிர் நலத்தைக் கைக்கொண்டு பின்பு அதனை அவர்க்குக் கொடாத ஆடவரால், தமது நலம்போன தனிமையால் வருந்தும் மகளிர்க்குத் துணையாகாது வருத்துதல் நினக்குத் தக்கதன்று.

எம்முடைய கணவரை முன்போல மனத்தைச் சுடச் செய்து என்னிடத்திற் றருதலும் செய்திலை. ஆதலால் நீ எனக்குத் துணையல்லை. நீதான் பிரிந்த மகளிர்க்குப் பிரிவாற் றோன்றிய நோயின் வடிவு ஆவை; கூடிய மகளிர்க்கு, அவர் பெறும் இன்பத்தின் தெப்பமாவை. இங்ஙனம் நன்மையாகாத காரியங்களை நீ செய்வதல்லாமல், நன்மையாகச் செய்யும் காரியம் நினைக்கிலையோ?

திருந்திய ஆபரணமும் மடப்பமும் உடையவள் வருந்தியவிடத்தே தூரத்தில் உறைகின்ற காதலர் பகைவரிடத்திற் செய்கின்ற போர்த்தொழில்களைப் போய் முடித்து அவர் மண்ணைக் கைக்கொண்டு, பரந்த இருளை ஞாயிறு போக்கினாற்போல அவள் வருத்தம் நீங்க வந்தார். இஃது என்ன வியப்போ? எனக் கண்டார் கூறினர்.

## 32

வரைவு நீடித்தவிடத்துத் தோழி, தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவு கடாவுகின்றாள்:

நிரைத்த திமில்கள் களிறாகத் திரை யொலிக்கின்ற ஓசை பறையாகக் கூட்டமாகிய அழகிய தானையுடையவர்மேற் படையெடுத்துச் சென்றுலொத்த செலவினையுடைய கடல் சேர்ந்த நிலமுடையவனே! யான் கூறுகின்றதைக் கேள் :

தனக்கு வருத்தம் உற்றவிடத்து உதவினவர்கட்கு ஓர் வருத்தம் வந்தால் உதவாதவன் தானே தானாகத் தேயாநிற்பன். அது, தன்னை நூல்முதலியன கற்பித்த ஆசிரியன் தன்னிடத்து ஒன்றும் இயலாது வருந்தத் தன் கைப்பொருளை அக்கல்விப் பொருட்குக் கைம்மாறாகக் கொடுத்துண்ணாய், தான் கற்ற வித்தையிடத்தே தப்புப்பண்ணிக்

கொண்டவனுடைய கல்விப் பொருள் நாள்தோறும் தேயு மாறு போன்றது. அந்நன்றியின்மை உயிர்போன விடத்தும் அத்தீமையை நுகர்விக்கும்.

தான் புரியும் சத்தியத்தைக் காண்கின்றவன் நம்பும் படி சத்தியஞ் செய்தவன், தான் செய்த சத்தியத்தைமுடிக்காது பொய்த்துவிடுவனாயின், நாள்தோறும் தானாகத் தேயா நிற்பன். அது, தன்னைச் சேர்ந்து வாழுஞ் சுற்றத்தார் நெஞ்சு வருந்தும்படி மறைத்துவைத்துப் பெருக்காதவனுடைய பொருள் நாளுக்கு நாள் தேய்வதுபோலாகும். அவ்வாறு சத்தியஞ் செய்தவன் இறப்பின் அத்தீவினை வாளின் வாய்போற் கூரியதாய்ச் சென்று மறுமைக் கண்ணும் அத்தீவினையை நுகர்விக்கும்.

பெருமா! செய்ந் நன்றிக்கேடு பொய்ச்சத்தியம் என்னும் தீவினையின் தன்மைகள் யாம் கூறிய அத்தன்மையன. இனி நீதான் அத்தன்மையனாய் இருத்தலை நினைந்து பார். இவள் நெஞ்சு அரசன் படை எடுத்துப் பகைவன் மதிலகத்தே இருக்க உள் இருந்தவரின் நெஞ்சு அஞ்சியதுபோல, வரைவு விரைவில் முடியவேண்டுமென்று விரும்பும் நெஞ்சால் மிகவும் வருந்தினாள். இனி அவ்வருத்தம் கடிதில் நீங்கும்படி கடிதில் வரைவாயாக.

## 33

பொருள் வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள் :

நீர் நிலைக்கருகே கொன்றை சரமாகப் பூத்திருக்கும். அக்கொன்றைப் பூவாற் கட்டிய மாலையை இறைவன் சூடியிருப்பான். அவன் திரிபுரத்தை எய்கையினால் வெம்மையுடைய நெருப்பு எழுந்தது. அந்நெருப்பு வானமளாவி

எழுந்து எரியுமாறுபோலச் சூரியன் எவ்விடங்களிலும் பரந்துசுடும். ஒன்றோடு ஒன்று பின்னிய காய்ந்த மூங்கிலினிடையே எழுந்த காட்டுத்தீ விசும்புற ஓங்க வெப்பஞ் செய்யும். இவ்வகையான காட்டிடத்தே விலங்குகள் பலகாலுந் திரிதலால் வழிகள் மயக்கந் தருவனவாயிருக்கும். மலைகள் வழிகளின் எதிரே குறுக்கிட்டுப் போதற்கரியனவாயிருக்கும்.

ஆயிழாய்! அவர் தாம் எண்ணிய காரியங்களைப் பெறுதலாலுள்ள விருப்பத்தாலே அறத்தினைக் கைவிட்டார்; வெவ்விய அருவழியைக் கடந்து விளங்கும் **நீரைச் சடையிலே மறைத்த இறைவனை** ஒத்தபொருளைத் தேடுதற்குப் பிரிந்தார். அவர் அழகினையுடைய நின் மேனி பசந்து நீ இத்தன்மையாக நின்னைக் கைவிடுதலுஞ் செய்வரோ?

அவர் சென்ற நெறியோ வெந்தகரியினையும், பல வழிகளையும், காய்ந்த கற்களையும் உடைய காட்டகத்தது. அவ்விடத்தே செல்வதற்கு அஞ்சாதவராய் அவர், அழகிய ஏற்று ஊர்தியையுடைய இறைவனை ஒத்த பெரிய பொருள் தேடுதற்கு அகன்றார். அவர் ஒலிக்கும் விளங்கும் வளையுடைய நின் அழகை இழந்து நீ இத்தன்மையாக அப்பொருளை நினைத்தலையுஞ் செய்வரோ?

ஞாயிறு கீழ்த்திசையினிடத்து உதயகிரியிலே வந்து தோன்றும்; பின்பு கொதித்துப் பரந்து கோடையைச் செய்யும். இக்காலத்தே செல்லற்கரிய வழியென்று கருதாராய்ப் புதிய திங்களைக் கண்ணியாக முடிந்த இறைவனை ஒத்த ஒள்ளிய பொருட்கு அகன்றார். அவர், பொற்றலைக் கோலம் தாழ்ந்து விளங்கின நின் கூந்தல் அவ்வாறன்றிக் காய்கின்ற அழகை நீ யுடையையாக, அப்பொருள்வேட்கையை மனத்தாற் காணுதலையுஞ் செய்வரோ?

கருமையினையும் நெய்ப்பினையும் உடைய கூந்தலும்

இனிய மொழியினையுமுடையாய்! பெறுதற்கரிய ஆதிரை நாளையுடைய இறைவன் திருமேனியின் அழகைப் பெறும்படி இச்சண்பகம் மலர்ந்த பருவம் பொய்யாது. அதுபோல அவர் கூறிய பருவத்தைப் பொய்யாராய் வருதலை அவர் கூறிய கூற்றால் நீயும் யானும் ஒருங்கு தெளிந்தேம். அங்ஙனந் தெளிந்த பருவங்கழிவதற்கு முன்னே வருவர். எனக் கூறி ஆற்றுவித்தாள்.

## நெய்தற்கலி முற்றும்

---